


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Thursday, the 30th October 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Block Development Office, Arni*

* 701 *Q.*—SRI B. DORAISAMI REDDIAR : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு ஜில்லா, ஆரணி (Block Development) ஆபீஸ் சம்பந்தமாய் அது ஏற்படுத்தப்பட்ட நாள் முதல் வருஷாவாரியில் சிப்பந்திகள் சம்பளம் எவ்வளவு கொடுக்கப்பட்டிருக்கிறது ?

(ஆ) மேற்படி ஆபீஸ் மூலமாய் எந்தெந்த கிராமங்களுக்கு எவ்வளவு தொகை எந்தெந்த வகையில் செலவு செய்யப்பட்டிருக்கிறது ?

(இ) மேற்படி (Development) ஆபீஸர் உபயோகிக்கும் ஜீப்புக்கு எவ்வளவு காலன் பெட்ரோல் வகையரு செலவு செய்யப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM :

(*a*) 1957–58—Rs. 38,167·72 nP.

1958–59—Rs. 16,294·94 nP.

(1st April 1958 to 31st July 1958.)

(*b*) A statement[a] is placed on the table of the House.

(*c*) 1,007$\frac{3}{4}$ gallons of petrol were consumed for the period 22nd April 1957 to 31st July 1958.

SRI M. JAGANNATHAN : In the statement placed on the Table of the House, I find that under the item 'Stage' a sum of Rs. 992·81 has been spent. This is not easily understandable. Will the Hon. Minister kindly explain what this item of expenditure is?

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கு பிரசாரத்திற்காக நாடக அரங்குகள் ஏற்பாடு செய்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். அதற்காக ஏற்பட்ட செலவு என்று நினைக்கிறேன். அதற்கு மேல் பார்த்தாலே, அதிலிருந்து தெரியவரும். " மியூஸிகல் இன்ஸ்ட்ருமெண்டு ", " ஸ்டேஜ் " என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : இந்த ஜீப்புகளை உபயோகப்படுத்துவதில், அவைகளை சொந்த உபயோகத்திற்காக உபயோகப்படுத்துவதினால் அதற்காக பெட்ரோல் செலவழிகிறது என்று புகார்கள் இருக்கின்றன. அப்படியானால் அதை சர்க்கார் தடுக்க முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்தப் புகாருக்கு முழுவதும் ஆதாரம் இல்லை என்று சொல்ல முடியாது. இது அவர்களுடைய நாணயத்தை பொறுத்திருக்கிறது. கூடிய அளவு அதை எந்த அளவுக்கு சரிப்படுத்த முடியுமோ அதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறோம்.

---

[a] Printed as Appendix I on pages 178–179 infra.

[30th October 1958

*Salaries of University teachers*

* 702 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether any grants were received from the Union Government for increasing the salaries of University teachers in 1956–57 and 1957–58;

(*b*) if so, the amount received for each of the two years; and

(*c*) whether the entire amounts were already spent for the purpose?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Do not arise.

SRI M. JAGANNATHAN : Sir, if the information for my question regarding the receipt of any grants from the Union Government for the years 1956–57 and 1957–58, is not available . . .

MR. SPEAKER : The answer si ' No '.

SRI M. JAGANNATHAN : Then I do not put the question.

SRI K. VINAYAKAM : Did not the University Grants Commission recommend better scales of pay for University teachers? What steps have been taken by the State Government to have it implemented at least in the colleges owned by the State Government?

THE HON. SRI C. SUBRAMANIAM : This question relates to 1956–57 and 1957–58 and I said that no grant was received during that period. Now during the current year, the University Grants Commission have come forward with an offer to give 50 per cent for increasing the scales of pay of the University teachers. The matter is under consideration.

SRI M. KALYANASUNDARAM : சர்க்காரால் நடத்தப்படும் கல்லூரிகளில் இருக்கக்கூடிய ஆசியர்களுக்கு மட்டும் சம்பள உயர்வு கொடுப்பதற்கு மத்திய சர்க்கார் நிதி அளித்திருக்கிறார்களா ? இதேமாதிரி மற்ற கல்லூரிகளில் இருக்கும் ஆசிரியர்களுக்கும் சம்பள உயர்வு கொடுப்பதற்கு மத்திய சர்க்கார் நிதி உதவி அளிப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிப்பட்ட காலேஜ்களுக்கு மட்டும்தான் இந்த உதவியை அளிப்பதற்கு யுனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷன் முன் வந்திருக்கிறது. சர்க்கார் காலேஜ்களுக்கு எந்தவிதமான உதவியும் அவர்களிடமிருந்து இன்னும் வரவில்லை. .

*Harijan colonies affected by seepage from the Lower Bhavani channel.*

* 703 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ஈரோடு டெவலப்மெண்டு ஸ்பெஷல் கலெக்டர் 1955-ம் வருஷம் அக்டோபர் மாதம் 6-ம்தேதி எழுதிய கடிதத்திலே லோயர் பவானி சமுதாய நலத் திட்டப் பிரதேசத்திலே லோயர் பவானி வாய்க்காலில் நீர்க் கசிவினால் எந்தெந்த ஹரிஜன சேரிகளில் எத்தனை வீடுகள் பாதிக்கப்பட்டிருப்பதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன ?

30th October 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU: A statement showing the particulars, is placed on the table of the House. In respect of all the cases contained in the statement rehabilitation proposals are in progress.

SRI P. G. MANICKAM : இந்த ஜாபிதாவிலே தெரிவிக்கப் பட்டிருக்கும் ஹரிஜன சேரிகளிலே இன்னும் பல சேரிகளில் வீடுகள் கட்டிக்கொடுக்கப்படவில்லை. இந்த ஜாபிதாவில் தெரிவிக்கப்படாத இன்னும் அநேக சேரிகளும் இருக்கின்றன. கீழ்பாவானி சமுதாய நலத் திட்டம் முடிந்து விட்டது. சேரிகளிலே வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எந்தெந்த இலாக்காக்கள் மூலம் எடுக்கப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வீடுகள் கட்டிக்கொடுப்ப தற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் பூராவும் முடிய வில்லை. இன்னும் வீடுகள் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். என்னென்ன வேலைகள் என்றால்,

'Provision of house-sites to the affected families by rehabilitating them in the natham porambokes or by acquiring patta lands at the cost of the Government and by providing house-sites at the rate of 5 cents for each family, grant of cash subsidy of Rs. 100 for each of the affected families and the grant of palmyra trees subject to a maximum of three trees per family on collection of one-fourth of the seigniorage rates'.

SRI P. G. MANICKAM : இவைகளுக்கு கொடுக்கப்படும் தொகை யானது எந்தெந்த அதிகாரிகள் மூலம் விநியோகிக்கப்படுகின்றன. இந்த விவரங்கள் எங்களுக்குத் தெரியாமல் இருப்பதனால் கனம் அமைச்சர் அவர்களிடமிருந்து அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : முக்கியமாக ரெவின்யூ டிபார்ட்மெண்டு மூலமாகக் கொடுக்கலாம். ஹரிஜன இலாகா மூலமாகக் கொடுக்கலாம். எந்தெந்த டிபார்ட்மெண்டு மூலமாகக் கொடுத்தால் அது சீக்கிரம் சௌகரியமாக பட்டுவாடா செய்யப்படுமோ, அந்த வகையில் செய்யலாம்.

*Ayahs in the Maternity Centres*

* 704 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சமுதாய நல திட்டத்தின் கீழ் உள்ள பிரசவ விடுதிகளில் மருவத்துவச்சிகளுக்கு உதவியாக ஆயாக்கள் உண்டா ?

(ஆ) இல்லையென்றால், ஏன் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : சமுதாய நலத் திட்ட பிர தேசங்களில் உள்ள பிரசவ விடுதிகளில் ஆயாக்கள் இல்லாத காரணத்தினால், நல்ல முறையில் அங்கு காரியங்கள் நடைபெறவில்லை. ஆகவே, இந்த இடங்களில் ஆயாக்களை நியமிப்பதற்கு உடனடியாக ஏற்பாடு செய்யப் படுமா ?

MR. SPEAKER : ஆயாக்கள் இருக்கிறார்கள் என்பதுதான் பதில்.

---

Printed as Appendix II on pages 180–181 *infra.*

[30th October 1958

SRI S. M. ANNAMALAI : பிராஜெக்ட் இம்பிலிமென்டேஷன் கமிட்டி மூலம் ஆரம்பிக்கப்படும் செண்டர்களில் ஆயாக்கள் இல்லை என்று புகார் வந்திருக்கிறது. அப்படியானால் அந்த செண்டர்களில் ஆயாக்கள் போடுவதற்கு சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லை என்றுகூட புகார் இருக்கிறது. ஆயாக்கள் சில இடங்களில்தான் இருக்கலாம்.

MR. SPEAKER : 705, 706 கேள்விகள் ஹரிஜனங்களுக்கு மனைக் கட்டுகள் கொடுக்கும் விஷயம் சம்பந்தமாக இருப்பதால், இரண்டையும் ஒன்றாக எடுத்துக்கொள்ளலாம்.

*House-sites for Harijans*

* 705 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state with reference to the answer given to the starred question No. 260 on 10th March 1958, the further action taken in the matter of providing house-sites to the Harijans of Anumanthai village in the Tindivanam taluk?

THE HON. SRI P. KAKKAN : The Collector of South Arcot is taking steps to get the lay-out sketch approved by the Director of Town-Planning. After approval of the layout house-sites will be assigned to the Harijans as expeditiously as possible.

* 706 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether there is any proposal to provide house-sites for the Harijans of Mudaliar Pettai Colony in the Tindivanam taluk?

THE HON. SRI P. KAKKAN : Yes, Sir.

*Supply of Electricity to Houses*

* 707 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1946-ம் வருஷம் எத்தனை வீடுகளில் மின்சார விளக்கு எரிந்தது ? தற்போது எத்தனை வீடுகளில் மின்சார விளக்கு எரிகிறது ?

THE HON. SRI V. RAMIAH : 61.200 house service connections were served by the Electricity Department and the Licenses during 1946 and there were 134,125 consumers in all, in the area comprising the present Madras State during the year. The number of house service connections as on 1st May 1958 was 397,217 (including Shenkotta taluk).

SRI A. A. RASHEED : Is there any restriction on giving electric connection to houses now?

THE HON. SRI V. RAMAIAH : No.

MR. SPEAKER : I think the Hon. Minister for Finance will answer Question No. 708 on behalf of the Hon. Minister for Local Administration.

30th October 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : I have not received the answer. The question can be taken up to-morrow.

MR. SPEAKER : Yes, it will be taken up to-morrow.

*Working days in Schools and Colleges*

* 709 *Q*.—SRI V. K. KRISHNAMURTHY (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Finance be pltased to state—

(*a*) whether the number of working days in a year has been increased in schools and colleges from the coming academic year;

(*b*) (i) the number of working days for schools;

(ii) for Colleges; and

(*c*) whether any additional syllabus has been prepared and prescribed for the classes?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) In pursuance of one of the recommendations of the White Paper on Education, the working days in secondary schools have been raised to 200 from 180. The University has ordered the increase of working days in colleges to 180 from 160. Elementary schools continue to work for 220 days.

(*c*) A revised syllabus increasing and improving the content has been approved for elementary and secondary schools.

SRI A. VEDARATHNAM : பேஸிக் பள்ளிகளில் உள்ள அசிரியர்கள், மாணவர்கள் வருஷத்தில் 240 நாட்கள் வேலை செய்கிற காலத்தில், அங்கே ஒரு நாளைக்கு 2 மணி நேரம் உடல் உழைப்பு இருக்கிறது. அது இல்லாத இந்தப் பள்ளிகளில் இருப்பவர்களுக்கு அந்த அளவுக்கு "வொர்கிங் டேஸ்" எற்படுத்துவதில் என்ன சிரமம் இருக்கிறது என்பதை தயவுசெய்து விளக்குவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதனையால், எலிமெண்டரி ஸ்கூலில் 220 நாட்களுக்கு வேலை செய்கிறார்கள். 20 நாட்கள்தான் வித்தியாசம்.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், எதாவது புதியதாக பாடதிட்டங்கள் எற்பாடு செய்வதற்கு உத்தேசிக்கப்பட்டிருக்கிறதா, அப்படி இருந்தால் எந்த அளவில் ? அந்த அளவில் காந்தி சுய சரிதத்தை கட்டாய பாடமாக வைக்க எதாவது உத்தேசம் உண்டா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலுள்ள சிலபஸ் இருப்பதை கனம் அங்கத்தினர் படித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI K. VINAYAKAM : Sir, what are the causes that weighed with the Committee on Elementary Education to increase the number of working days in the Colleges and High Schools? Is it a

fact that the number of working days being lesser resulted in the quantum of education the students got becoming lesser and therefore to compensate that, the number of days were increased?

THE HON. SRI C. SUBRAMANIAM : As far as secondary education is concerned, we have increased the content of education and we hope to reach within the 11 years' course, the present Pre-University level. Therefore it was necessary to increase the number of working days. On the whole, I may say that we in India are working for far lesser number of days and therefore we have to restrict the number of holidays.

SRI A. A. RASHEED : Is there any proposal to hold the University and other examinations at the end of the calendar year instead of March?

THE HON. SRI C. SUBRAMANIAM : I have not heard of any such proposal.

*Birth Control Clinics*

* 710 *Q*.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) அதிகமான பிரஜா விருத்தியைத் தடுக்க எத்தனை இடங்களில் சிகிச்சை நிலயங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன ?

(ஆ) அவைகளில் இதுவரை எத்தனை பேர்கள் ரண சிகிச்சை பெற்றுள்ளனர் ?

(இ) மேற்படி ரண சிகிச்சை செய்துகொள்பவர்களுக்கு உபகார சம்பளம் கொடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) A statement [a] is placed on the table of the House.

(*b*) Seven hundred and seventy-seven persons in 1957 and 941 up to the end of June.

(*c*) The scheme for the payment of cash awards is restricted to certain categories of public employees in Madras City, for the present.

SRI M. C. MUTHUKUMARASWAMY : இவ்வித நிலயங்களில் வேலை செய்யும் டாக்டர்கள் முதலில் சிகிச்சை செய்து கொள்ளவேண்டும் என்று எதாவது உத்தாவு அளிக்கப்பட்டிருக்கிறதா, அப்படி சிகிச்சை செய்யப்பட்டிருக்கிறதா? அதோடுகூட பல கால வியாதிகளுக்கு அதன் மூலமாக சிகிச்சை செய்ய ஆலோசனை செய்வதற்கு அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த முறை இப்பொழுது தான் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதைக் கட்டாயப்படுத்துவதற்கு இல்லை. யார் யார் இஷ்டப்படுகிறார்களோ அவர்கள் செய்துகொள்ளலாம்.

SRI K. VINAYAKAM : Sir, is the Hon. Minister aware of the fact that lessons on birth control and family planning are given in Corporation Dispensaries also and that being so, why was that not included in the list placed on the table of the House?

THE HON. SRI M. A. MANICKAVELU : With mere theoretical teaching we are not concerned in this question. It is about the practical steps taken to stop further production with which we are concerned now.

---

[a] Printed as Appendix III on pages 181–183 infra.

30th October 1958]

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த சிகிச்சை முறைக்கு வழி காட்டியாக இருப்பதற்கு சட்டசபை அங்கத்தினர்கள் இதற்கு வழிகாட்டியாக இருக்க கனம் அமைச்சர் அவர்கள் இதற்கு ஏற்பாடு செய்ய முடியுமா ? அப்படிச் செய்து காட்டினால் அது பொது மக்களுக்கு வழி காட்டியாக இருக்கும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் அறிவாரா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது இருக்கிற ஏற்பாடுகளின்படி கனம் அங்கத்தினர்கள் தாராளமாக பிரயோசனப் படுத்திக் கொள்ளலாம்.

SRI S. M. ANNAMALAI : இப்படிப்பட்ட ரண சிகிச்சையை ஆண்கள் செய்துகொள்ளுவதால், அப்படிப்பட்ட சிகிச்சையை பெண்கள் செய்து கொள்ளாமல் இருப்பதாலும், ஆண்கள் இந்த சிகிச்சை செய்துகொண்ட பிறகும் பெண்களுக்குப் பிரசவம் ஏற்படுகிறது. அதன் காரணமாக சில தகராறுகள் ஏற்படுகின்றன. பெரிய தகராறுகள் கூட ஏற்படுகின்றன. இப்படிப்பட்ட கோளாறுகள் எதனால் ஏற்படுகின்றன என்பதில் கவனம் செலுத்த முடியுமா ? அதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் அரசாங்கம் எடுத்துக்கொள்ளுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : இந்தக் கேள்வி எப்படி எழும் என்பது தெரியவில்லை.

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி என்ன நேர்ந்தாலும் அது சிகிச்சையால் நடந்த கோளாறு அல்ல. வேறுவிதமான கோளாறுகளினால் அவைகள் நடைபெறுகின்றன.

*Teachers in the Harijan Welfare Schools*

* 711 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா ஹரிஜன நல பள்ளிகளில் வேலை செய்யும் ஆசிரியர்களின் எண்ணிக்கை என்ன ?

(ஆ) இவர்களில் காயமானவர்கள் (Permanent) எத்தனை பேர் ?

(இ) அவர்களில் வருடாவருடம் உயர்வு சம்பளம் (Increment) பெறுபவர்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) 283.

(*b*) 152.

(*c*) 283.

SRI M. C. MUTHUKUMARASWAMY : மேற்படி பள்ளிகளில் ஏறக்குறைய 107-க்கு அதிகமானவர்கள் வேலை செய்கின்றவர்கள் இருந்தும் கூட இன்னும் அவர்கள் பர்மனெண்ட் செய்யப்படாமல் இருக்கிறார்கள். அதோடு கூட அவர்களுக்கு சரியான காலத்தில் இன்க்கிரிமெண்ட் கிடைக்காமல் சில புகார்களும் இருந்து கொண்டிருக்கின்றன. இந்த இரண்டு புகார்களையும் நீக்குவதற்கு கனம் மந்திரி அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது இருக்கிற ஆசிரியர்களில் 152 பேர்களை பர்மனெண்ட்டாக ஆக்கப்பட்டிருக்கிறது. இன்க்கிரிமெண்ட் விஷயமாக கனம் அங்கத்தினர் எழுத்து மூலமாக எழுதிக் கொடுத்தால் அதைப்பற்றி விசாரிக்கிறேன்.

MR. SPEAKER : கேள்வி எண் 712-ஐக் கேட்ட கனம் அங்கத்தினர் சபையில் இல்லாததால் கேள்வியும் பதிலும் சட்டசபை நடவடிக்கையில் அச்சடிக்கப்படும்.

[30th October 1958

*Sundara Mahalingam Achariar Vidyalayam*

* 713 Q.—SRI S. PAKKIRISAMI PILLAI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the management of the Sundara Mahalingam Achariar Vidyalayam, Bodinayakanur, have applied for recognition of their school; and

(*b*) whether the Department have accorded sanction for recognizing the same?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Yes, Sir.

(*b*) The matter is under correspondence with the Director of Public Instruction.

*Penalty imposed on the peasants in the Lower Bhavani area*

* 714 Q.—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the amount of penalty imposed on the peasents of Lower Bhavani area of Coimbatore district;

(*b*) how the penalty is imposed; and

(*c*) whether the Government have received any objection from the people of the said area for imposing penalty?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) The amount of penalty imposed in Fasli 1357 is Rs. 11,43,479-5-9.

(*b*) Penalties have been levied for the paddy crops raised on lands which were not affected by seepage and for the prohibited crops raised in the ayacut lands. Penalties have also been levied for the following cases of irregular irrigation:—

(i) Raising of non-permitted crops in the ayacut extent with or without reservoir water.

(ii) Utilizing Lower Bhavani Project water for non-permitted extent.

The rules for the levy of water-cess in the Lower Bhavani Project area provide for the levy of penalty in these cases of irregular irrigation.

(*c*) Yes, Sir. The particulars were forwarded to the Board of Revenue and the Collector of Coimbatore for suitable action with reference to the orders issued that in cases of seepage-affected lands, if penalties were already levied, such penalty should be refunded if, on further enquiry, it was established that it was a *bona fide* seepage-affected land.

SRI N. K. PALANISAMI: ஏற்கெனவே லோயர் பவானி பிரதேசத்தை மூன்று தரமாக பிரிவினை செய்யப்பட்டிருக்கிறது. அதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் நடந்துகொண்டு வருகின்றன. ஆகவே அதை நிர்ணயம் செய்யும் வரையில் தண்டத் தீர்வைப் போடாமல் இருப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: கனம் அங்கத்தினர் சொல்வது மகசூல் சம்பந்தமானது. எந்த மாதிரியான தான்யம் பயிர் செய்ய வேண்டும் என்று இருக்கிறது. அதற்கு என்று சில பிரதேசத்தை

30th October 1958]

ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. Seepage இல்லாத இடங்களில் கூட அதிகமான நெல் இப்பொழுது சாகுபடி செய்து வருகிறார்கள். இந்த திட்டப் பிரகாரம் பத்தாயிரம் ஏக்கர் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. இப்பொழுது 20 ஆயிரம் ஏக்கர் என்று தெரியவருகிறது. ஆகவே சீப்பேஜ் இல்லாத இடங்களில் நெல் பயிர் சாகுபடி செய்வதை தடுக்கவேண்டும். இரண்டிற்கும் வித்தியாசம் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இப்படி வைக்கப்பட்டிருக்கிறது.

SRI P. G. MANICKAM : நீர் கசிவு இருக்கிறது என்று கணக்கிடப் பட்டிருக்கும் விஸ்தீரணம் எவ்வளவு ? நீர் கசிவு இல்லை என்று நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிற பூமியின் விஸ்தீரணம் எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : முதலில் நிர்ணயம் செய்தபோது நெல் சாகுபடிக்கு என்று பத்தாயிரம் ஏக்கர் என்று நிர்ணயிக்கப்பட்டது. இப்பொழுது 20 அல்லது 25 ஆயிரம் ஏக்கர் என்று தோன்றுகிறது.

SRI N. K. PALANISAMI : தண்ணீரை யாராவது ஒருவர் தவறுதலாக உபயோகப்படுத்திவிட்டால் அதற்கு பத்து அல்லது பனி ரெண்டு மடங்கு பெனல்டி போடப்படுகிறது. அப்படி யாராவது ஒருவர் தவறுதலாக உபயோகப்படுத்தினால் அந்த வாய்க்காலை உபயோகப்படுத்தக் கூடியவர்கள் அத்தனை பேர்களுக்கும் தண்டத் தீர்வை போடு கிறார்கள். அதனால் ஆயிரக்கணக்கானவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். அப்படிப் போடாமல் இருப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் கேட்பது எனக்கு நன்றாக விளங்கவில்லை. விளங்கும்படியாகக் கேட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI N. MARUDACHALAM : பவானிசாகர் வாய்க்காலில் தண்ணீர் போகும்போது இரு புறங்களிலுமுள்ள புஞ்சை நிலங்களில்—அங்கே புஞ்சை நிலங்கள்தான் இருக்கின்றன—புஞ்சை தான்யம் பயிர் செய்ய முடியவில்லை. அதனால் அங்கே நஞ்சை தானியங்களைத்தான் பயிர் செய்கிறார்கள். அதனால் அவர்கள்பேரில் தண்டத் தீர்வை விதிப்பது நியாயமா ? அவர்கள் மீது விதிக்கப்பட்டிருக்கும் தண்டத் தீர்வையை ரத்து செய்வதற்கு அரசாங்கம் முன் வருமா ? அப்படி ரத்து செய்ய உத்தேசம் உண்டா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது நீர் கசிவு ஏற்பட்டிருக்கிற இடங்களில் நெல் சாகுபடி செய்தால், அங்கே தண்ட தீர்வை விதித்திருந்தால் அதைத் தள்ளி விடுகிறார்கள். நீர் கசிவு இருக்கும் இடங்களில் நெல் சாகுபடி செய்வதற்கு ஆட்சேபணை இல்லை.

SRI N. K. PALANISAMI : லோயர் பவானி ஏரியாவில் யாராவது ஒருவர் தவறுதலாக தண்ணீரை உபயோகப்படுத்தினால் அதற்காக பெனல்டி போடுவதில் எந்த விதமான ஆட்சேபணையும் இல்லை. தனிப்பட்டவர் யாராவது ஒருவர் உபயோகப்படுத்தி அவருக்குப் போட்டால் ஆட்சேபணை இல்லை. அந்த வாய்க்கால் தண்ணீரை உபயோகப்படுத்தக் கூடியவர்கள் எல்லோருக்குமே, ஒருவர் உபயோகப்படுத்தினால் போடுவதானது சரியல்ல. அப்படி எல்லோருக்கும் பெனல்டி போடக்கூடாது. அந்த ஒருவர் மேல் மட்டும்தான் போட வேண்டும் என்ற முறையை அரசாங்கம் கையாளுமா என்பதுதான் என்னுடைய கேள்வி.

THE HON. SRI M. A. MANICKAVELU : எனக்குத் தெரிந்த வரையில் யாராவது தண்ணீரை உபயோகப்படுத்தினால் அவருக்குத்தான் தண்டத் தீர்வை போடக்கூடும்.

[30th October 1958

*Flood Protection Schemes*

* 715 *Q.*—Sri V. K. KRISHNAMURTHY (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) how many schemes costing more than Rs. 10 lakhs each were submitted to Central Water and Power Commission under the Flood Protection Schemes provided under the Second Five-Year Plan;

(*b*) how many costing less than Rs. 10 lakhs each;

(*c*) how many of the above two categories have been approved for loan assistance; and

(*d*) how many have been executed?

The Hon. Sri P. KAKKAN : (*a*) & (*b*) No scheme costing more or less than Rs. 10 lakhs each has been submitted to Central Water and Power Commission.

(*c*) & (*d*) Do not arise.

*Admission to professional and pre-professional courses*

* 716 *Q.*—Sri V. K. KRISHNAMURTHY (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Christians belonging to Scheduled Castes, Most Backward Classes and Backward Classes are treated on a par with students of the said classes in the matter of admission to professional and pre-professional courses;

(*b*) if not, the reasons therefor;

(*c*) whether representations were received in May 1958 not to make any such differentiation in the admission for the year 1958-59; and

(*d*) whether any order has been issued to that effect to the Selection Committee?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) & (*b*) According to the present policy of the Government in respect of admissions to colleges, converted Christians from Scheduled Castes are treated as 'forward' unless the candidate himself is a convert from Scheduled Castes in which case he is treated as "backward". Other Christians are treated as forward, as conversion is followed up with educational and social advancement in many directions.

(*c*) A representation was received; and a reply was given stating that it was not proposed to revise the existing rules in respect of admission.

(*d*) No.

30th October 1958]

*Increase in varam rates*

*717 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம் களம்பூர் விவசாயிகளிடமிருந்து 24–8–1957-ல், வாரம் அதிகம் கோரியும் இன்னும் பல கோரிக்கைகளுடன் அச்சடித்து அறிக்கை வந்ததா ?

(ஆ) அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The representations contain five requests, viz., (1) fixation of fair rent at 25 per cent in the case of wet lands where irrigation is supplemented by baling of water and at 20 per cent in the case of lands irrigated by baling alone; (2) protection to kaiaeruvaramdars and mattuvaramdars; (3) maintenance of a register by the Government showing the names of persons who cultivate the different plots of lands in the village; (4) bringing forward the "third land reform measure"; and (5) fixing minimum wages for agricultural labour.

As regards request (1), fair rents, as laid down in the Fair Rent Act, were fixed after deep consideration, taking into account the conditions prevailing in this State and in the neighbouring State of Andhra. There are no grounds to modify the existing provision. As regards request (2), the Government do not consider that the systems are prevalent, to any large extent, in any district other than Tiruchirappalli. As regards request (3), instructions have already been issued that the particulars regarding the tenants cultivating the lands should be entered in the village's adangal. As regards requests (4) and (5), I may inform the hon. Member that the question regarding land ceiling is still under the consideration of the Government and the question of fixing minimum wages has been deferred for the present.

SRI S. M. ANNAMALAI : நியாய வாரத்தை (பேர் ரெண்டை) உயர்த்தமுடியாது என்று கனம் அமைச்சர் பதில் சொன்னார். ஒரு நாளைக்கு 5 அணா 4 தம்பிடிதான் வருமானம். ரூபாய் 390–12–0 வருமானம். செலவு ரூபாய் 350. மீதி நான்கு மாதங்களுக்கு ரூபாய் 40–12–0 வருமானம் கிடைக்கிறது. வாரம் பயிரிடுபவர்களுக்கு இதெல்லாம் பிரஸ்தாப அறிக்கையிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. நியாய வாரத்தை உயர்த்த வேண்டுமென்று பிரஸ்தாப அறிக்கையில் கோரப் பட்டிருக்கிறது அவ்வாறு வாரத்தை உயர்த்துவதற்கு அரசாங்கம் சீக்கிரம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எல்லாவற்றையும் கவனித்துத்தான் நிலச்சுவான்தாருக்கு 60, சாகுபடியாளருக்கு 40 என்று இருந்த, வார விகிதத்தை நிலச்சுவான்தாருக்கு 40, சாகுபடியாளருக்கு 60 என்று அரசாங்கம். மாற்றியிருக்கிறது.

*District Irrigation Conference, Tirunelveli*

*718 *Q.*—SRI V. SUBBIAH : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) திருநெல்வேலி ஜில்லா நீர்ப்பாசன மகாநாட்டிற்கு கோவில்பட்டி தாலூகாவிலுள்ள இரண்டு உத்தியோகப் பற்றற்ற மெம்பர்களை நீக்கிவிட்டு வேறு தாலூகாவிற்கு பிரதிநிதித்துவம் கொடுப்பதின் காரணம் என்ன ?

(ஆ) மெம்பர்களை நியமிக்கும் அதிகாரம் ஜில்லா அதிகாரிகளுக்கா அல்லது மாகாண சர்க்காருக்கா ?

THE HON. SRI P. KAKKAN : (அ) 1954-ல் திருநெல்வேலி ஜில்லாவில் நீர்ப்பாசன மகாநாட்டிற்கு, கோவில்பட்டி தாலூகாவிலுள்ள இரண்டு உத்தியோகப்பற்றற்ற மெம்பர்கள் உட்பட நியமிக்கப்பட்ட ஆறு மெம்பர்களின் உத்தியோக காலம் 31–3–1957 தேதியுடன் முடிவடைந்து விட்டது. இப்போது திருநெல்வேலி ஜில்லா நீர்ப்பாசன மகாநாட்டிற்கு புதி தாக உத்தியோகப் பற்றற்ற ஆறு மெம்பர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இப்பது மெம்பர்களுடைய உத்தியோக காலம் 31–3–1960 வரை நீடிக்கும். திருநெல்வேலி ஜில்லாவில் ஒன்பது தாலூகாக்கள் இருக்கிறபடியாலும், நீர்ப் பாசன மகாநாட்டிற்கு உத்தியோகப் பற்றற்ற மெம்பர்கள் ஆறே பேர்கள் தான் நியமிக்கப்படவேண்டியதிருப்பதாலும் எல்லா தாலூகாக்களுக்கும் பிரதிநிதித்துவம் கொடுப்பது முடியாத காரியம். ஆகையால் கோவில் பட்டி தாலூகாவிலுள்ள இரண்டு உத்தியோகப் பற்றற்ற மெம்பர்களை நீக்கிவிட்டு வேறு தாலூகாவிற்கு பிரதிநிதித்துவம் கொடுத்திருப்பதாகக் கருத முடியாது.

(ஆ) மாகாண சர்க்காருக்குத்தான்.

SRI V. SUBBIAH : நீர்ப்பாசன வசதிக்கேற்ற ஏரிகளும் கண்மாய்களும், குளங்களும் கொண்ட தாலூகாவைச் சேர்ந்த இரண்டு பிரதிநிதிகளை நீக்கி விட்டு, பாபநாசம், மணிமுத்தாறு போன்ற திட்டங்களால் நீர்ப்பாசன வசதி பெறக்கூடிய தாலூகாக்களைச் சேர்ந்தவர்களை இந்த மகாநாட்டிற்கு உத்தி யோகப் பற்றற்ற மெம்பர்களாக நியமிப்பது முறையா ? ஏற்கெனவே இருந்த பிரதிநிதிகளை நீக்கியது முறையா ? எல்லாத் தாலூகாக் களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டியது ஜனநாயக முறை அல்லவா ?

THE HON. SRI P. KAKKAN : முன்பு பிரதிநிதிகளாக இருந்த கோயில்பட்டியைச் சேர்ந்தவர்கள் அந்தத் தாலூகாவில் மட்டுமே அக்கறை காட்டியிருக்கமாட்டார்கள். அவர்கள் ஜில்லா பூராவிலும் அக்கறை கொண்டிருந்திருப்பார்கள். ஜில்லாவிற்குத்தான் பிரதிநிதிகள் நியமிக்கப்படுகிறார்கள் என்பதை கனம் அங்கத்தினர் தெரிந்துகொள்ள வேண்டும். ஆகவே இப்போது புதிதாக நியமிக்கப்பட்டவர்களும் ஜில்லாவிலுள்ள எல்லா தாலூகாக்களுக்கும்தான் நியமிக்கப்பட்டிருக் கிறார்கள்.

SRI M. JAGANNATHAN : புதிதாக நியமிக்கப்பட்ட உத்தியோகப் பற்றற்ற பிரதிநிதிகள் எந்த அரசியல் கட்சிப் பற்றுடையவர்கள் என்று கனம் அமைச்சர் தெரிவிப்பாரா ?

THE HON. SRI P. KAKKAN : யார் யார் எந்த எந்த அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று நான் சொல்லமுடியாது. ஆனாலும், அம் மகா நாட்டிற்கு நியமிக்கப்பட்டுள்ளவர்களில் ஒரு சிலர் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI V. SUBBIAH : குறிப்பாக திருச்செந்தூர், நாங்குநேரி தாலூ காக்களுக்கு மட்டும்தான் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சங்கரன்கோயில், கோயில்பட்டி தாலூகாக்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுக்கப்படாததற்குக் காரணம் என்ன ? கோயில்பட்டி தாலூகாவைச் சேர்ந்த பிரதிநிதி மகாநாட்டிலிருந்து நீக்கப்பட்டதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : பாரபட்சத்துடன் பிரதிநிதிகள் நியமிக்கப்படவில்லை. " திருச்செந்தூர் தாலூகாவிற்குத்தான் பிரதி நிதித்துவம் கொடுக்கவேண்டும் ; கோயில்பட்டி, நாங்குநேரி தாலூ காக்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுக்கக்கூடாது " என்ற எண்ணத்துடன் அங்கத்தினர்கள் நியமிக்கப்படவில்லை.

SRI R. KRISHNASAMI NAIDU : ஜில்லா நீர்ப்பாசன மகா நாட்டிற்கு சட்ட மன்ற [உறுப்பினர்கள்] அங்கத்தினர்களாகச் செல்கிறார்களா ?

30th October 1958]

**SRI V. K. KOTHANDARAMAN** : அரசியல் கட்சி வேறுபாடு பாராட்டாமல் எல்லாக் கட்சியைச் சேர்ந்தவர்களையும் ஜில்லா நீர்ப்பாசன மகாநாட்டிற்கு பிரதிநிதிகளாக நியமிக்க சர்க்கார் முன்வருவார்களா ? மேலும், மகாநாட்டில் பிரதிநிதிகளை அதிகரித்து எல்லாத் தாலூகாக்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க சர்க்கார் முன்வருவார்களா ?

**THE HON. SRI P. KAKKAN** : விவசாயத்தில் அனுபவமும் ஆர்வமும் நீர்ப்பாசனத்தில் அனுபவமும் உள்ளவர்கள்தான் இந்த மகாநாட்டிற்கு அங்கத்தினர்களாக நியமிக்கப்படுகிறார்கள். அங்கதினர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க முடியாது.

**MR. SPEAKER** : கனம் அங்கத்தினர் ஸ்ரீ. எ. ஆர். சுப்பையா முதலியார் சபைக்கு வருவதற்கு சிறிது நேரம் ஆகும். ஆகவே 719-வது கேள்வியை பிறகு எடுத்துக் கொள்ளலாம். இப்போது 720-வது கேள்வியை எடுத்துக் கொள்வோம்.

*Resignation of doctors*

* 720 *Q*.—**SRI M. R. KANDASWAMI MUDALIYAR** : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை சர்க்கார் வேலையிலிருந்து எத்தனை எம்.பி.பி.எஸ். டாக்டர்கள் சமீபத்தில் ராஜினாமா செய்திருக்கிறார்கள் ?

(ஆ) அப்படியானால், அதன் காரணம் என்ன ?

**THE HON. SRI M. A. MANICKAVELU** : (*a*) Fifty-two during 1957–58.

(*b*) The resignations were mainly due to the following reasons :—

(1) Unwillingness to take up appointment in Primary Health Centres and other rural areas.

(2) To better their prospects in other lines.

(3) To take up higher studies.

(4) For other private domestic reasons.

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR** : டாக்டர்கள் அவர்களுக்கு விருப்பமில்லாத இடங்களுக்கு மாற்றப்படும்போது வேலையை ராஜிநாமா செய்கிறார்கள் என்பது வாஸ்தவமா ? அப்படியானால் இதைத் தவிர்க்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU** : அது ஒரு விசித்திரமான காரணம் என்றுதான் நான் நினைக்கிறேன். பெரும்பாலும், டாக்டர்கள் கிராமப் புறங்களுக்குச் செல்லத் தயங்குகிறார்கள். காரணம், அங்கே அவர்களுக்கு போதிய வசதிகள் இல்லை. அங்கே நல்ல கட்டிட வசதிகளும் மற்றும்பல வசதிகளும் இல்லை. மற்ற பல காரணங்களை நான் முன்பே குறிப்பிட்டேன்.

**SRIMATHI T. N. ANANDANAYAKI** : பல டாக்டர்கள் வேலையை ராஜிநாமா செய்வதற்குக் காரணம், டாக்டர்களாக இருக்கும் அவர்களுடைய மனைவிகள் வேறு இடங்களில் இருக்கும் வகையில் அவர்கள் மாற்றப்படுவதுதான்—அதாவது கணவனையும் மனைவியையும் பிரிக்கும் முறையில் டாக்டர்கள் மாற்றப்படுகிறார்கள்—என்பது கனம் அமைச்சருக்குத் தெரியுமா ? மேலும், மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கமும் சலுகைகள் கொடுத்தாலும் பல டாக்டர்கள் மேல் படிப்பிற்கு அனுப்பப்படுவதில்லை. அவர்கள் ஒரு வருஷமோ இரண்டு வருஷங்களோ மேல்படிப்புப் படிப்பதால் ராஜ்யத்திற்கு நன்மைதான் என்பதை . . .

**MR. SPEAKER** : The hon. Member is not asking a question. She is giving information and this is not correct.

[30th October 1958

SRIMATHI T. N. ANANDANAYAKI : I just wanted to know whether it was a fact.

MR. SPEAKER : The hon. Member has ingeniously overcome my objection.

THE HON. SRI M. A. MANICKAVELU : கணவனையும் மனைவியையும் சேர்த்துவைப்பதுதான் என் ஸ்வபாவம். (சிரிப்பு.) சாதாரணமாக கணவன் மனைவி ஆகிய இருவரும் ஒரே சமயத்தில் ஒரே ஊருக்குத்தான் மாற்றப்படுகிறார்கள்.

SRI C. NATARAJA ODAYAR : கிராமங்களுக்குப் போகாமலிருப்பதற்காக டாக்டர்கள் வேலையை ராஜிநாமா செய்வதால், வைத்தியக் கல்லூரியில் படித்துக் தேர்ச்சி பெற்றவர்கள் கிராமங்களில் மூன்று ஆண்டுகளாவது வேலை பார்க்கவேண்டும் என்ற நிபந்தனைக்கு உட்படுபவர்களுக்கே வைத்தியக் கல்வி அளிப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: அப்படிப்பட்ட நிபந்தனையை விதிக்க முடியாது என்று நான் முன்பே சொல்லியிருக்கிறேன்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : சமுதாய நலத் திட்டங்கள் அமலுக்கு வந்த பிறகு பல எம்.பி.பி.எஸ். டாக்டர்கள் கிராமங்களுக்கு மாற்றப்பட்டிருக்கிறார்கள். கிராமங்களில் அவர்களுக்கு போதிய வசதிகள் இல்லாததால் அவர்களில் பலர் வேலையை ராஜிநாமா செய்வதாகத் தெரிவதால், அவர்களுக்கு போதிய படிகளை (அலவன்ஸ்) அளிக்க சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவர்களுடைய அலவன்ஸைக் கூட ஓரளவுக்கு அதிகரித்தோம். அதாவது, 50 ரூபாயிலிருந்து 100 ரூபாயாக உயர்த்தினோம். அதை இன்னும் உயர்த்த வேண்டுமென்பது தான் சர்க்காரின் உத்தேசம். ஆனால் நிதி நிலைமையை அனுசரித்துத் தான் அதைச் செய்யவேண்டும். கனம் நிதி அமைச்சர் அதற்கு போதிய பணம் கொடுத்தால் அதைச் செய்யலாம்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கிராமங்களில் இருக்கும் பொது மக்கள் போதிய வாழ்க்கை வசதிகள் இல்லாமல் கஷ்டப்படுவதால், கிராமங்களுக்குச் செல்லும் டாக்டர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுப்பதற்கு உகந்த முறையில் சட்டத்தைத் திருத்த அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சட்டத்தைத் திருத்துவதால் மட்டும் பிரச்னை தீர்ந்துவிடாது. பணம் வேண்டும்.

*Housing Schemes for Harijans*

* 721 *Q*.—SRIMATHI A. S. PONNAMMAL : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜனங்களுக்கு வீடு கட்டும் திட்டத்தில் இனமாக ரூபாய் 550 கொடுப்பது போக மீதி ஜனங்கள் தன் வசமிருந்து கொடுக்கும் ரூபாய் 200-ஐ 4 வருட தவணையில் திருப்பிக் கொடுக்கக் கூடிய கடனாகக் கொடுத்து உதவ அரசாங்கம் வழிவகை செய்ய உத்தேசமுண்டா ?

(ஆ) கோவாப்ரேட்டிவ் முறையில் நீண்ட கால கடனில் வீடு கட்டும் திட்டத்தில் 1/5 பாகம் முன் பணம் கட்ட ஹரிஜனங்களுக்கு இனமாகக் கொடுக்க அரசாங்கம் ஏதாவது வழிவகை செய்ய உத்தேச முண்டா ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir. The Government have recently issued orders sanctioning interest-free loans to Harijans, recoverable in monthly instalments of Rs. 2·50 nP. each to equate the cost of labour or materials to be contributed by them under the Harijan Housing Scheme.

(*b*) No, Sir.

30th October 1958]

SRIMATHI A. S. PONNAMMAL : கனம் சபாநாயகர் அவர்களே நாம் ஒரு தாலூகாவுக்கு ஏதோ முப்பது, நாற்பது வீடுகள் வீதம் கொடுத்துக்கொண்டு வருகிறோம். வீடில்லாத ஹரிஜனங்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் கடன் வாங்கி வீடு கட்டவேண்டுமென்று விரும்புகிறார்கள். ஆனால், ஐந்திலொரு பங்கு தொகையை முன் பணமாகக் கட்ட முடியாமல் தவிக்கிறார்கள். ஆகவே, அதை ஆராய்ந்து, தயவுசெய்து ஐந்திலொரு பங்கு தொகையை இனாமாகக் கொடுப்பதற்கு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : கடைசியாகச் சொன்ன பதிலிலே "முடியாது" என்று சொன்னேன். கூட்டுறவு சங்கங்கள் கடன் கொடுக்க முடியுமேயொழிய, இனாமாகக் கொடுக்க வழி கிடையாது.

SRI M. S. SELVARAJAN : தற்போதைய ரூ. 750 திட்டத்திலே இருக்கும் வீடுகளுக்குப் பதிலாக திருநெல்வேலி ஜில்லாவில் கல்வி இலாகாவின் மூலம் ஆசிரியர் வீடுகளுக்கு பரீட்சித்துப் பார்த்திருக்கும் திட்டத்தை ஆராய்வார்களா ? அங்கே ஆயிரம் ரூபாய்ச் செலவிலே ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. அதைப் பின்பற்றக் கூடிய முறையில், ரூ. 560 மத்திய மானியமாகவும் மீதியைக் கடனாகவும் கொடுத்து, ஒரு குடித்தனம் பூரண வசதிகளுடன் வசிக்கக் கூடிய வகையில் பார்ட்சார்த்த திட்டம் ஒன்றை இந்த அரசாங்கம் வகுத்து மத்திய அரசாங்கத்திற்குச் சிபார்சு செய்ய முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கனவே இந்தச் சபையில் சொல்லியிருக்கிறேன். ஆயிரம் ரூபாய் செலவில் வீடு கட்டுவது நல்லது என்பதை மத்திய அரசாங்கத்திலே நடந்த ஹரிஜன நல இலாகா மந்திரிகள் மகாநாட்டில் சொல்லியிருக்கிறோம். இன்னும் மத்திய அரசாங்கம் இதுபற்றி ஒரு முடிவுக்கு வரவில்லை. அவர்களுடைய முடிவு தெரிந்த பிறகு, அதுபற்றி ஏதாவது செய்வதற்கு முடியும்.

SRI M. K. MARIAPPAN : நகரப் பகுதியில் இருக்கும் ஹரிஜனங்களுக்கும் வீடு கட்டிக் கொடுக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : தற்சமயம் இல்லை.

SRI P. G. MANICKAM : ரூ. 550 இனாம் கொடுக்கிற திட்டத்திலே, ஒவ்வொரு ஜில்லாவிலும் இத்தனை வீடுகள் ஹரிஜனங்களுக்குக் கட்டப்படவேண்டுமென்று நிர்ணயம் இருக்கிறது. எத்தனை வீடுகள் ஒரு ஜில்லாவில் கட்டவேண்டுமென்பதை நிர்ணயம் செய்வது கவர்ன்மெண்டாரிடத்தில் இருப்பதால், அந்த வீடுகளுக்கெல்லாம் ரூ. 200 வீதம் மேலும் உதவி கொடுப்பதுபற்றி கவர்ன்மெண்டாரிடம் திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : அந்த வீடுகளுக்கெல்லாம் என்று சொல்ல முடியாது. வசதி அற்றவர்களுக்கு, மிக ஏழையாக இருக்கிறவர்களுக்கு கலெக்டர் மூலமாக கடன் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யலாம்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஹரிஜனங்களுக்கு வீடு கட்டுவதற்கு ஒதுக்கியுள்ள தொகையில் இப்பொழுது கிராமப் பகுதியில் கட்டக்கூடிய வீடுகள் மிகவும் சிறியவையாக இருக்கின்றபடியால், செங்கல், சுண்ணாம்பு முதலியவைகளைக் கொண்டு கட்டுவதற்குப் பதிலாக, மண்ணினாலேயே கட்டக்கூடிய முறையில் மாற்றியமைத்தும், அவைகளைக் கட்டக்கூடிய பொறுப்பை அவரவர்களிடமே விட்டுவிட்டால், பெரிய அளவில் குடும்பம் நடத்த வசதியான முறையில் வீடுகள் கட்டிக் கொள்வார்கள். இதனால் பணமும் விரயம் ஆகாது. ஆகவே, மண் சுவரை எழுப்பச் செய்து விரிவான வீட்டைக் கட்டிக் கொள்ள அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இதுபற்றி அரசாங்கம் பரிசீலனை செய்தது. செங்கல், சுண்ணாம்பில் கட்டும்போதே சிறிது சேதம் ஏற்படுகிறது. மண்ணினால் கட்டினால் இன்னும் அதிகச் சேதம் ஏற்படும் என்ற காரணத்தால், அந்த எண்ணம் கைவிடப்பட்டது.

SRI C. NATARAJA ODAYAR : சமீபத்தில் ஹரிஜனங்களுக்காக கட்டப்பட்ட வீடுகள் குறுகிய அளவாக இருக்கின்றன. ஓடு போட்டுக்கட்டுவதன் காரணத்தால் அதிகச செலவும் ஆகிறது. ஓடு போடுவதற்குப் பதிலாக கூரையாகப் போட்டால், ஒன்றுக்கு இரண்டு மடங்கு வீடுகள் கட்ட முடியும் என்று அரசாங்கத்திற்குக் கூட எழுதப்பட்டிருக்கிறது. ஆகவே, கூரை போட்டுக் கட்டுவதற்கு அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : கூரை போட்டுக் கொள்வதினால் ஹரிஜனங்களுக்கு ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, கூரை போடாமல் ஓடு இருப்பது நல்லது.

SRI M. K. SOMASUNDARAM : வீடு கட்டுவதை கண்டிராக்டரிடம் விடுவதால், கண்டிராக்டர்கள் லாபத்தில் கருத்துடையவர்களாக இருந்து சரியான முறையில் வீடு கட்டப்படாத நிலைமை ஏற்படுகிறது என்ற புகார் வருகிறது. ஆகவே, யார் வீடு வேண்டுமென்று கேட்கிறார்களோ, அவர்களிடத்திலே பணத்தைக் கொடுத்து அவர்கள் மூலமாகவே வீடு கட்டிக் கொள்வதை அனுமதிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது ஜில்லாவிலே கட்டப்படும் வீடுகளெல்லாம், வீட்டில் குடியேறப் போகிறவர்களே கட்டிக் கொள்ளலாம் என்ற முறையில்தான் திட்டம் வகுத்து இன்ஸ்ட்ரக்ஷன் கொடுத்திருக்கிறோம். அவரவர்களே கட்டிக் கொள்ள முடியாதபட்சத்திலே தான் காண்டிராக்டுக்கு விடும்படி சொல்லியிருக்கிறோம்.

*Housing Schemes for Harijans*

* 722 Q.—SRI W. P. A. R. CHANDRASEKARAN AND SRIMATHI A. S. PONNAMMAL : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ஹரிஜனங்களுக்கு வீடு கட்டும் திட்டத்தில் ஒரு வீடு கட்டுவதற்கு ஒதுக்கியுள்ள ரூ. 850-ல் சர்க்கார் மான்யம் ரூ. 750 என்றும், கட்டிக் கொள்பவரின் பங்கு ரூ. 100 என்றும் வைத்து வீடு கட்டும் திட்டத்தை சர்க்கார் மாற்றியமைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

SRIMATHI A. S. PONNAMMAL : கனம் சபாநாயகர் அவர்களே, ரூ. 550 கொடுத்து வீடு கட்டுவதால் மழை காலங்களில் வீடு விழுந்து விடுகிறது. ஹரிஜனங்களுக்குச் செய்யும் நன்மை நல்லமுறையிலே போய்ச் சேரவேண்டுமானால், ரூ. 550 ஐ, ரூ. 750 ஆக உயர்த்தவேண்டும். நிதி அமைச்சர் அவர்களையும் தயவு செய்து கலந்தாலோசித்து, இன்னும் அதிகப்படியாக ரூ. 250 உயர்த்திக்கொடுப்பதற்கு மறுபடியும் பரிசீலனை செய்ய முடியுமா என்பதைக் கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : இது கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய அபிப்பிராயத்தைப் பொறுத்திருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR : பெரிய பெரிய அணைகளையெல்லாம் தற்கால இன்ஜினீர்கள் மண்ணால் கட்டிவிடும்போது, வீடுகளையும் தக்கபடி மண்ணால் கட்டுவதற்கான வழிமுறைகளைக் கண்டுபிடித்து, எல்லா ஹரிஜனங்களுக்கும் நல்வாழ்வு தருவதற்கு அவர்களால் ஏற்பாடு செய்ய முடியாதா ?

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் இதற்கு முந்திய கேள்வியின் மேல் உபகேள்வி கேட்கிறார். நாம் அடுத்த கேள்விக்கு வந்துவிட்டோம். இப்போது 723-ம் எண்ணுள்ள கேள்வியை எடுத்துக்கொள்வோம்.

30th October 1958]

*Headquarters of Chingleput district*

* 723 Q.—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there is any proposal with the Government to locate the district headquarters of the Chingleput district in Kancheepuram instead of at Chingleput town; and

(b) if so, what are the causes for such step?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) & (b) No, Sir. There is no proposal under consideration of the Government to locate the present district headquarters of the Chingleput district in Kancheepuram.

SRI K. VINAYAKAM : Sir, was such a proposal to locate the headquarters at Kancheepuram ever in the offing? Was it at least discussed and dropped subsequently?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir. It was mooted once in 1947 and again in 1954 and it was dropped both times.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know whether there is any proposal to shift the headquartrs from Saidapet to Chingleput?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRIMATHI T. N. ANANDANAYAKI : May I know what the reasons are for dropping such a proposal?

THE HON. SRI M. A. MANICKAVELU : The reason is that the advantages are greater in having it as it is than in making a change.

SRI K. VINAYAKAM : Are the Government aware of the fact that Kancheepuram is largely populated when compared to Chingleput town and it is centrally situated within the district whereas Chingleput is situated at one border of the district? If so, why not the Government reconsider the possibility of shifting the headquarters to Kancheepuram?

THE HON. SRI M. A. MANICKAVELU : I concede the point of population. But as for being centrally situated I cannot agree with the hon. Member. Because, for certain places like Ponneri, Kancheepuram will be situated at one end of the district. Further, Saidapet is well-connected with railways and roads and has got all other facilities.

*Government Hospital at Kulasekaram*

* 724 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) குலசேகரத்திலுள்ள சர்க்கார் ஆஸ்பத்திரியை ஒரு மேஜர் ஆஸ்பத்திரியாக உயர்த்த பணம் ஒதுக்கப்பட்டதா ?

(ஆ) ஆம் என்றால், ஏன் இதுவரை வேலை ஆரம்பிக்கப்படவில்லை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No, Sir.

(b) Does not arise.

[30th October 1958

MR. SPEAKER : The next three questions, viz., Question Nos. 725, 726 and 727 relate to Transport and so they may be taken up together.

*Transport Department Employees*

* 725 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of Sri T. S. Ramaswami Pillai) : Will the Hon. Minister for Electricity be pleased to state—

(*a*) the steps taken by the Government in the matter of the integration of services of the Transport Department;

(*b*) the number of pensionable employees and the number of non-pensionable employes in the Department at present; and

(*c*) whether bonus is being paid to the non-pensionable employees and if so, at what rate?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) Final proposals are awaited from the Honorary Director, Madras State Transport.

(*b*) The particulars are as follows :—

| | Pensionable. | Non-pensionable. |
|---|---|---|
| Madras Branch .. .. | 601 | 3,276 |
| Kanyakumari Branch .. | 389 | 127 |

(*c*) No, Sir.

* 726 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of Sri T. S. Ramaswamy Pillai) : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number and instances of promotions overlooking the seniority in service in the Transport Department given during each of the last three years; and

(*b*) the reasons therefor?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) The particulars are as follows :—

| | Madras Branch. | Kanyakumari Branch. |
|---|---|---|
| 1956 .. .. .. | 15 | .. |
| 1957 .. .. .. | 45 | 1 |
| 1958 .. .. .. | 1 | .. |

(*b*) Promotions overlooking seniority were based on merit and ability.

30th October 1958]

* 727 *Q*.—SRI M. KALYANASUNDARAM (on behalf of Sri T. S. Ramaswamy Pillai) : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number of Transport employees (i) dismissed, (ii) suspended and (iii) left of their own accord from the Transport Department in each of the last three financial years in Madras and in Nagercoil depots;

(*b*) the number of such dismissed workers who appealed to the higher authorities, the Public Service Commission and the Government;

(*c*) the number of instances where their dismissal was cancelled; and

(*d*) the number of instances pending before higher authorities and the Public Service Commission and for how long they are pending?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) The particulars are as as follows :—

| | Dismissed. | Suspended. | Left of their own accord. |
|---|---|---|---|
| (I) Madras Branch— | | | |
| 1955-56 .. .. | 78 | .. | 23 |
| 1956-57 .. .. | 27 | 9 | 43 |
| 1957-58 .. .. | 27 | 21 | 49 |
| (II) Kanyakumari Branch— | | | |
| 1st November 1956 to 31st March 1957. | .. | 1 | 1 |
| 1957-58 .. .. | 3 | 1 | 1 |

(*b*) Fifty-six persons appealed to higher authorities and the Government. According to the rules, no appeal lies to the Public Service Commission.

(*c*) Fifteen.

(*d*) No case is pending before the higher authorities or with the Madras Public Service Commission.

SRI K. VINAYAKAM : : Sir, whereas the recruitment to these services was done by the individual officers concerned till now and whereas they have switched over at present to a different method by constituting an Appointments Committee which has led to all kinds of rumours, will the Government consider the possibility and desirability of entrusting this work to the Public Service Commission even from the very start, i.e., recruitment of cleaners, drivers and conductors and others?

THE HON. SRI V. RAMAIAH : A separate question may be put.

SRI M. S. SELVARAJAN : கன்யாகுமரி ஜில்லா சென்னை ராஜ்யத்தோடு இணைந்தபோது, ட்ரான்ஸ்போர்டு டிபார்ட்மெண்டில் வேலை செய்து கொண்டிருந்த கேரள பகுதியில் நிரந்தரமாக வசிக்கக்கூடிவர்கள் பலர் நமது பகுதிக்கு மாற்றப்பட்டு இந்த டிபார்ட்மெண்டில் இருந்ததன் காரணமாக மனம் அங்கேயும், வேலை இங்கேயும் இருந்து சிரமம் கொடுத்துக் கொண்டிருப்பது வாஸ்தவமா ? அதன் காரணமாகவே இதுபோன்ற டிஸ்மிஸல்களும் சஸ்பெண்ஷன்களும் அவசியமாகின்றனவா ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்கு தனி கேள்வி போடலாம்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : ஸீனியாரிடி ஓவர்லுக் செய்யும்போது அவர்களுடைய மெரிட்டும் எபிலிட்டியும் கணக்கிலெடுத்துக் கொள்ளப்படும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அவர்களுடைய மெரிட், எபிலிட்டியைத் தெரிந்துகொள்ளக்கூடிய அளவுக்கு "ரெட் என்ட்ரி" அவர்களுக்குத் கொடுக்கப்படுகிறதா ? மேலிருக்கும் அதிகாரிகள் கான்பிடென்ஷியல் ரிப்போர்ட்டில் தங்களுக்குக் கீழிருக்கும் சிப்பந்திகளைப்பற்றி எழுதிவைத்திருந்தால், அதைப்பார்த்து ஸீனியாரிடியை ஓவர்லுக் செய்கிறார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : ஸீனியாரிடையை ஓவர்லுக் பண்ணிக் கொடுக்கும் நேரத்தில் சம்பந்தப்பட்ட அதிகாரிக்கு போதுமான ஆதாரங்கள் இருந்து, அவற்றை நல்ல முறையில் பரிசீலனை செய்துதான் ஓவர்லுக் பண்ணிக் கொடுக்கிறோமே ஒழிய, மற்றப்படி விருப்பு வெறுப்பு கிடையாது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : If so, is the person who is overlooked by such officer given any opportunity to go through the records and find out on what grounds he has been overlooked?

THE HON. SRI V. RAMAIAH : He is given an opportunity to appeal to the higher authorities.

SRI S. NAGARAJA MONIGAR : மேல் அந்தஸ்துக்குப் போகலாமென்று ஊழியர்கள் வேலை செய்கிறார்கள். தங்களைப்பற்றி என்ன ரிமார்க்குகள் மேல் உத்தியோகஸ்தர்களால் எழுதப்பட்டு வருகின்றன என்பது அவர்களுக்குத் தெரியுமா ? அல்லது அவர்களுக்கு அறிவிக்கப்படுகிறதா ?

MR. SPEAKER : பதில் இல்லை.

*Block Development Officers.*

*728 Q—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இதுவரை எத்தனை (B.D.O.) வட்டார நலவளர்ச்சி அதிகாரிகள் நியமிக்கப்பட்டுள்ளனர் ?

(ஆ) அவர்களில் ஹரிஜன, பிற்பட்ட வகுப்பினர்களை சேர்ந்தவர்கள் எத்தனை பேர் ?

(இ) ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்களை, வட்டார நலவளர்ச்சி அதிகாரிகளாக நியமிக்க என்ன நடவடிக்கையை அரசாங்கம் மேற்கொண்டுள்ளது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) One hundred and sixty Block Development Officers are now working.

(b) Among them thirty belong to Backward Class and two belong to Scheduled Caste.

30th October 1958]

(c) Recruitment to the post of Block Development Officers is made by transfer from any other class or service or by promotion of Social Education Organizers. Persons belonging to Scheduled Caste already in Government service are being considered for appointment as Block Development Officers by the Selection Committee at the time of recruitment.

MR. SPEAKER : Next question.

(Sri M. C. Muthukumaraswamy rose.)

MR. SPEAKER : I am sorry, I am on No. 729. The hon. Member did not get up when Question No. 728 was answered.

*Rural indebtedness*

* 729 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) whether any action has been taken to find out the extent of rural indebtedness; and

(b) if so, the details thereof?

THE HON. SRI V. RAMAIAH : (a) & (b) A statement [a] is placed on the table of the House.

*Deputy Registrars of Co-operative Societies*

* 730 Q.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) the number of Deputy Registrars of Co-operation (in Deputy Registrar's grade) in the State as on 1st January 1958;

(b) the number of permanent Deputy Registrars of Co-operation;

(c) the respective years when the temporary posts of Deputy Registrars were created; and

(d) whether there is a proposal before the Government to make permanent—

(i) the posts of Deputy Registrars created on the bifurcation of each district which began in 1946; and

(ii) the posts of Credit and Marketing Special Deputy Registrars in each district?

THE HON. SRI V. RAMAIAH : (a) On 1st January 1958, there were 82 posts of Deputy Registrars of Co-operative Societies in the State.

(b) Twenty-three posts of Deputy Registrars are permanent and the rest are temporary.

(c) A statement [b] showing the years when the various temporary posts of Deputy Registrars were created is placed on the table of the House.

---

[a] Printed as Appendix IV on pages 183–184 infra.

[b] Printed as Appendix V on page 184 infra.

[30th October 1958

(*d*) (i) Yes, Sir. The following posts of Deputy Registrars were created on the bifurcation of districts :—

(1) Deputy Registrar, Kumbakonam.
(2) Do. Erode.
(3) Do. Dindigul.
(4) Do. Tuticorin.
(5) Do. Dharmapuri.
(6) Do. Vellore (South).
(7) Do. Tiruvallur.
(8) Do. Tirukoyilur.
(9) Do. Tiruchirappalli (South).
(10) Do Sivaganga.

Among the posts of Deputy Registrar referred to above the following posts have already been made permanent :—

Deputy Registrar, Kumbakonam.
Do. Erode.
Do. Dindigul.
Do. Tuticorin.

The question of making permanent the following posts is under consideration :—

Deputy Registrar, Dharmapuri.
Do. Vellore (South).
Do. Tiruvallur.
Do. Tirukoyilur; and
Do. Tiruchirappalli (South).

The post of Deputy Registrar, Sivaganga, was created in 1955 and the question of making it permanent will be considered after it has been in existence for the minimum period of 5 years.

(ii) The posts of Special Deputy Registrars (Credit and Marketing) in the districts were sanctioned by the Government only in 1956 and as they have not been in existence for a period of 5 years, the question of making them permanent does not arise at present.

SRI S. LAZAR : கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த பதிலி லிருந்து 1946-ம் அண்டு உண்டாக்கப்பட்ட சில போஸ்டுகள் எல்லாம் இன்னும் கன்பர்ம் ஆகாமல் இருப்பதன் காரணத்தினால் அவர்கள் ரிடையர் ஆகிறபோது பலத்த நஷ்டம் ஏற்படும் அல்லவா ? இதை இவ்வளவு தூரம் கால தாமதம் செய்துகொண்டு வருவதற்குக் காரணமென்ன ? இதைத் துரிதப்படுத்துவதற்குச் சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : துரிதப்படுத்தப்பட்டு வருகிறது. இன்னும் ஐந்தாறு போஸ்டுகள் பர்மனென்ட் ஆகும்.

30th October 1958]

*Saraswathi Mahal Library, Tanjore*

* 730-A *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை சரஸ்வதி மஹாலில் பழைய நூல்களைப் பரிசீலனை செய்யும் கமிட்டியில் எத்தனை பேர்கள் இருக்கின்றனர் ?

(ஆ) அவர்களுக்கு கொடுக்கப்படும் மாதவாரி சம்பளமென்ன ?

(இ) இதுவரை எத்தனை நூல்கள் பரிசீலனை செய்யப்பட்டுள்ளன ?

(ஈ) இன்னும் எத்தனை நூல்கள் பரிசீலக்க வேண்டி உள்ளன ?

(உ) அவைகளில் வலங்க (கை) மத்தான் நூலை புதுப்பித்தார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) There is no committee specially intended for the examination of the old manuscripts in the T.M.S.S.M. Library, Tanjore. The library is managed by an administrative committee consisting of five members.

The members of the above committee are not paid any salary or allowance. Their work is entirely honorary.

(*c*) & (*d*) There are 35,000 manuscripts which have been catalogued in 28 volumes after a general examination. But a special and intensive examination is being done in respect of rare and valuable manuscripts as a result of which more than 200 manuscripts have been selected for publication. Out of these, 61 works have so far been edited and published in several languages, from 1949 onwards. It is reported that about 2,000 manuscripts have yet to be examined intensively.

(*e*) There appears to be no manuscript in the library bearing this name of dealing with any subject of this name.

SRI P. U. SHANMUGAM : அங்கே வெளியிடப்படுகிற புஸ்தகங்கள் விலை அதிகமாக இருப்பதாக கூறப்படுகிறது. விலையைக் குறைக்க முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவைகளை அச்சிடுவதற்கு என்ன செலவாகிறதோ அந்த அளவுக்குத்தான் விலை அதிலே போடப்படுகிறது. இன்னும் குறைப்பது என்றால் சர்க்கார் அந்த நஷ்டத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிவரும்.

SRI A. VEDARATHNAM : இந்த சரஸ்வதி மஹாலில் உள்ள மிகப் புராதனச் சுவடிகள் பல ஜீரணமாகக் கூடிய நிலையில் இருக்கின்றன. இவற்றைப் பரிசீலனை செய்து அவைகளுக்குக் காப்பி எடுக்கவாவது அல்லது அவற்றை பிரசுரிக்காவாவது அரசாங்கம் உத்தரவிடுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்காகத்தான் இந்தக் கமிட்டி போடப்பட்டிருக்கிறது. இப்போது இதைப் போன்று இருக்கக்கூடிய பழைய எட்டுச்சுவடிகளை காப்பி எடுப்பதற்கு முடியுமா என்பதைப்பற்றி பரிசீலனை செய்யவேண்டும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : இந்த வலங்கமத்தான் என்ற நூல் இந்த நாட்டில் உள்ள ஆதித் திராவிட மக்களின் கலை, நாகரிகம் முதலியவற்றைக் குறிப்பிடுகின்றது. இது அங்கு இல்லாமலே போய்விட்டதா ? இதைப்பற்றி விவரத்தை அறிந்து அமைச்சர் அவர்கள் சொல்வார்களா என்று அறிய விருக்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தப் பட்டியலைப் பார்த்த வரையில் கனம் அங்கத்தினர் சொல்லுகிற புத்தகத்தின் பெயர் இல்லை. தவறான பெயரைக் கொடுத்திருக்கிறார்களோ தெரியவில்லை.

SRIMATHI T. N. ANANDANAYAKI : சரஸ்வதி மஹாலில் இருந்து சில விலை உயர்ந்த மானஸ்க்ரிப்ட்டுகளை—சுதந்திரத்துக்கு முன்பே—அந்நிய நாட்டார் வாங்கி விட்டார்கள் என்ற பிரஸ்தாபம் இருந்து வருகிறதே. அது அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்திருக்கிறதா ? அப்படி வாங்கி இருப்பார்கள் என்ற எண்ணம் இருந்தால் அவைகளைத் திரும்பப் பெற முயற்சி எடுத்திருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த மாதிரி எந்தவிதமான தகவலும் இல்லை. நம் கையில் இருப்பதைச் சரியானபடி உபயோகத்தாலே நல்ல பயன் ஏற்படும்.

*Manufacture of drugs*

* 730-B *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சென்னை ராஜ்யத்திலே மத்திய அரசாங்கத்தாலும், ராஜ்ய அரசாங்கத்தாலும் எந்தெந்த இடங்களிலே என்னென்ன விதமான மருந்துகள் உற்பத்தி செய்யப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement [a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : நாட்டு வைத்திய முறையில் நாட்டு வைத்தியர்களால் செய்யப்படும் அநேக மருந்துகள் மிகக் பயன்கொடுக்கின்றன. அப்படிப்பட்ட மருந்துகளை உற்பத்தி செய்ய அரசாங்கத்தாரால் பரிசலனை நடத்தப்பட்டு வருகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நடைமுறையில் மருந்து செய்வதற்கு இப்போது எல்லா முயற்சிகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

SRI A. A. RASHEED : Is there any proposal to establish a factory for the manufacture of antibiotics in our State?

THE HON. SRI M. A. MANICKAVELU : No definite proposal now, Sir.

*Adivasis.*

* 730-C *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா கோடியக்காடு என்னும் கிராமத்திலிருக்கும் ஆதிவாசிகளுக்கு அரசாங்கம் ஏதேனும் உதவி செய்து வருகிறதா ?

(ஆ) அப்படியானால், அதன் விவரங்கள் யாவை ?

(இ) இங்கே ஆதிவாசிகள் குடும்பங்கள் எத்தனை இருக்கின்றன ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes Sir.

(*b*) A sum of Rs. 748–6–0 was spent during 1956–57 for the distribution of clothes to Seenthi Ambalagars who are Adivasis in the Kodaikkadu village.

(*c*) Forty-nine families.

SRI A. VEDARATHNAM : இந்த ஆதிவாசி குழந்தைகளுக்கு காந்தி நினைவு நிதியிலிருந்து ஒரு ஹாஸ்டல் ஏற்படுத்தி அந்தப் பிள்ளைகளுக்கு வசதி செய்து வந்தார்கள். இந்த ஆண்டு உதவியை நிறுத்திவிடப்போவதால் அரசாங்கம் அதை எடுத்துக்கொண்டு அவர்களுக்கு உதவி செய்ய முன்வருமா ?

---

[a] Printed as Appendix VI on pages 185–189 infra

30th October 1958]

THE HON. SRI P. KAKKAN : அரசாங்கத்தினால் ஏற்படுத்தப் படும் ஹாஸ்டல்கள் ஹைஸ்கூல் உள்ள இடங்களிலேதான் இருக்கின்றன. இந்த விஷயத்தைப் பரிசிலனை செய்யச் சொல்லுகிறேன்.

*Harijan Welfare School*

* 730-D Q.—SRI P. U. SHANMUGAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜன நல இலாகா புதிய பாடசாலைகள் இனி திறப்பதில்லை என்று முடிவெடுத்திருப்பது உண்மையா ?

(ஆ) காரணம் யாது ?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) With a view to avoid segregation of Harijan boys and girls in separate schools and to bring together both Harijan and non-Harijan boys in common school, the Government decided not to open separate Harijan Welfare schools.

SRI P. U. SHANMUGAM : புதிய பாடசாலை திறக்கப்படா விட்டாலும் இருக்கிற பாடசாலை மூடப்படாமல் இருக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : இருக்கிற பாடசாலைகளைகூட இன்றைக்கு ஒரு சில விசேஷ காரணங்களினால் நிறுத்தும்படி நேர்ந்தாலும் நேரும்.

*Inclusion of the term "Harijan," in the list of Scheduled Castes.*

* 730-E Q.—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) "ஹரிஜன்" என்ற பெயர் சட்டரீதியாக கவர்மெண்டால் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறதா ?

(ஆ) "ஹரிஜன்" என்ற பெயரை ஷெடியூல் வகுப்பினர்களுடைய ஜாபிதாவில் சேர்ப்பதுபற்றி அரசாங்கம் பரிசிலனை செய்து வருகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : (a) & (b) No, Sir.

SRI A. GOVINDASAMY : அந்த லிஸ்டில் ஹரிஜன் என்று எழுதினால் ஒப்புக்கொள்வதில்லை. ஷெட்யூல் வகுப்பு இன்ன பிரிவு என்று எழுதவேண்டியிருக்கிறது. ஹரிஜனன் என்று காந்திஜீ வைத்த பெயர் எழுதினாலே போதும் என்று சர்க்கார் உத்திரவிடுவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் சொல்லும் விஷயம் அரசாங்கத்திற்கு தெரியும். இருந்தாலும் அரசியல் அமைப்பில் இப்படி அமைந்துவிட்டதனால் இதை மாற்றுவதற்கு முடியவில்லை.

SRI P. G. MANICKAM : ஹரிஜனன் என்ற பெயரில் தாழ்த்தப் பட்டவர்கள் அத்தனை பேரும் வந்துவிடுகிறார்கள். ஷெட்யூல் காஸ்ட் என்பது ஆங்கிலப் பெயர். ஆகவே ஹரிஜனன் என்று போட்டால் போதும் என்று மத்திய சர்க்காரைக் கலந்துகொண்டு உத்தரவு பிறப்பிப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நான் முன்பே சொன்னேன். இந்தமாதிரி மாற்றம் செய்யவேண்டுமென்றால் அரசியல் சட்டம் திருத்தப்படவேண்டும். ஆகவே இப்போது இருக்கக்கூடிய நிலைமையில் ஒன்றும் செய்வதிற்கில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக்கொள் கிறேன்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஷெட்யூல் என்பதற்கு அனுபந்தசாதி என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது ஆங்கில வார்த்தை. இது இல்லையென்ற காரணத்தினால் பலவிதமான தகராறுகள் ஏற்படுகின்றன. ஆகையால் ஹரிஜனன் என்ற பெயரை ஒப்புக்கொள்ள சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குச் சிபாரிசு செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் சொல்கிற யோசனை சரி. நானே அரசியல் நிர்ணய சபையின் பிரதிநிதியாக இருந்தேன். அப்போது ஹரிஜனன் என்ற பெயரைப் போடவேண்டும் என்று சொல்லிப் பார்த்தேன். எல்லோரும் பொதுவாகப் போட்டுவிட்டார்கள். அது அப்படியே இருக்கிறது. நாம் ஒன்றும் செய்வதற்கில்லை.

SRI K. VINAYAKAM : எந்த எந்த சாதிகள் எந்த எந்தப் பிரிவுகளில் போடவேண்டும் என்கிற உரிமை மாகாண சர்க்கார் களுக்குத்தான் இருக்கிறது. மத்திய அரசாங்கத்திற்கு இல்லை. ஹரிஜனன் என்ற சாதி ஆதித்திராவிடர்கள் அத்தனை பேருக்கும் பொதுவாக நம் ராஜ்யத்தில் இருக்கிறது. ஆகவே இதை ஹரிஜனன் என்று போட்டால் போதும் என்று செய்வதற்கு என்ன கஷ்டம் இருக்கிறது என்று கேட்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : நான் முன்பே சொன்னேன். அரசியல் அமைப்பில் இருப்பதை மாற்றுவதற்கில்லை. இதற்கு மாகாண சர்க்கார் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : I would like to explain the position Sir. தீண்டப்படாதவர்கள் எல்லோருக்கும் ஹரிஜனங்கள்—கடவுளின் மக்கள்—என்ற பெயர் காந்திஜீ வைத்தார்கள். ஹரிஜனங்கள் என்று தனிப்பட்ட சலுகைக் கொடுக்கப்படுகிறது. ஆகையால் அவர்கள் தீண்டப்படாதவர்களில் எந்தப் பகுதியைச் சார்ந்தவர்கள் என்று தெளிவாகத் தெரிந்த பிறகே சலுகை கொடுக்கும்படி இருக்கிறது. அது தெரிந்த பிறகுதான் நிர்ணயிக்க முடியும். அதன் காரணமாக இந்தச் சங்கடம் ஏற்படுகின்றது. ஆகவே ஹரிஜனங்கள் என்றாலும் தீண்டப்படாதவர்களில் எந்தப் பகுதியைச் சார்ந்தவர்கள் என்று குறிப்பிடுவதில் அனுகூலம் இருக்கிறது என்பதனால் அப்படி வைக்கப்பட்டிருக்கிறது என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

*Educational concessions to Viswakarama students*

* 719 *Q.*—SRI A. R. SUBBIAH MUDALIYAR : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கன்னியாகுமரி ஜில்லாவில் கம்மாள (விஸ்வகர்மா வகுப்பு) மாணவர்களுக்கு 1957–58-ம் வருஷத்தில் அளித்த கல்வி சலுகையை 1958–59 வருஷத்தில் நிறுத்தப்பட்டதற்கு காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The fee concessions granted to students belonging to Kammala (Viswakarma) Community in Kanyakumari district during 1957–58 have not been discontinued.

SRI A. R. SUBBIAH MUDALIYAR : விஸ்வகர்மா வகுப்பு குழந்தைகளுக்குக் கொடுக்கப்பட்டு வந்த சலுகை 1958-ம் ஆண்டு ஜூலை மாதம் முதல் நிறுத்தப்பட்டிருக்கிறது என்று முதல் மந்திரி அவர்களிடம் மகஜர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் சலுகை மேற்கொண்டும் கொடுக்கப்படவேண்டுமென்று கோரப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, the report I have received from the Director of Public Instruction is that the students belonging to the Kammala community (Viswakarma community)

30th October 1958]

in the Kanyakumari district have been included in the list of Backward Classes of that district and that the fee concessions in force in the transferred areas on 1st November 1956 are being continued.

MR. SPEAKER : We will now take up question 708. The Hon. Minister is now ready with the answer.

*Nylon nets*

* 708 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த மாகாணத்தில் மீனவர்களுக்கு இதுவரை எத்தனை "நைலான்" வலைகள் வினியோகப்பட்டிருக்கின்றன—ஜில்லாவாரியாக ?

(ஆ) இந்த நைலான் வலைகள் எந்த முறையில் மீனவர்களுக்கு வினியோகிக்கப்படுகிறது ?

(இ) இந்த வலைகள் எங்கிருந்து தருவிக்கப்பட்டிருக்கின்றன ? இதன் விலை என்ன ?

(ஈ) இந்த வலைகளை நம் நாட்டிலேயே தயாரிக்க ஏதேனும் முயற்சி எடுக்கப்படுகிறதா ?

(உ) அப்படியானால் அதன் விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : A reply[a] is placed on the table.

(The hon. Member Sri Vedarathnam was looking up his papers.)

MR. SPEAKER : I am sorry I am taking the hon. Member by surprise. He should have a copy of the questions put down for to-day on the table. If he is not putting any supplementary, I will go to the next question.

SRI A. VEDARATHNAM : கடற்கரை ஓரங்களில் இருக்கிற மீனவர்களுக்கு எல்லாம் இந்த நைலான் வலை கொடுக்கும்படியாகச் செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : If the hon. Member looks up the answer placed on the table, he will find that these nets are supplied by the department to fishermen for their bona fide use in the following order of preference, namely, (1) Marine Fishermen Co-operative Societies and individuals or groups of fishermen to whom mechanized boats are supplied, (2) Fishermen Co-operative Societies to whom mechanized boats are not supplied, but who require the nets, (3) Individual marine fishermen or group of fishermen to whom mechanized boats could not be supplied and (4) Inland fishermen. Therefore the scheme provides for the supply of nets to all of them but a priority is fixed and supply is made according to the availabilty of these nets.

SRI A. GOVINDASAMY : இந்த நைலான் வலை கொடுப்பதில் கன்னியாக்குமரி மாவட்டத்திற்கு மட்டும் 89 கொடுக்கப்பட்டிருக்கிறது. இதர ராமநாதபுரம், தென்னாற்காடு, செங்கல்பட்டு முதலிய மாவட்டங்களுக்குக் குறைவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறதே. (பின்னால் இருந்து ஒரு குரல்) ஸ்ரீ விநாயகம் வேண்டுமானால் கடற்கரை இல்லாத ஜில்லாக்களுக்கு ஏன் கொடுக்கப்படவில்லை என்று கேட்கலாம். நான் கடற்கரை ஜில்லாக்களில் உள்ள மீனவர்களுக்கு ஏன் சமமாக விநியோகிக்கப்படவில்லை என்று கேட்கிறேன்.

---

[a] Printed as Appendix VII on page 190 infra.

[30th October 1958

SRI K. VINAYAKAM : On a point of order, Sir. The deliberations in this House must be carried on in a smooth manner and the member who puts a question should not insinuate even without the knowledge of the other member who enjoys equal privilege in the House. What was the necessity for the hon. Member who put the question to drag my name even though I was keeping silent.

MR. SPEAKER : I uphold the point of order. The hon. Member Sri Govindaswamy should not refer to the hon. Member Sri Vinayakam when putting a supplementary question.

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைத்தான் நான் முதலில் படித்தேன். Marine Fisherman Co-operative Societies and individuals or groups of fishermen to whom mechanised boats are supplied உள்ள இடங்களுக்கு முதலில் கொடுக்கப்படுகிறது. கன்னியாகுமரியில் இந்தப் படகுகள் அதிகமாக இருப்பதால் அதிகமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

*Nariyambattu panchayat*

* 712 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) whether it is a fact that not a single person has filed his nomination on 29th August 1958, for the panchayat board election of Nariyambattu village, Gudiyatham taluk, North Arcot district;

(b) whether the Government have received any protest against the deletion of 300 voters from the electoral list; and

(c) if so, the action taken thereon to include the deleted names?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) A report since received by the Government shows that no nominations were filed for election to any of the seats of the Nariyambattu Panchayat, Gudiyatham taluk, North Arcot on 29th August 1958.

(b) & (c) Certain representations have been received in this regard and the matter is under consideration.

SRI K. VINAYAKAM : What is the present position of the panchayat board since no nominations were received and no election took place?

THE HON. SRI C. SUBRAMANIAM : It will continue without a panchayat board.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

II.—NON-OFFICIAL BUSINESS.

*A—Bills.*

THE MADRAS AGRICULTURISTS RELIEF (AMENDMENT) BILL, 1958.

MR. SPEAKER : To-day is a non-official day. First we shall take up Bills. Hon. Members who have given notice of Bills will have to move for leave to introduce them. The first Bill stands in the name of Sri P. S. K. Lakshmipathi Raj. As the hon. Member is absent, he is supposed to have withdrawn his Bill.

10 a.m.

30th October 1958]

SRI S. B. ADITYAN : Mr. Speaker, Sir, I beg leave to introduce the Madras Agriculturists Relief (Amendment) Bill, 1958.

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Agriculturists Relief (Amendment) Bill, 1958.'

The motion was put and carried.

SRI S. B. ADITYAN : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced. Now we shall take up the Madras Dowry Prohibition Bill.

SRI M. KALYANASUNDARAM : Sir, we shall continue the discussion on the resolutions pending before the House.

MR. SPEAKER : Somebody will have to move a motion to that effect.

SRI M. KALYANASUNDARAM : The Hon. the Leader of the House will move the motion.

## III.—GOVERNMENT MOTION.

### CHANGE IN THE ORDER OF BUSINESS.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, under Rule 21 (3) of the Assembly Rules, I move—

'That items (1) and (2) under item 'B-Resolutions' on the agenda be taken up now'.

The motion was put and carried.



## II.—NON-OFFICIAL BUSINESS—*cont.*

### *B.—Resolutions.*

(1) APPOINTMENT OF COMMITTEE TO ENQUIRE AND MAKE RECOMMENDATIONS REGARDING SERVICE CONDITIONS AND SCALES OF PAY OF ALL CATEGORIES OF EMPLOYEES IN THE STATE GOVERNMENT—*cont.*

MR. SPEAKER : There are two resolutions and the discussion on both of them is not over. The first resolution in the name of Sri M. Kalyanasundaram reads as follows :—

'This House recommends to the Government to appoint a Committee to enquire and make suitable recommendations regarding service conditions and scales of pay and other allowances of all categories of employees of State Government with a view to ensure efficient administration.'

Twelve hon. Members took part in the discussion on the resolution. The Leader of the House was replying to the discussion on the last non-official day, and he has not finished his reply. He will continue it now.

THE HON. SRI C. SUBRAMANIAM : சபாநாயகர் அவர்களே, சென்ற தடவை இந்தத் தீர்மானத்தைக் குறித்துப் பேசும்போது சில விஷயங்களைப் பற்றி மட்டுந்தான் அன்று குறிப்பிட முடிந்தது.

(Deputy Speaker in the Chair.)

இந்தத் தீர்மானம், நிர்வாகம் நல்லமுறையில் நடைபெறுவதற்கும், அரசாங்க அதிகாரிகளின் நிலைமை பேண்முறைகளை பரிசீலனை செய்து பார்ப்பதற்காகவும் ஒரு கமிட்டி நியமிக்க வேண்டுமென்ற அடிப்படையில் பிரேரேபிக்கப்பட்டிருக்கிறது ஆனால் அதன்மேல் நடந்த விவாதத்தில் முக்கியமாக எல்லோராலும் வலியுறுத்தப்பட்டது. சம்பள உயர்வைப் பற்றித்தான். இப்பொழுது இருக்கக்கூடிய நிலையில், அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு இப்பொழுதுள்ளதை விட ஊதியம் அதிகமாக கொடுக்க வேண்டுமென்று சொன்னார்கள். அவர்களுக்கு இருக்கக் கூடிய குறைகளை நீக்க அரசாங்கம் முன் வரவேண்டுமென்ற முறையில் வலியுறுத்தி பல அங்கத்தினர்கள் பேசினார்கள். இது இந்த ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் தனிப்பட்ட முறையில் இருக்கக்கூடிய பிரச்னை அல்ல என்றும், அகில இந்திய முறையில் இந்தப் பிரச்னை தீர்க்கப்பட வேண்டியதாக யிருக்கிறது என்றும் நான் குறிப்பிட்டேன். அவ்வாறு குறிப்பிட்டபோது, எல்லா ராஜ்யங்களில் சம்பள உயர்வு கொடுப்பது பற்றி அகில இந்திய ரீதியில் முடிவு ஏற்பட்டு அந்த அடிப்படையில் கொடுக்கவேண்டுமென்பதைப் பற்றி மட்டும் குறிப்பிட்டு நான் சொல்லவில்லை. சம்பள உயர்வு பிரச்னை ஒரு அடிப்படையான தேசீய பிரச்னையாக அமைந்திருக்கிறது என்பதைத்தான் நான் வலியுறுத்த விரும்புகிறேன். இன்று அதிகாரிகள் பெறும் சம்பளம், அலவன்ஸ் ஆகியவைகளை கணக்கிட்டுப் பார்க்கும்போது, முன்பு அவர்கள் வாங்கிக் கொண்டிருப்பதை விட இப்பொழுது அதிகமாகத்தான் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும் இதை விட குறைவாக ஊதியம் பெற்ற காலத்தில் என்னென்ன சௌகரியங்களை அவர்கள் பெற முடிந்ததோ அந்த சௌகரியங்களை இப்பொழுதுள்ள ஊதியத்தை வைத்துக் கொண்டு பெற முடியவில்லை. அதில் ஒரு சிறிய பகுதி கூட பெற முடியாத நிலைதான் இருக்கிறது. அதற்கு காரணம் என்னவென்று யோசித்துப் பார்க்கவேண்டும். அதற்கு முக்கியமான காரணம் பொருள்களின் விலை உயர்வாகும். ஆகவே, இன்றைக்கு ஒரு நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது என்றால், அரசாங்க அதிகாரிகளுக்கு ஒரு நெருக்கடி ஏற்பட்டிருக்கிறதென்றால் அதற்கு முக்கியமான காரணம் என்ன? முன்பிருந்ததை விட இப்பொழுது சம்பளம் அதிகமாக இருந்தும் கூட, இப்பொழுது கிடைக்கக்கூடிய ஊதியத்தை வைத்துக்கொண்டு முன்பு அவர்கள் பெற்று வந்த பலவிதமான சௌகரியங்களை இன்று பெற முடியாமல் இருக்கிறார்கள். இந்நிலை சர்க்கார் அதிகாரிகளுக்கு மட்டுமல்ல. நிரந்தரமான ஒரு சம்பளம் வாங்கக் கூடிய எல்லோருக்கும் ஏற்பட்டிருக்கக் கூடிய பொதுவான பிரச்னை, இது. ஆகையினால் இன்று நாம் வெறும் சம்பள உயர்வை மட்டும் கவனித்து இந்தக் காரியத்தை செய்து கொண்டு போவோமானால் இந்தப் பிரச்னையை எந்தக் காலத்திலும் தீர்க்க முடியாது. ஆகவே இன்று நாம் யோசித்துப் பார்க்க வேண்டியது என்னவென்றால், விலைகள் உயர்ந்து கொண்டே போக வேண்டும், விலைகள் உயர உயர சம்பளத்தையும் உயர்த்திக்கொண்டே போகவேண்டுமென்ற நிலையில் இப்பிரச்னையை அணுகினால் என்றைக்குமே இந்தப் பிரச்சனைக்கு ஒரு முடிவே காண முடியாது.

(Mr. Speaker in the Chair.)

விலையை ஊதியம் துரத்தும், ஊதியத்தை மறுபடியும் விலை துரத்தும், இப்படி ஒன்றை ஒன்று துரத்திக்கொண்டு போய் அவை மேல் நோக்கிச்

30th October 1958] [Sri C. Subramaniam]

செல்லும் நிலைதான் ஏற்படும். இந்த ஊதிய உயர்வு என்பது சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு மட்டுமல்ல. தொழிலாளர்கள், விவசாய வர்த்தக ஸ்தாபனங்களில் இருக்கிறவர்களுக்கும், ஆக எல்லோருக்கும் இந்த உயர்வு கொடுக்க வேண்டியிருக்கிறது. சர்க்கார் அதிகாரிகளுக்கு கொடுத்தாலும் சரி கொடுக்காவிட்டாலும் சரி, தொழிலாளர்களுக்கு கொடுக்க வேண்டுமென்ற முறையில் அதற்காக சட்டங்கள் பல ஏற்படுத்தி அவர்களுக்கும் கொடுத்து வருகிறோம். அதனால் என்னவாகிறது? அவர்களிடத்தில் வாங்கும் சக்தி அதிகமாக்கப் பட்டு, முன்பிருந்ததை விட விலைகள் இன்னும் அதிகமாகிறது, அதன் காரணத்தினால் விலை அதிகமாகும்போது ஊதியத்தை இன்னும் கொஞ்சம் அதிகமாக்க வேண்டியிருக்கிறது. ஊதியம் உயர உயர விலைகளும் உயர்ந்து கொண்டே போகின்றன. ஆகவே இந்தப் பிரச்னையை, விலை உயர்கிற அளவு ஊதியத்தையும் உயர்த்திக் கொண்டே போவோம் என்ற முறையில் நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டு போனால் எந்தக் காலத்திலும் இதற்கு ஒரு முடிவு ஏற்படவே ஏற்படாது. ஒன்றை ஒன்று போட்டி போட்டுக்கொண்டு உயருகிற நிலைதான் அமைகிறது. குறைகள் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கும். தங்கள் சௌகரியங்கள் குறைந்து கொண்டேயிருக்கிறது என்ற புகார்களும் இருந்துகொண்டேயிருக்கும். ஆகவே, பலயிடங்களில் நான் வற்புறுத்திவருவது, இந்தப் பிரச்னையைத் தீர்க்க வேண்டுமென்று சொன்னால் வெறும் சம்பள உயர்வு அடிப்படையில் தீர்க்க முடியாது. அதனால் மட்டும் முடியாது. ஒரு தேசீய ஊதியக் கொள்கையை "நாஷனல் வேஜஸ் பாலிசி"யை நாம் கைக்கொள்ளுகிற காலத்தில்தான் இந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியும், என்பதை வற்புறுத்தி கூறிக் கொள்ள விரும்புகிறேன். ஏனென்றால், இன்று நாம் பல்வேறு தொழில் ஸ்தாபனங்களை அதிகப்படியாக ஏற்படுத்திக் கொண்டு இருக்கிறோம். அங்கு, தொழில் சட்டங்களை அடிப்படையாகக் கொண்டு ஊதியத்தை உயர்த்துவதற்கு வாழ்க்கை புள்ளிவிவரங்கள் உயரும் போது அதற்கு ஏற்ற பிரகாரம் ஊதியத்தை உயர்த்துவதற்கு நாம் முயற்சி செய்து கொண்டு வருகிறோம். பூராவுக்கும் இதுதான் காரணம் என்று சொல்ல வில்லை, இதுவும் விலை உயர்வுக்கு முக்கியமான ஒரு காரணமாக அமைந்திருக்கிறது என்பதைப் பார்க்கும்போது இன்றைக்கு தேசீய அடிப்படையில் குறைந்த சம்பளம் எவ்வளவு இருக்க வேண்டுமென்றதொரு கொள்கையை அடிப்படையாகக் கொண்டு அந்த அடிப்படையில் நாம் ஒரு முடிவு காண முன் வந்தால்தான் சர்க்கார் அதிகாரிகளுக்கு இருக்கக்கூடிய குறைகளாக இருந்தாலும் சரி, அல்லது மற்றவர்களுக்கு இருக்கக் கூடிய குறைகளாக இருந்தாலும் சரி அவைகளை நீக்க முடியும். அப்படி பார்க்கும்போது, விலையை கட்டுப்படுத்துவதின் மூலந்தான் இந்த தேசீய ஊதியக் கொள்கையை வகுக்க முடியும் என்பதை நாம் காண்கிறோம். விலையை எந்த விதத்திலும் கட்டுப்பாடு செய்யாமல் அது இஷ்டம் போல் மேலே போய் கொண்டிருக்கக்கட்டும் என்று விட்டு விட்டால் தேசீய ஊதியக் கொள்கையை நாம் வகுக்க முடியாது. ஆகவே, விலைக் கட்டுப்பாடு ஏற்படுத்த வேண்டும். அதிகமாகப் போனால் இந்த அளவு போகலாம். கீழே போனால் இந்த அளவு போகலாம் என்ற முறையில் விலைகளை கட்டுப்படுத்துகிறபோதுதான் ஊதியத்தைப் பொறுத்த வரையில் நாம் ஒரு ஸ்திரமான கொள்கையை கைக் கொள்ள முடியும் என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இது நாம் மட்டும் நடவடிக்கை எடுத்து செய்யக்கூடிய காரியம் அல்ல. ஆகையினால் இதை அகில இந்திய ரீதியில் தீர்க்கப்பட்டாக வேண்டும் என்று ஆலோசித்துக்கொண்டு இருக்கிறோம். அதல்லாமல் ஏதோ சர்க்கார் அதிகாரிகளுடைய பிரச்னையை மாத்திரம் இதில் கவனித்து தீர்த்துவிட்டால் போதாது. அடிப்படையாக எங்கும் இருக்கக்கூடிய இந்த பிரச்னையை தீர்த்தால்தான் அது சரியான முடிவாக இருக்கும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இன்றைக்கு சர்க்கார் ஊழியர்களுடைய ஊதியத்தை கட்டுப்படுத்த வேண்டும் என்று சொல்லுகிற நேரத்தில், அதை விரிவாக ஆலோசித்துப்பார்க்கும் போது நாட்டில் வேலை செய்கின்ற எல்லா பணியாட்களுடைய ஊதியத்தையும் கட்டுப்படுத்த

10-10 a.m.

வேண்டிய ஒரு நிலைமை ஏற்படுகிறது. அதோடு விலைகளையும் கட்டுப்படுத்த வேண்டியிருக்கிறது. இவ்விதம் விலைகளையும் ஊதியத்தையும் கட்டுப் படுத்தும்போது வருமானத்தையும் கட்டுப்படுத்த வேண்டிய நிலைமை வந்து சேருகின்றது. இவ்விதம் ஒன்றுக்கொன்று சேர்ந்து நம்முடைய பொருளாதார அமைப்பு எப்படி இருக்கவேண்டும் என்கிற அடிப்படையில் ஆலோசிக்க வேண்டியதாக இருக்கிறது. வருமான வரம்பை கட்டுப்படுத்த வேண்டும் என்று சொல்லுகிற சமயத்தில் பல இடங்களில் ஆட்சேபனை கிளம்புகின்றன. இவ்விதம் கட்டுப்படுத்தினால் பொருளாதார அபிவிருத் திக்கு பெரும் பாதகம் ஏற்படும் என்றும் சொல்லப்படுகிறது. வருமானம் வரும் என்கின்ற ஊக்கம் இல்லாவிட்டால் வேலை செய்கின்ற ஆர்வம் தொழிலாளர்களுக்கு குறைந்து விடும் என்றும் தெரிவிக்கிறார்கள். ஆகவே இதைப்பற்றியும் நன்கு ஆராய வேண்டியதாயிருக்கிறது. ஆகவேதான் இன்றைக்கு இது ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டு இருக்கிறது. ஒரு சங்கிலியைப்பிடித்து இழுத்தால் கோவையாக பல பிரச்னைகள் வந்து கொண்டிருக்கின்றன. அதல்லாமல் அரசாங்க உத்தியோகஸ்தர்களுடைய பிரச்னையை மாத்திரம் தீர்த்துவிடலாம் என்று சொன்னால் ஏதோ உடனடியாக இந்த சந்தர்ப்பத்திற்கு சில பரிகாரங்களை தேடலாமே ஒழிய ஒரே யடியாக இந்த பிரச்னையை நீக்கி விட முடியாது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். இதைப்பற்றி இதற்கு முன்னால் இந்த சபையில் மட்டுமல்ல, இதைப் பற்றி முக்கியமாக கவனிக்கவேண்டிய இடங்களிலும் வற்புறுத்தி கூறி வந்திருக்கிறேன். ஆகவே இதில் தக்க ஒரு பரிகாரம் ஏற்படும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. இதில் என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால் இந்த அடிப்படையில் இதற்கு ஒரு முடிவு காணாவிட்டால் இது எப்போதும் ஒரு தொல்லையாக இருந்து கொண்டிருக்கும். இதை சமுதாயமும் நன்கு உணர்ந்திருக்கிறது. ஆகவே இந்த அடிப்படையில் பிரச்னை தீர்ப்பதற்கு தகுந்த சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டியது நம்முடைய கடமையாகும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த சூழ்நிலையை எவ்வளவு சீக்கிரத்தில் ஏற்படுத்துகிறோமோ அந்த அளவுக்கு சீக்கிரமாக இந்த பிரச்னையை தீர்க்க முடியும் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம்.

அதற்கு அடுத்தப்படியாக இன்றைக்கு வேலையைப்பற்றி சொல்லுகின்ற சமயத்தில் வேலையினுடைய தரம் உயர வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் வேலையினுடைய தரத்தைப்பற்றி பல பேர்கள் புகார் செய்துகொண்டு இருக்கிறார்கள். பொதுவாக வேலையின் தரம் குறைந்திருக்கிறது என்று பல இடங்களில் புகார் சொல்லப்படுகின்றன. இதற்கு காரணம் என்ன என்பதையும் நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டியிருக்கிறது. இன்றைக்கு இருக்கக்கூடிய விதிகளில் அதிகாரிகளை பொறுக்கி எடுப்பதற்கும், அவர்களை உயர்த்துவதற்கும், அவர்களுக்கு பதவி உயர்வு கொடுப்பதற்கும், அதற்கு மேல் அவர்களுக்கு லீவ் வசதி, ஓய்வு கால சம்பள வசதி கொடுப்பதற்கும் ஏற்பட்ட விதிகள் இப்போது புதிதாக ஏற்பட்ட விதிகள் அல்ல. பழைய காலத்திலிருந்தே இருந்துகொண்டிருக்கின்றன. நமக்கு புதிய அரசியல் சட்டம் ஏற்பட்ட பிறபாடு இதில் என்னென்ன மாறுதல்கள் செய்யவேண்டும் என்பதை ஆலோசித்துப்பார்த்து திருத்தம் செய்து ஒரே தொகுதியாக ஆக்கி அதை நான்கு புத்தகங்களாக வெளியிட்டிருக்கிறார்கள். கனம் அங்கத்தினர்கள் இந்த புத்தகத்தை பார்வையிடுவார்களானால் இதில் இந்த பிரச்னைகளை எல்லாம் எவ்வளவு நுணுக்கமாக ஆராய்ந்து முடிவு செய்யப்பட்டிருக்கிறது என்பதை பார்க்க முடியும். அதிலும் இன்றைக்கு பப்ளிக் சர்வீஸ் கமிஷனுக்கு போதுமான அதிகாரம் கொடுத்து, அதிகாரிகளை பொறுக்குவதிலும் மட்டும் அல்ல, அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கும்போதும் பப்ளிக் சர்வீஸ் கமிஷனை கலந்து கொண்டுதான் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதோடு உயர் பதவிகள் கொடுக்கும்போதும் பப்ளிக் சர்வீஸ் கமிஷனை கலந்து கொண்டுதான் காரியங்களை செய்ய வேண்டும் என்றும் இந்த விதிகளில் திட்டவட்டமாக சொல்லப்பட்டிருக்கிறது. இதில்

30th October 1958] [Sri C. Subramaniam]

ஒரே அடியாக சட்ட மாறுதல் அவசியமா என்பதைப்பற்றியும் ஆலோசனை செய்யப்பட்டது. அரசியல் சட்டப் பிரகாரம் 309-வது விதி பிரகாரம் புதிய சட்டம் செய்யலாம் என்று கண்டிருக்கிறது. அந்த முறையில் இதற்கு புதிய சட்டம் அவசியமா என்பதைப்பற்றி பரிசீலனை செய்யப்பட்டது. அவ்விதம் பரிசீலனை செய்ததில் சென்னை ராஜ்யத்தில் இப்போது இருக்கக்கூடிய விதிகளே மிக சிறந்த முறையில் இருக்கின்றன, புதிய சட்டம் இங்கு தேவையில்லை என்பதை மத்திய அரசாங்கமே ஒப்புக் கொண்டது. இப்போது இருப்பதில் சில திருத்தங்கள் மட்டும் செய்தால் போதுமானது என்கிற ஆலோசனையின் பேரில்தான் சில திருத்தங்களை செய்து இப்போது வெளியிட்டு இருக்கிறார்கள். ஆகவே இப்போது இருக்கும் விதிகளை மாத்திரம் மாற்றி விட்டால் பெரிய மாறுதல் ஒன்றும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. அதோடு மட்டுமல்ல. அங்கத்தினர்கள் யாராவது இதை நன்றாக ஆராய்ந்து பார்த்து விட்டு இன்னின்ன விதிகள் மாற்ற வேண்டும் என்று சொல்வார்களானால் அதை மாற்றுவதற்கும் ஆலோசனை செய்யலாம் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். நான் இதை பார்த்த மட்டில் இவை எல்லாம் ஒழுங்காகத்தான் இருக்கிறது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். கடைசி வார்த்தை என்று நான் சொல்ல வரவில்லை. யாராவது இதில் இன்னின்ன குறைகள் இருக்கின்றன என்று எடுத்துச் சொல்வார்களானால் அதை நீக்குவதில் அரசாங்கத்திற்கு பெரிய கஷ்டம் ஒன்றும் இல்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். அதேசமயத்தில் இன்றைக்கு நடைமுறையில் இருந்து வரக்கூடிய "பெர்ஸனல் பைல்" முறையில் பல மாறுதல்கள் செய்ய வேண்டும் என்று பல அங்கத்தினர்கள் கூறினார்கள். சம்பந்தப்பட்ட அதிகாரி தன் கீழுள்ள உத்தியோகஸ்தர்களின் பேரில் அவர்களுக்கு தெரியாத முறையில் அவர்கள் பேரில் அதிகமான குறைகளை எல்லாம் எழுதி வைத்து விட்டால் அந்த உத்தியோகஸ்தர்களுடைய உத்தியோக காலம் முழுவதும் அது பாதகமாக இருக்கும் என்றும் தெரிவித்தார்கள். ஆகவே இந்த "பெர்ஸனல் பைல்" முறையை எடுத்துவிட வேண்டும் என்ற ஒரு குறுக்கு வழி இங்கு சொல்லப்பட்டது. இதைப்பற்றி நாம் நன்றாக யோசித்துப் பார்க்கவேண்டும். அதாவது ஒரு உத்தியோகஸ்தருக்கு உயர்ந்த பதவி கொடுக்கவேண்டுமென்றால் அவருடைய தகுதி, வேலையின் திறமை முதலியவற்றை கணக்கிடுவதற்கு இயலாமல் அவருடைய சர்வீஸை மட்டும் கணக்கில் வைத்துக்கொண்டுதான் அவருக்கு உயர் பதவி கொடுக்க முடியும். அவருடைய திறமை, தகுதி முதலியவற்றுக்கு சரியான ரிக்கார்டு இல்லாமல் போனால் ஸீனியாரிட்டி பிரகாரம்தான் அவர்களுக்கு உயர்வு கொடுக்க முடியும். இது சரியல்ல, இவ்விதம் இருந்தால் நல்ல முறையில் வேலை செய்து உயர் பதவி பெற வேண்டும் என்கின்ற ஊக்கம் உத்தியோகஸ்தர்களுக்கு இல்லாமல் போய் விடும். இதில் நல்ல முறையில் இல்லாமல் அதிகாரி தன்னுடைய விருப்பு வெறுப்புக்கும் ஏற்றவாறு தவறாக எழுதி வைத்துவிடுவார்கள் என்று ஒரு புகார் சொல்லப்பட்டது. அதற்காகத்தான் இன்றைக்கு குறை சொல்லக்கூடிய முறையில் ஏதாவது உத்தியோகஸ்தருடைய பெர்ஸனல் பைலில் எழுதப்படுமானால், உடனடியாக அதனுடைய குறிப்பு அந்த உத்தியோகஸ்தருக்கு கொடுக்கப்பட வேண்டும்; அதோடு அதற்கு அந்த உத்தியோகஸ்தர் என்ன பதில் சொல்லுகின்றார் என்பதையும் கேட்டு அதையும் அந்த பெர்ஸனல் பைலோடு சேர்த்து வைக்க வேண்டும் என்று விதி செய்யப்பட்டிருக்கிறது. இது சரியாக நடைபெறுவதில்லை என்று சிலர் புகார் தெரிவித்தார்கள். ஆகவேதான் இதை கொஞ்சம் மாற்றி அமைக்கலாமா என்பதைப்பற்றி ஆலோசித்து வருகிறோம். இங்கு மாத்திரமல்ல, மத்திய அரசாங்கத்திலும் இதைப் பற்றி ஆலோசனை நடந்து கொண்டிருக்கிறது. அதாவது எந்த அதிகாரி பெர்ஸனல் பைலில் எழுதினாரோ, அவர் அவருக்கு மேலாக இருக்கின்ற அதிகாரியோடு இவர் எழுதியிருக்கின்ற குறைகளைப்பற்றி ஆலோசித்து இவற்றின் குறிப்பு அந்த உத்தியோகஸ்தருக்கு கொடுக்கவேண்டுமா, வேண்டாமா என்பதைப்பற்றி ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும். அவ்விதம்

முடிவு செய்தால் உடனடியாக அதைப்பற்றி அந்த உத்தியோகஸ்தருக்குத் தெரிவிக்க வேண்டும். தெரிவிக்க வேண்டியதில்லை என்றால் ஏன் தெரிவிக்கவேண்டியதில்லை என்பதைப்பற்றி அதிகாரிகள் ஆலோசிக்கவேண் டும் என்கின்ற ஒரு முறையில் சில மாறுதல்கள் இந்த விதிகளில் செய்யலாமா என்பதைப்பற்றி ஆலோசித்துக்கொண்டிருக்கிறோம். இதைப்பற்றி சீக்கி ரத்திலேயே ஒரு முடிவு ஏற்படும் என்று நம்புகிறேன். இதிலும் சில அபிப்பிராய பேதங்கள் வருகின்றன. அவைகளையும் பரிசீலனை செய்ய வேண்டியிருக்கிறது. எப்படியும் கூடியசீக்கிரத்தில் இதற்கு ஒரு நல்ல முடிவு ஏற்படும் என்று நம்புகிறேன். கனம் எதிர் கட்சித் தலைவர் அவர்கள் சொல்லுகிறார்கள் "நல்லது கெட்டது எதுவாக இருந்தாலும் அவர்களிடம் சொல்லி விட்டால் என்ன" என்று. அது ஒரு கருத்து. அதையும் ஆராய்ந்து பார்க்க வேண்டியிருக்கிறது. ஆகவே அதைப் பொருத்த வரையில் ஒரு நல்ல முடிவிற்கு வருவதற்கு சர்க்கார் முயன்று வருகின்றது என்று சொல்ல விரும்புகிறேன். இன்றைக்குச் சொல்ல வந்தது என்னவென்றால், "இப்போது இருக்கக் கூடிய விதிகள் தவறான விதிகள், இன்றைக்கு இருக்கக் கூடிய விதிகள் சரியல்ல" என்பதல்ல வாதம், இதைப் பரிசீலனை செய்தால் குறைகள் கண்டுபிடிக்க முடியுமோ என்று இந்தக் கமிட்டி போட வேண்டுமென்று தீர்மானம் கொண்டுவரப்பட்டிருக்கிறது இதைப் பொருத்த வரையில் என்று கருதுகிறேன்.

10-20 a.m.

இன்றைக்கு வேலைத் தரம் குறைந்திருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இதற்குக் காரணம் என்ன என்று யோசித்துப் பார்க்கவேண்டும். இதே மாதிரி கல்லூரிகளில் தரம் குறைந்திருக்கிறது என்று சொல்கிறார்கள். இதற்குக் காரணம் என்ன? ஆட்சி மொழிதான் இதற்கு முக்கியமான காரணம் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். இன்றைக்கு எல்லா நிர்வாகமும் ஆங்கிலத்தில் நடத்தப்படுகிறது. நிர்வாகம் ஆங்கி லத்தில் நடைபெறும்போது அதற்கான குறிப்புகளை குமாஸ்தாக்கள் ஆங் கிலத்தில் போடவேண்டியிருக்கிறது. இப்போது எஸ். எஸ். எல். ஸி. படித்து விட்டு வெளியே வரும் மாணவர்களுக்கு எவ்வளவு ஆங்கில ஞானம் இருக்கிறது என்று நம் எல்லோருக்கும் தெரிந்திருக்கிறது. அந்த ஆங்கில அறிவை வைத்துக் கொண்டு, நிர்வாகத்திலுள்ள பல விஷயங் களைப் பற்றி ஆங்கிலத்தில் குறிப்புப் போடவேண்டுமென்று சொன்னால், அதுதான் இன்றைக்கு இருக்கக் கூடிய பெரும் தடையாக இருக்கிறது. இன்றைக்கு நிர்வாகத்தின் தரம் குறைந்திருக்கிறது என்றால் அவர் களுக்கு இருக்கக் கூடிய ஆங்கில அறிவுக் குறைவுதான் என்று நினைக் கிறேன். மற்றவர்கள் வேறு விதமாக நினைத்தாலும் நினைக்கலாம். ஆகையால்தான் இன்றைக்கு தமிழ் மொழியை ஆட்சி மொழியாக ஆக்கவேண்டி ஏற்பாடு செய்து அதற்கான நடவடிக்கைகள் எடுத்து வருகின்றோம். நிர்வாகத்தின் தரம் உயரவேண்டுமென்று சொன்னால் எந்த மொழியில் சாதாரணமாக பத்தாவது வரையில் படித்தவர்கள் நிர்வாகம் நடத்த முடியுமோ அந்த மொழியை ஆட்சி மொழியாக ஏற்றுக் கொண்டால் தான் நிர்வாகத்தின் தரம் உயருமேயல்லாது எவ் வளவுதான் 100 ரூபாய் கொடுப்பதற்கு பதிலாக 200 ரூபாய் கொடுத்தால் கூட தரம் உயரப் போவதில்லை. இன்றைக்கு இலக்கணப் பிழையில் லாமல் ஆங்கிலத்தில் எழுதுவதற்குப் போதுமான ஞானம் இவர்களுக்கு இல்லாமல் இருக்கிறது. சொல்லிக் கொடுக்கக் கூடிய பாடங்களையெல்லாம் தமிழிலேயே சொல்லிக் கொடுத்து விட்டு, ஆங்கிலம் ஓரளவுக்குச் சொல்லிக் கொடுத்து விட்டு, எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்தவுடன் அவர்களை லோயர் டிவிஷன் கிளார்க்குகளாக எடுத்துக் கொள்ளலாம் என்று பரீட்சை வைத்து எடுத்து ஆங்கிலத்தில் நிர்வாகத்தை நடத்தவேண்டுமென்றால், எல்லாக் குறிப்புகளையும் போடவேண்டுமென்றால், எல்லா உத்திரவு களையும் போடவேண்டுமென்றால், எல்லாவற்றையும் ஆங்கிலத்தில் செய்ய வேண்டுமென்றால், அது சுலபமாக முடிவதில்லை. அதனால் ஒரு மணி நேரத்தில் செய்யக் கூடிய வேலைக்கு இரண்டு மணி நேரம் ஆகி விடுகிறது.

60th October 1958] [Sri C. Subramaniam]

இரண்டு மணி நேரம் ஆகக் கூடிய வேலைக்கு ஒரு நாளே ஆகிவிடுகிறது. அதுவும் ஏதாவது புரியவில்லையென்றால் அதை அப்படியே போட்டு விடுகிறார்கள். முன்பு ஒருவர் செய்து வந்த வேலைக்கு நான்கு பேர்கள் வேண்டியிருக்கிறது என்றால், நமது மக்களுடைய அறிவு குறைந்து விடவில்லை, அவர்களுடைய திறமை குறைந்து விடவில்லை. அவர்களுக்கு ஆங்கில ஞானம் தான் குறைந்திருக்கிறது. அது நாமாக ஏற்படுத்திய ஒரு விஷயம் தான். அப்படிப்பட்ட ஒரு தடையை ஏற்படுத்தி விட்டு குறை சொல்லிக் கொண்டிருப்பது சரியல்ல. காரணம் என்ன என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். கல்லூரி மாணவர்களைச் சொல்லுவது போலச் சொல்லிக் கொண்டிருப்பது சரியல்ல. பத்தாவது வரை தமிழிலேயே பாடங்களை கற்றுவிட்டு, கல்லூரியில் போய்ச் சேர்ந்தவுடன் எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்திலேயே சொல்லிக் கொடுத்தால், அதுவும் உடனடியாக விஞ்ஞானம் போன்ற பாடங்களை ஆங்கிலத்திலேயே சொல்லிக் கொடுத்துப் புரிந்து கொள்ளவேண்டுமென்று சொன்னால் அது அவர்களுக்கு பெரும் பளுவாக இருக்கிறது என்பதை நாம் நேரடியாகப் பார்க்கிறோம். அதே கஷ்டங்கள் தான் நிர்வாகத்தில் இருக்கிறது என்பதையும் பார்க்கவேண்டும். தரம் உயருவதற்கு 100க்கு 90 பங்கு தடையாக இருப்பது மொழிப் பிரச்னை. இந்தப் பிரச்னையை எவ்வளவு சீக்கிரம் தீர்க்கிறோமோ அவ்வளவு சீக்கிரம் நிர்வாகத்தின் தரமும் உயரும் என்று சொல்ல விரும்புகிறேன். இன்றைக்கு வேலை செய்கிறவர்களுக்கு உற்சாகக் குறைவு ஒன்றும் ஏற்பட்டு விடவில்லை. அவர்களுடைய தேச பக்தி ஒன்றும் குறைந்து விடவில்லை. அவர்களுக்கு தேச நலனில் அக்கறை இல்லை என்று சொல்ல முடியாது. ஆகையால் தான் இன்றைக்கு எவ்வளவு சீக்கிரம் நிர்வாக மொழி தமிழ் மொழி என்று கீழ்ப்பகுதியில் இருக்கிறவர்களுக்கு ஏற்பாடு செய்கிறோமோ அப்போதே நிர்வாகத்தின் தரம், வேலையின் தரம் உயரும் என்று நான் கருதுகிறேன். அந்த அடிப்படையில் தான் நாம் இந்தப் பிரச்னையை அணுகி வருகிறோம். முக்கியமாக குமாஸ்தாக்கள், அவர்களுக்கு மேலேயிருப்பவர்கள் இவர்களுடைய தரம் உயர, மொழியினால் எந்த விதமான கஷ்டமுமில்லாமல், இந்த ராஜ்ய மொழியிலேயே நிர்வாகம் நடக்க என்றைக்கு ஏற்பாடு செய்கிறோமோ, அப்போதே இந்தத் தரம் குறைந்திருக்கிறது என்ற நிலைமை மாறி நாம் எதிர்பாராமலேயே தரம் உயர்ந்து விடும் என்பதில் எனக்கு பூர்ண நம்பிக்கை இருக்கிறது என்று இந்த சபையினருக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இன்றைக்கு அவர்களுக்கு கிடைக்கக் கூடிய ஊதியத்தை வைத்துக் கொண்டு அரசாங்க ஊழியர்கள் வாழ்க்கை நடத்த முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்கிறோம். ஆகையால் நீண்ட காலத் திட்டமாகப் போட்டு இந்தக் குறைகளை—அடிப்படை பிரச்னைகளை—தீர்க்கவேண்டும் என்று நடவடிக்கை எடுக்கும் காலத்திலே, தற்போது இருக்கக் கூடிய குறைகளை தீர்க்க எல்லா வித முயற்சிகளையும் செய்ய கடமை பட்டிருக்கிறோம். இப்போது இருக்கக் கூடிய விலைவாசிகளை அனுசரித்து, அவர்களுக்கு இருக்கும் கஷ்டங்களை அனுசரித்து, எந்த அளவிலே அரசாங்க ஊழியர்களுக்கு உதவி செய்ய முடியும் என்று ஆராய்ந்து பார்க்க கடமைபட்டிருக்கிறோம். நான் முன்பு சொன்னது போல இதையும் அகில இந்திய ரீதியில் பரிசீலனை செய்தால் நன்றாக இருக்கும். பரிசீலித்தாலும் கூட எந்த ஒரு தனிப்பட்ட ராஜ்யத்தை வைத்துப் பரிசீலனை செய்தாலும் ஒரு நல்ல முடிவுக்கு வர முடியாது. அதன் காரணமாகத் தான் இன்றைக்கு ஒரு பே கமிஷன், மத்திய அரசாங்க ஊழியர்களுடைய ஊதியத்தைப் பற்றி பரிசீலனை செய்ய, நியமித்திருக்கிறார்கள். அந்தப் பரிசீலனை இப்போது நடந்து கொண்டிருக்கிறது. அந்தப் பரிசீலனை தனிப்பட்ட மத்திய அரசாங்க ஊழியர்களுடைய பிரச்னை பற்றியது மட்டு மல்ல. ராஜ்ய சர்க்காருடைய ஊழியர்களின் ஊதியத்தையும் அனுசரித்து அந்தப்

[Sri C. Subramaniam] [30th October 1958

பிரச்னையைப் பரிசீலனை செய்யவேண்டுமென்று அவர்களுக்கு உத்திரவிடப்பட்டிருக்கிறது. அதனால் தான் இன்றைக்கு ராஜ்ய சர்க்கார் மந்திரி சபையினரையெல்லாம் கூப்பிட்டு ஆலோசனை செய்கிறார்கள். அந்த முறையிலே நம் ராஜ்யத்திலே இருக்கக் கூடியவர்களை அழைத்திருக்கிறார்கள். அடுத்த ஏழாம் தேதி அந்தப் பே கமிஷனுடன் இதைப்பற்றிப் பேசுவதற்காக தேதி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதெல்லாம் முடிந்தவுடன் அறிக்கை வெளியாகும் என்று எதிர்பார்க்கிறேன். அந்த அறிக்கை வெளியானவுடன் அந்த முறையிலே நமது ஊழியர்களுடைய ஊதியத்தை உயர்த்துவது அல்லது மாற்றுவது பற்றி யோசனை செய்தால் நல்லதாக இருக்கும் என்பது எனது கருத்து. அதுவும் அதிக நாட்கள் ஆகப் போவதில்லை. ஒரு சில மாதங்களில் வெளி வந்து விடும். அந்த அறிக்கையிலுள்ள சிபாரிசுகளை அடிப்படையாக வைத்துக் கொண்டு இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்தால் நல்ல முடிவுக்கு வர முடியுமென்று கருதுகிறேன். உடனடியாக இந்தக் கமிட்டியைப் போடுவதாக வைத்துக் கொண்டாலும், பே கமிஷனின் அறிக்கை வரட்டும், அதற்குப் பிற்பாடு யோசிக்கலாம் என்று இந்தக் கமிட்டியை ஒத்தி வைக்க வேண்டியிருக்கும். இந்தக் கமிட்டியை அமைக்க வேண்டுமா, வேண்டாமா என்பதைப் பற்றி அறிக்கை வந்தவுடன், அறிக்கையிலுள்ள சிபாரிசுகளை சர்க்கார் பரிசீலனை செய்து பார்த்து யோசனை செய்து, வேண்டுமானால் இங்கு இந்தப் பிரச்னையை விவாதித்து, ஒரு கமிட்டி அவசியம் என்று தோன்றினால் அதை அப்போது வரவேற்கத் தயாராக இருக்கின்றேன். எதையும் மந்திரிகளே செய்யவேண்டுமென்ற ஆசையில்லை. இதிலே எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒத்துழைக்க முடியும் என்று நம்புகிறேன். அதற்கு இன்னும் சந்தர்ப்பம் வரவில்லை என்பது எனது வாதம்.

இன்றைக்கு சர்க்கார் ஊழியர்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய குறைகள் பல இருக்கின்றன. இன்றைக்கு இருக்கக் கூடிய பல்வேறு பொருள்களின் விலை உயர்வு காரணமாக, வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களின் விலை உயர்வு காரணமாக அவர்களுக்கு வரக்கூடிய சம்பளத்தை வைத்துக் கொண்டு வாழ்க்கை நடத்துவது கஷ்டமாக இருப்பதால் பல அரசாங்க ஊழியர்கள் கடன் பட்டிருக்கிறார்கள் என்பதை நான் உணருகிறேன். அதிலும் குறைவாகச் சம்பளம் வாங்கக் கூடியவர்கள் அதிகமாக பாதிக்கப் பட்டிருக்கிறார்கள் என்று உணருகிறேன். இந்தப் பிரச்னையைப் பரிசீலிக்கும்போது விவசாயிகள் கடன் நிவாரணச் சட்டம் மாதிரி ஒரு கடன் நிவாரணச் சட்டம் கொண்டு வந்து—கடனைத் திருப்பித் தராமல் இருக்க வேண்டுமென்றல்ல, வட்டியைக் குறைக்கவேண்டுமென்றல்ல—இருக்கக் கூடிய கடனை எப்படி தீர்க்க முடியும், கடன் இல்லாமல் எப்படிச் செய்ய முடியும் என்று பரிசீலனை செய்து அதற்கு ஒரு திட்டம் வகுக்க வேண்டுமென்று நான் நினைக்கிறேன். இது முதலாவது.

10-30 p.m.

இரண்டாவதாக, இன்றைக்கு எவ்வளவு சம்பளம் வந்தாலும் போதவில்லை என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. 100 ரூபாய் சம்பளம் வாங்குகிறவர்களுக்கும் குறைகள் இருக்கின்றன. 200 ரூபாய் சம்பளம் வாங்குகிறவர்களுக்கு இரண்டு பங்கு குறைகள் இருக்கிற மாதிரித் தோன்றுகின்றன. சம்பளம் அதிகமாக, அதிகமாக, குறைகளும் அதிகமாக இருப்பதாகத் தோன்றுகின்றன. இதிலே ஒரு பழக்கம் ஏற்பட்டிருக்கிறது. 100 ரூபாய் சம்பளம் வந்தால் அந்த 100 ரூபாயையும் செலவழிக்கவேண்டுமென்பது. இது சம்பளம் வாங்குகிறவர்களுக்கு ஒரு சாபம். மாதக் கடைசியில் இரண்டு மூன்று நாட்களிலே பாங்கியில் பணமேயில்லாமல், அடுத்த மாதச் சம்பளத்திற்கு காத்துக்கொண்டிருக்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. 100 ரூபாய் சம்பளம் வாங்குகிறவர்களுக்குத்தான் இந்த நிலைமை என்பது அல்ல. 1 000, 2,000 ரூபாய் என்று சம்பளம் வாங்குகிறவர்களின் நிலைமையும் இப்படித்தானிருக்கிறது. மாதக் கடைசியில் எப்படி "செக்" கொடுப்பது, முதல் தேதிக்குப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று ஒத்திப்போடவேண்டிய நிலைமை எனக்குக் கூட ஏற்பட்டிருக்கிறது. (சிரிப்பு.)

எத்தனை சம்பளம் வந்தாலும் சரியாய்ப் போய்விடுகிறது. 500 ரூபாய் வந்தாலும் சரி, 2,000 ரூபாய் வந்தாலும் சரி, இதே நிலைமைதான் இருக்கிறது. என்னைப் பொறுத்த வரையில் இப்பொழுது இருக்கும் நிலைமையை விட ரொம்பவும் தாழ்வாகவும் இருந்து பழகியிருக்கிறேன். இதைவிட இன்னும் அதிகமாகச் செலவு செய்தும் வாழ்ந்திருக்கிறேன். எந்த நிலைமையில் வேண்டுமானாலும் வாழமுடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. எதற்காக இதைச் சொல்லுகிறேன் என்று சொன்னால், மாதா மாதம் வாங்குகிற சம்பளம் அவ்வப்பொழுது செலவாகி விடுகிறது. கட்டாயமாக சேமிக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்தால்தான் ஏதாவது சேமிக்க முடியும். அப்படியிருக்கும்பொழுது, எதிர்பாராத செலவுகளுக்கு கடன் வாங்கத்தான் வேண்டியிருக்கிறது. கடன் எப்படி ஏற்படுகிறது என்று பார்த்தால், அன்றாடச் செலவுகளுக்காக கடன் வாங்குகிறவர்களின் எண்ணிக்கை குறைவாகத்தான் இருக்கும். ஆனால், எதிர்பாராத செலவுகளுக்காக கடன் வாங்குபவர்கள் பலர். வீட்டிலே கல்யாணம், குழந்தை பிறப்பு, சாவு ஏற்பட்டு விட்டது என்று சொன்னால், உடனடியாக கையில் பணம் இல்லாத காரணத்தால், கடன் வாங்க வேண்டியதாக இருக்கிறது. அப்படி வாங்கும் கடனைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. ஆகவே, இதற்காக திட்டம் போடும்பொழுது, சம்பள உயர்வு என்ற அடிப்படையில் மட்டும் இந்தப் பிரச்னையை அணுகினோமேயானால், உண்மையில் இந்தப் பிரச்னையை நாம் தீர்க்க முடியாது. எதிர்பாராத செலவுகளுக்கு சர்க்காரிடமிருந்து உதவி செய்யக்கூடிய ஒரு திட்டத்தையும் ஏற்படுத்துவது அவசியம்.

மூன்றாவதாக, இன்றைக்கு இருக்கக்கூடிய வாழ்க்கை நிலையை அநுசரித்து, முக்கியமாக குறைந்த சம்பளம் வாங்குகிறவர்களுக்கு, எந்த அளவுக்கு ஊதிய உயர்வு கொடுக்கவேண்டும் என்று பரிசீலனை செய்ய வேண்டியதாக இருக்கிறது. உடனடியாக, வேண்டத்தக்க அளவுக்கு, ஒரு வருஷத்திலேயே சம்பள உயர்வு கொடுக்கவேண்டுமென்று சொன்னால், அதனால் ராஜ்யத்தின் நிதி நிலைமை பாதிக்கப்படும் என்பதை நாம் உணரவேண்டும். ஆகவே, திட்டம் போட்டு, ஒரு காலவரையரையை நிர்ணயித்து, அந்தக் காலவரையரைக்குள், உதாரணமாக, 5 வருஷம் என்று வைத்துக் கொண்டோமேயானால், வருஷத்திற்கு இவ்வளவு உயர்வு கொடுக்கவேண்டும், ஐந்து வருஷத்திற்குள் இவ்வளவு கொடுக்கவேண்டும் என்று திட்டம் போடுவோமேயானால் இவ்வளவு உயர்வு கொடுக்கவேண்டுமென்று சொன்னால், அது பெரிய பளுவாக இராமல், நம்முடைய நிதி நிலைமையை பாதிக்காமல் இருக்கும். எவ்வளவு உயர்வு கொடுக்க வேண்டும், அது எந்த அடிப்படையில் அமையவேண்டும் என்பதையெல்லாம், இதைப் பற்றி நுணுக்கமாக ஆராயும்பொழுது கவனித்துக் கொள்ளலாம்.

இந்த மூன்று அடிப்படையிலே நாம் இந்தப் பிரச்னையை பரிசீலனை செய்து பார்க்கவேண்டுமென்று நான் கருதுகிறேன். இதைப் பற்றி நானும் என்னால் இயன்றவரை ஆலோசித்து வருகிறேன். எனது சகாக்களும் இதைப்பற்றி ஆலோசித்து வருகிறார்கள். இந்த சபையினரும் இதிலே அக்கறை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இது தீர்க்கப்படவேண்டிய ஒரு பிரச்னை என்பதை ஒப்புக்கொண்டிருக்கிறபொழுது, இதிலேயுள்ள அடிப்படையான கருத்துக்களை வற்புறுத்திச் சொல்ல ஆசைப்பட்டேன். தற்காலிகமாக எடுத்துக்கொள்ளவேண்டிய நடவடிக்கைகளைப் பற்றிச் சொன்னேன். நல்ல வேளையாக, நான் இவற்றையெல்லாம் சொல்லும்பொழுது, கனம் அண்ணாதுரை அவர்களும் இங்கே வந்துவிட்டார்கள். அவர்கள் இல்லாத சமயத்தில் பேசுவதில்லை என்று நினைத்துக் கொண்டிருந்தேன். நிதி வேண்டுமானால், எத்தனையோ திட்டங்கள் இருக்கின்றனவே, அவைகள் மூலமாக நிதியைப் பெருக்கிக் கொள்ளலாமென்று தெரிவித்தார்கள். நிதியைப் பெருக்குவதற்காக யாராவது திட்டத்தைச் சொன்னால், அதை எந்த நிதி மந்திரியும் வரவேற்காமல் இருக்க முடியாது. எந்தத்

திட்டத்தைச் சொன்னாலும், அதைப் பற்றி யோசனை செய்து பார்க்க வேண்டியிருக்கிறது. அவர்கள் இரண்டு திட்டங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ஒன்று என்னவென்றால், அதைத்தான், கசாப்புக் கடை வைப்பதைப் பற்றி நிதி மந்திரி சொல்லிக்கொண்டிருந்தார்கள் என்று சொன்னார்கள். அவர்கள் கொடுத்த திட்டம் என்னவென்றால், அதிகமாக ஆடுமாடுகளை வளர்த்து, அவைகளின் இறைச்சியை வெளி நாடுகளுக்கு அனுப்பி, அதன் மூலமாக பணம் சம்பாதிக்கவேண்டும். எல்லோருக்கும் புரியவேண்டு மென்பதற்காகத்தான் கசாப்புக் கடை என்று சொன்னேன். இன்னொரு புதிய திட்டத்தையும் கொடுத்தார்கள். கோழிகள் வளர்த்து, அவற்றின் முட்டைகளை விற்று 3 கோடி ரூபாய் சம்பாதிக்கலாம் என்ற இரண்டாவது மாதிரித் திட்டத்தையும் சொன்னார்கள். இவை இரண்டையும் நாம் ஆலோசனை செய்து பார்க்கவேண்டும். இன்றைக்கு நம்மிடத்தில் இருக்கக்கூடிய ஆடுமாடுகளின் எண்ணிக்கை எவ்வளவு என்று பார்ப்போமேயானால், உலகத்திலேயே வேறு எங்கும் இல்லாத அளவுக்கு எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. ஆனால், அவற்றின் தரம் எப்படியிருக்கிறது என்று பார்த்தால், இதைவிட தரம் குறைந்த மாடுகள் உலகத்திலே வேறு எங்கும் கிடையாது. இதற்குக் காரணம் என்ன ? செங்கல்பட்டு ஜில்லாவைச் சேர்ந்தவர்கள் என்ற காரணத்தால், செங்கல்பட்டு ஜில்லாவைப் பற்றிப் பேசுகிறேன். அநேகமாக மற்ற இடங்களிலும் அதேமாதிரியாகத்தான் இருக்கிறது. மற்ற இடங் களில் உயர்வாக இருக்கிறது என்று நான் சொல்லவில்லை. செங்கல்பட்டு ஜில்லாவிலே கால்நடைகளை ஒட்டிய ஒரு நிகழ்ச்சியில் பங்கு எடுத்துக் கொள்ளும்பொழுது நான் சொன்னேன் " செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ள மாடுகளைப் பார்த்தால் ஆடுகள் மாதிரியிருக்கிறது, ஆடுகளைப் பார்த்தால் பூனைகள் மாதிரியிருக்கிறது " என்று சொன்னேன். அவைகளின் வளர்ச் சிக் குறைவைப் பற்றிச் சொல்வதற்காக அவ்வாறு குறிப்பிட்டேன். இன்னும் அதிகமாக ஆடுமாடுகளை வளர்த்து, அவற்றின் இறைச்சியை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வோமானால், அதனால் அதிகமாகப் பணம் சம்பாதிக்கலாம் என்ற கருத்தை வெளியிட்டார்கள். இறைச்சி ஏற்றுமதி செய்கிற மற்ற நாடுகளிலுள்ள நிலைமையை ஆராய்ந்து பார்த் திருப்பார்களேயானால், நம்முடைய நாட்டிற்கு இந்த யோசனையைச் சொல்லி யிருக்க மாட்டார்கள். எங்கு மேய்ச்சல் தரை அதிகமாக யிருக்கிறதோ, விவசாயத்திற்குத் தேவையானது போக மேய்ச்சல் நிலம் எங்கு அதிகமாக யிருக்கிறதோ, அதாவது ஆஸ்திரேலியா, நியூஜிலந்த், மெக்ஸிகோ போன்ற பரந்த வெளிகள் உள்ள பிரதேசங்களில், விவசாயம் செய்வதற்கு ஆட்கள் இல்லாமல் பரந்த வெளிகள் உள்ள பிரதேசங்களில்தான் இவைகளை அதிகமாக வளர்க்க முடியும். அவைகளுக்குப் போதுமான தீனி கிடைக்கக் கூடிய பிரதேசங்களாக இருக்கவேண்டும். நம் நாட்டிலோ என்றால், ஒரு சதுர அங்குல இடமிருந்தாலும், அங்கே பயிர் செய்கிறோம். தப்பித் தவறி ஏதோ ஒருசில இடங்கள்தான் மேய்ச்சல் தரையாக இருக்கின்றன. இருக்கக்கூடிய ஆடுமாடுகளின் தரத்தை உயர்த்த முடியாமல் நாம் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறோம். அவர்கள் நம் தமிழ் நாட்டைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதால் சொல்லுகிறேன். இங்கே இருக்கக்கூடிய நிலப்பரப் பையும், இங்கே இருக்கக்கூடிய ஜனத்தொகையையும், இங்கே இருக்கக் கூடிய கால்நடைகளின் எண்ணிக்கையையும் வைத்துக்கொண்டு, இறைச் சியை ஏற்றுமதி செய்யும் அளவுக்கு ஆடுமாடுகளை வளர்க்க முடியுமென்று யாராவது சொல்வார்களேயானால், அது இங்கே இருக்கக் கூடிய நிலை மையை உணராமல் சொல்லக்கூடிய ஒரு திட்டம் என்பதைத்தான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். திட்டத்தை சொன்னோம், அதை எடுத்து நடத்துவதற்கு சக்தியில்லை என்று சொல்லலாம். அவர்கள் இன்னும் கொஞ்சம் ஆராய்ந்து பார்க்கவேண்டுமென்று விரும்புகிறேன். ஏற்றுமதி செய்யவேண்டுமென்று சொன்னால், இப்பொழுது இறைச்சியை ஏற்றுமதி செய்யும் நாடுகளுடன் போட்டி போட்டுக்கொண்டு, ஏற்றுமதி செய்வதற்குத் தகுந்த முறையில், சிறந்த இறைச்சியாக இருந்தால்தான்

30th October 1958] [Sri C. Subramaniam]

நாம் ஏற்றுமதி செய்யமுடியும். நம்மிடம் கருணை கூர்ந்து பிற நாடுகளில் வாங்கிவிட மாட்டார்கள். அப்படிப்பட்ட நிலையை நாம் அடைவதற்கு எத்தனையோ வருஷங்கள் ஆகும். கால்நடைகளை வளர்ப்பதில் சிறிதளவாவது பங்கு எடுத்துக் கொண்டிருப்பார்களேயானால், அதில் எவ்வளவு கஷ்டம் இருக்கும் என்பதை உணர்ந்திருப்பார்கள்.

அடுத்தது, கோழி வளர்க்கும் திட்டம். வெகு சுலபமாகச் சொல்லி விடலாம், முட்டைகள் விற்பதன் மூலமாக மூன்று கோடி ரூபாய் கிடைக்குமென்று. ஆனால் இதிலே சர்க்காருக்கு ஒரு பைசாக்கூட வராது. சர்க்கார் கோழிப்பண்ணைகளிலிருந்து 3 கோடி ரூபாய் பெற முடியாது. மக்கள் வளர்க்கும் கோழிகளிலிருந்து கிடைக்கும் முட்டைகள் எல்லாம் சேர்ந்து 3 கோடி கிடைக்கும். ஆகவே, சர்க்காருக்கு மூன்று கோடி ரூபாய் கிடைக்கவேண்டுமென்று சொன்னால், மக்கள் எத்தனை கோழிகள் வளர்க்கிறார்களோ, அத்தனை கோழிகளை வளர்ப்பதற்கு சர்க்கார் முன்வர வேண்டும். கோழி வளர்க்கும் திட்டத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறோம். ஆனால் கோழியின் தரத்தை உயர்த்துவதில், எண்ணிக்கையை உயர்த்துவதில் எவ்வளவு கஷ்டம் இருக்கிறது என்பதை கொஞ்சம் பரிசீலனை செய்து பார்த்திருப்பார்களேயானால், அதிலேயுள்ள கஷ்டம் தெரியவரும். இதுமாதிரி அண்ணாதுரை அவர்கள் சொல்லிவிட்டார்கள் என்பதற்காக, 'நான் அடுத்தது என்.ஜி.ஓ.க்களிடம் போய் பொறுங்கள், கோழி வளர்க்கப் போகிறோம், முட்டை குஞ்சாகப்போகிறது, 10 முட்டை 10 குஞ்சாகும், 10 குஞ்சு 10 பெரிய கோழியாகும், இதனால் மூன்று கோடி ரூபாய் சம்பாதிக்கலாம்' என்று சொன்னால் அவர்கள் கேட்பார்களா ? ஒருவேளை அண்ணாதுரை அவர்கள் சொன்னால் கேட்கலாம். நான் சொன்னால், ஏதோ நிதி மந்திரிக்கு மூளைக் கோளாறு போலிருக்கிறது, கீழ்ப்பாக்கத்திற்கு அனுப்பவேண்டியதுதான் என்று தீர்ப்பு கட்டி விடுவார்கள். ஆதலால் நான் அம்மாதிரி சொல்லுவதற்கு தயங்குகிறேன். சுயராஜ்யத்திற்காக பாடுபட்டுக்கொண்டிருக்கக்கூடிய காலத்தில்கூட 30 கோடி மக்களும் எச்சல் துப்பினால் அதில் வெள்ளைக்காரர்கள் மூழ்கிவிடுவார்கள் என்று மேடைப் பேச்சில் சொல்லுவது வழக்கம். சொல்லுவது எதையும் சுலபமாகச் சொல்லிவிடலாம். சிறு திட்டத்தில் 3 கோடி ரூபாய் சம்பாதிக்கலாம் என்றால் மற்ற திட்டங்கள் என்ன என்பதைப் பற்றி நாம் பேச ஆரம்பிக்கிறோம். ஆகையால்தான் இதுமாதிரி திட்டங்களை சொல்லும் பொழுது, சொல்லுகிற திட்டத்தை சர்க்காரால் ஏற்றுக்கொள்ள முடியுமா என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். திட்டத்தில் இருக்கக்கூடிய பல்வேறு நுணுக்கங்களையும், கஷ்டங்களையும் தெரிந்துகொண்டு சொல்லுவார்களேயானால், அந்தத் திட்டத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ள முடியுமா, முடியாதா என்பது பற்றி அவர்களே ஒரு முடிவுக்கு வந்துவிடுவார்கள் என்று நான் நினைக்கிறேன்.

10-40 a.m.

ஒரு துரதிருஷ்டவசமான நிலைமையிலே நாம் இருக்கிறோம். எது முன்னேற்றம் என்று நாம் நினைக்கிறோமோ, அது பின்னேற்றமாக காட்சி அளிக்கிறது கழகத் தோழர்களுக்கு. எது சாத்தியமோ அது அசாத்தியமாக அவர்களுக்கு காட்சி அளிக்கிறது. எது அசாத்தியமோ அதெல்லாம் சாத்தியமாக காட்சி அளிக்கிறது. நான் ஆண்டவனை பிரார்த்திக்கிறேன்—எனக்கு ஆண்டவன் பேரில் நம்பிக்கை இருக்கிறது—இந்த துரதிருஷ்டவசமான நிலைமை சீக்கிரம் நீங்கினால்தான் தமிழ் நாடு முன்னேற முடியும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இம்மாதிரி சொன்னால், கோழி வளர்ப்பில் 3 கோடி ரூபாய் வருமென்றால், நிதி மந்திரி சும்மா இருக்கிறாரே, அவர் என்ன நிதி மந்திரியா என்று மக்கள் நினைப்பார்கள். அதிலே இருக்கக்கூடிய கஷ்டங்களை, நுட்பங்களை ஆராய்ந்து பார்க்கக்கூடிய நிலைமை இருக்கவேண்டும். நான் குறை கூற வில்லை. ஆனால் அவர் சொன்ன திட்டங்களை எடுத்துக்கொள்வதில் உள்ள கஷ்டங்களை தெளிவாக்குவது என்னுடைய கடமை. ஒரு திட்டத்தைச் சர்க்கார் முன்னால் வைக்கும்போது, அந்தத் திட்டத்தை நிறைவேற்று

வதிலுள்ள கஷ்டங்களை எடுத்துச் சொல்லுவது என்னுடைய கடமை. அவர்களை குறை கூறுவதிலோ, அல்லது வேறு விதமாக சொல்லுவதிலோ எனக்கு ஒரு விருப்பம் என்ற முறையிலே நான் இதை சொல்லவரவில்லை என்பதை முதலிலே விளக்கிக்கொள்ள விரும்புகிறேன்.

**SRI C. N. ANNADURAI:** நான் ஆட்டு இறைச்சி திட்டம், கோழி வளர்ப்பு திட்டம் கொடுத்தது என்.ஜி.ஓ.க்கள் பணம் பெறுவதற்காகவும், அதிலிருந்து எடுத்துக்கொள்ளவேண்டுமென்பதற்காகவும் அல்ல. வரியை மட்டும் நம்பி இருக்க வேண்டாம், சர்க்கார் இம்மாதிரி பல்வேறு துறைகளிலே வருவாயை தேடிக்கொள்ளலாம் என்பதைத்தான் சொன்னேன். ஆட்டு இறைச்சியைப் பொறுத்தவரையில் எனக்கு இன்னும் நம்பிக்கை இருக்கிறது. தகுந்த முயற்சி செய்தால் இந்தத் தொழிலை நம் நாட்டிலே வளர்க்க முடியும். வளர்க்கக்கூடிய பொறுப்பில் இருப்பவர்கள் சங்கடங்களைச் சொல்லுவது பிரச்னைக்கு பதில் இல்லை.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** கஷ்டங்களையெல்லாம் சமாளித்துக்கொண்டு காரியங்களை நிறைவேற்றுவதற்காகத்தான் இருக்கிறோம். ஆனால், இருக்கக்கூடிய நிலைமையை உணரவேண்டும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். உணவு பற்றுக்குறை தீருவதற்கு போதுமான அளவு நிலம் இல்லாத நிலையில் இருக்கிறோம். நிலப் பிரச்னை வரப்போகிறது. நிலம் இல்லாத விவசாயிகளுக்கு ஆளுக்கு 2 ஏகர், 3 ஏகர் என்று இல்லாவிட்டாலும், ஒரு ஏகர் நிலம் பிரித்துக் கொடுப்பதற்குக்கூட நிலம் இல்லாமல் கஷ்டப்படுகிறோம். அப்படியிருக்கும் பொழுது, ஆடு, மாடுகளை வளர்த்து வெளியே ஏற்றுமதி செய்யும் அளவுக்கு நம்மிடத்தில் மேய்ச்சல் தரை இல்லாமல் இருக்கும்பொழுது, மேய்ச்சல் தரைக்கு ஏற்பாடு செய்யமுடியாமல் இருக்கும்பொழுது, அவருக்கு இந்தத் திட்டத்தில் இன்னும் நம்பிக்கை இருக்கிறது என்று சொன்னால், அதற்கு நான் வேறு என்ன சொல்லுவது ? அவர்கள் பொறுப்பு ஏற்கும்போது வேண்டுமானால் ஆடு, மாடுகள் வளர்ப்பு திட்டத்தை அவர்கள் நிறைவேற்றலாம் என்ற நம்பிக்கை வைத்துக்கொண்டிருக்கலாம். ஆனால், மக்களும் அது எக்காலமோ என்று ஏங்கிக்கொண்டு இருக்க வேண்டியதுதான். இன்றைக்கு சர்க்கார் பல்வேறு துறைகளிலே வசதி செய்துகொடுக்க முடியும், மனம் இல்லாத காரணத்தினாலே அவர்கள் செய்யாமல் இருக்கிறார்கள் என்று யாராவது கருதுவார்களேயானால், சர்க்கார் எடுத்துக்கொண்டிருக்கும் முயற்சிகளைப்பற்றி தெரியாதவர்கள் தான் அவ்வாறு கூறுவார்கள். நாம் இருக்கக்கூடிய நிலைமையிலே எந்த அளவுக்கு உற்பத்தியை பெருக்குகிறோமோ அந்த அளவுக்குத்தான் விலையை கட்டுப்படுத்த முடியும். கட்டுப்பாடு சட்டரீதியில் ஏற்படுவது ஒரு புறம் இருக்க, அடிப்படையாக எந்த அளவுக்கு உற்பத்தி அதிகரிக்கிறதோ அந்த அளவுக்குத்தான் விலையை கட்டுப்படுத்த முடியும். போதுமான அளவு பொருள்கள் உற்பத்தி ஆகாமல் இருக்கும்பொழுது, சமுதாயத்திற்குள்ளே பங்கு போட்டுக்கொள்ளும்பொழுது, ஒரு பக்கத்தில் ஊதியத்தை உயர்த்தினால், மறு பக்கத்தில் பொருளாதார பற்றுக்குறை அதிகமாக ஏற்படும். இன்றைக்கு எல்லோருடைய குறைகளையும் நீக்குகின்ற அடிப்படையில் எந்த அளவுக்கு விவசாயத் துறையில் பொருள் உற்பத்தி அதிகரிக்கிறதோ, தொழில் துறையில் பொருள் உற்பத்தி அதிகரிக்கிறதோ, அந்த அளவுக்குத்தான் இந்தப் பிரச்னையை தீர்க்க முடியும். திட்டங்களுக்கு முதல் இடம் கொடுத்து அவைகளை நிறைவேற்றுவதன் மூலமாகத்தான் உற்பத்தியை பெருக்க முடியும். திட்டரீதியிலே உற்பத்தியை பெருக்குகின்ற அடிப்படையில் நாம் காரியங்களைச் செய்துதான் இந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியுமே தவிர, இப்பொழுது தற்கால சாந்தியாக என்ன நடவடிக்கை எடுத்தாலும்கூட, கடைசியிலே நம்முடைய பிரச்னைகளெல்லாம் தீர, உணவு உற்பத்தி, மற்ற பொருள்களின் உற்பத்தி அதிகரிக்கவேண்டும். எல்லோருடைய குறைகளை தீர்ப்பதற்கு உற்பத்தியை பெருக்கவேண்டுமென்ற முறையில்தான்

திட்டங்களை வகுத்து, அவைகளுக்கு முதல் இடம் கொடுத்து நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லுகிறோம். எதிர்க் கட்சி தலைவர் அவர்கள் சொன்னது போல, திட்டத்தில் 5 கோடி ரூபாயை நிறுத்திவிட்டால், அந்த அளவுக்கு திட்ட வேலை குறைந்து, உற்பத்தியும் குறைந்துவிடும். இப் பொழுதே நாம் போட்டிருக்கும் அளவுக்கு லட்சியங்களை அடையமுடியாமல் இருக்கிறது. அப்படியிருக்கும்பொழுது கோடிக் கணக்கில் திட்டங்களை குறைத்துவிட்டால், அந்த அளவுக்கு உற்பத்தி குறையும், நம்முடைய பிரச்னை நீடித்துக்கொண்டேதான் இருக்கும். அதை சமீப காலத்தில் தீர்க்க முடியாது. என்னைப் பொறுத்தவரையில், திட்டங்களுக்கு முதல் இடம் கொடுத்து அவைகளை வெற்றிகரமாக நிறைவேற்றுவதன் மூலம் தான் எல்லோருக்கும் இருக்கக்கூடிய பிரச்னையைத் தீர்க்க முடியும், பற்றுக்குறை தீர்க்க முடியும் என்ற அடிப்படையிலேதான் இந்தப் பிரச்னையை அணுக முடியும் என்று நான் கருதுகிறேன். ஆனால், எதிர்க்கட்சித் தலைவர் சொல்லுவதுபோல் திட்டத்தை நிறுத்திக்கொண்டு அந்தப் பணத்தை பிரித்துக்கொடுத்துவிட்டால் இந்தப் பிரச்னையை தீர்த்துவிட முடியாது. மேலும் உற்பத்தி குறையத்தான் செய்யும்.

சர்க்கார் ஊழியர்களுடைய மனது திருப்தி அடையாவிட்டால் எப்படி திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற முடியும் என்பதுபற்றி பேசப் பட்டது. திருப்தி நமக்கு எந்தக் காலத்திலும் ஏற்படப்போவதில்லை. திருப்தி ஏற்பட்டுவிட்டால், வாழ்க்கையில் முன்னேற்றம் இருக்காது. இன்றைக்கு நமக்கு குறைகள் இருக்கின்றன, குறைகள் சீக்கிரம் தீர வேண்டும் என்பதற்காக நாம் துரிதமாக திட்டங்களை நிறைவேற்ற கடமைப் பட்டிருக்கிறோம் என்ற சூழ்நிலை ஏற்படுவது அவசியம். முக்கியமாக சர்க்கார் ஊழியர்களாக இருந்தாலும் சரி, தொழிலாளிகளாக இருந் தாலும் சரி, முதலாளிகளும்கூட, எல்லோருமே உற்பத்தி பெருகுவதற்கு என்னென்ன காரியங்களை உடனடியாகச் செய்யவேண்டுமோ, அவைகளை ஏற்று நடத்துவதற்கு நாம் முன்வரவேண்டும் என்கின்ற முறையில் முன் வந்து உற்பத்தியை பெருக்க எல்லோரும் எல்லாவித முயற்சிகளையும் எடுத்துக்கொள்வதன்மூலம்தான் இந்த அடிப்படை பிரச்னையைத் தீர்க்க முடியும். உடனடியாக ஒரு கமிட்டி நியமிக்க வேண்டும் என்ற தீர்மானத்தை வற்புறுத்தாமல், மத்திய சம்பளக் கமிஷன் அறிக்கை வெளிவந்த உடனேயே இதுபற்றி ஆலோசனை செய்து, அவசியமானால் எல்லா கட்சித் தலைவர்களையும் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கலாம். அப்பொழுது நாம் எல்லோரும் இந்தப் பிரச்னைகளையெல்லாம் நல்ல முறையில் பரிசிலனை செய்து பார்த்து, எப்படி மற்ற துறைகளிலே ஒன்றுபட்ட ஒரு திட்டத்தை வகுக்க முடிந்ததோ, அதே மாதிரி இந்தத் துறையிலும் ஒரு ஒன்றுபட்ட திட்டத்தை வகுக்க முடியும் என்கின்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. உங்களுடைய திறமையை பயன்படுத்திக் கொள்ளக்கூடாது என்பதில்லை. உங்களுடைய திறமையை பயன்படுத்திக் கொள்ளுவதன்மூலம்தான் இந்தப் பிரச்னையை தீர்க்க முடியும் என்பதை நான் நன்றாக உணர்ந்திருக்கிறேன். எதிர்க்கட்சித் தலைவர்கள், எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் இவர்களுடைய ஆலோசனைகளையெல்லாம் கேட்டு, தக்க காலத்தில் இந்தப் பிரச்னையை அணுகுவதுதான் நல்லது என்ற அடிப்படையில், தற்பொழுது இந்தத் தீர்மானத்தை வற்புறுத்தவேண்டாம் என்று ஸ்ரீ கலியாணசுந்தரம் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். அவர்கள் ஏதாவது விளக்கம் சொல்லவேண்டியிருந்தால் சொல்லிக்கொள்ளலாம். ஆனால், தீர்மானத்தை வற்புறுத்த வேண்டாம் என்று அவர்களைக் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் இந்தத் தீர்மானத்தை வற்புறுத்த வேண்டாம் என்று இரண்டு நாட்களில் பிரசங்கம் செய்தார்கள். அவர்கள் பிரசங்கத்தில் இருக்கக்கூடிய சில கருத்துக்களிலுள்ள முரண்பாடுகளை நான் எடுத்துக்காட்டாமல் இருக்க முடியவில்லை. கமிட்டி நியமிப்பதற்கு அவசியம் ஏற்படலாம், ஆனால் இப்பொழுது தக்க சமயம் அல்ல என்று

அவர்கள் கருதுகிருர்கள். கமிட்டி அமைப்பது எப்பொழுது பொருத்த மாக இருக்கும் என்பதில் கருத்து வேற்றுமை இருக்கலாம். என்னுடைய அபிப்பிராயம் என்னவென்ருல், இம்மாதிரி கமிட்டி அமைப்பது சரி யென்று பட்டால், அது இப்பொழுதே செய்யப்படவேண்டும் என்பதுதான். இரண்டாவது சம்பளக் கமிஷன் சிபார்சுகள் செய்துவிட்டபிறகு நாம் கமிட்டி அமைப்பதில் என்ன பலன் ஏற்படும் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இரண்டாவது சம்பளக் கமிஷன் தங்களுடைய சிபார்சுகளை செய்வதற்கு முன்னதாக, நாம் கமிட்டியை அமைத்து, இந்த சபையில் இருக்கக்கூடிய பல கட்சிகள் ஒன்றுபட்டு அறிவிக்கக்கூடிய கருத்துகள் இவை என்று அவர்கள் முன்னிலையில் இந்த கருத்துக்களை வைத்தால், அவர்கள் சிபார்சுகள் செய்வதற்கு முன்ஞல் இந்தப் பிரச்னையை தீர்ப்பதற்கான மார்க் கங்களையும் அவர்கள் கோடிட்டுக்காட்ட முடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது.

10-50 a.m. முதல் சம்பளக் கமிஷன் சிபாரிசு செய்த காலத்தில் ஒரு தவறு ஏற்பட்டு விட்டதாக கனம் நிதி அமைச்சர் அவர்கள் நாஷனல் டெவலப்மெண்ட் கவுன்சிலுக்கு கொடுத்திருக்கக்கூடிய அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிருர். அவர் செய்த தவறு என்ன? அவர் சர்க்காருக்கு என்ன எழுதி யிருக்கிருர். அவர் செய்த தவறைப்பற்றி நான் விளக்கம் தெரிவிக்க விரும்பவில்லை. அதற்கு எந்தவிதமான உள்நோக்கமும் கற்பிக்க விரும்ப வில்லை. அவரே கொடுத்திருக்கக்கூடிய அறிக்கையில் என்ன சொல்லி யிருக்கிருர் என்பதை மட்டும் பார்க்கவேண்டும். அவர் கொடுத்திருக்கக் கூடிய அறிக்கையைப் பார்த்தால்

"A major mistake was committed ten years ago when the Central Government accepted the recommendations of the First Pay Commission and set a pace which the State Governments could not follow"

என்று சொல்லியிருக்கிருர். அது நியாயமான குறைபாடுதான். அது தவறுதான் என்றும் சொல்லியிருக்கிருர். அப்பொழுதே அவர்கள் என்ன செய்திருக்க வேண்டும்? மத்திய சர்க்காருடைய ஊழியர் களுக்கும் ராஜ்ய சர்க்காருடைய ஊழியர்களுக்கும் ஒரே மாதிரியான சம்பளம் இருக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்க வேண்டும். அந்த சிபாரிசின் அடிப்படையில் ராஜ்ய சர்க்காருடைய ஊழியர்களின் அடிப்படை சம்பளத்தை உயர்த்துவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்க வேண்டும். இதற்கு முன் இருந்த நிதி மந்திரி இப்படிப்பட்ட ஒரு தவறுதலை செய்துவிட்டதால்தான் இப்படிப்பட்ட ஒரு பெரிய சிக்கல் ஏற்பட்டு, அது இப்பொழுதும் இருந்துகொண்டே இருக்கிறது. அப்படிப்பட்ட குறையைத் தீர்க்க வேண்டும் என்பதுதான் இந்த தீர்மானத் தின் நோக்கம். அப்படிப்பட்ட தவறு செய்யாமல் இருந்திருந்தால், ராஜ்ய சர்க்காருடைய ஊழியர்களுக்கு அதிகப்படியான சம்பள உயர்வு கொடுக்கப்பட வேண்டும் என்று சிபாரிசு செய்திருந்தால் ராஜ்ய சர்க்கார் ஊழியர்கள் உள்பட விவசாயிகளுடையவும், தொழிலாளர்களுடையவும் பிரச்னைக ளெல்லாம் ஓரளவு தீர்ந்து போயிருக்கும் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். அப்பொழுதுள்ள நிதி அமைச்சர் அவர்கள் என்ன நோக்கத்தைத் தெரிவித்தார், என்ன எழுதிஞர் என்பதைப்பற்றி தெரிந்து கொள்ளவேண்டுமாஞல் கனம் நிதி அமைச்சர் அவர்கள் பழைய ரிகார்டு களை, பைல்களைப் பார்த்தால் நன்ருகத் தெரியவரும். ஆகவே அப்படிப் பட்ட தவறு இப்பொழுதும் நடைபெருமல் இருப்பதற்காகவும் இந்த சமயத்திலாவது தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகவும் இரண்டாவது சம்பள கமிஷன் சிபாரிசு முடிவதற்கு முன்னதாகவே இதைப்பற்றி நாம் பரிசீலனை செய்து அதை அவர்களுக்கு அனுப்பி வைத்து இரண்டாவது சம்பள கமிஷன் அவர்கள் இதைப்பற்றி பரிசீலனை செய்யவும் அதன்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ளவும் நம் முடைய சிபாரிசின் பேரில் அவர்கள் தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகவும்தான் இந்த தீர்மானத்தை இப்பொழுது கொடுத்திருக்கிறேன். அவர்கள் தங்களுடைய சிபாரிசுகளைக் கொடுப்பதற்கு முன்னதாகவே நம்முடைய யோசனையையும் எடுத்து பரிசீலனை செய்ய வேண்டுமென்பதற்காகவேதான் இந்த தீர்மானம் கொடுக்கப்பட்டி

ருக்கிறது. அதற்காகத்தான் இந்த சமயம் பார்த்து இதைக் கொடுத் திருக்கிறேன். அதை இந்த சபை ஏற்றுக்கொண்டு இதைப்பற்றி வற் புறுத்த வேண்டும் என்பதற்காகத்தான் இந்த சமயத்தில் இதைக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதை கனம் நிதி மந்திரி அவர்கள் ஏற்றுக் கொள்ளுவார் என்று எதிர் பார்த்தேன். ஆனால் இதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று ஆட்சேபனை சொல்வதானது எனக்கு ஆச்சர்யத்தைத் தான் கொடுக்கிறது. இந்த சமயத்தில் அப்படி ஆட்சேபிப்பது சரியல்ல என்பது என்னுடைய அபிப்பிராயம். இப்பொழுது கொடுத்திருக்கக்கூடிய "terms of reference" மத்திய சர்க்காரே கொடுத்திருக்கிறார்கள். அப்பொழுது ராஜ்ய சர்க்காருடைய சிப்பந்திகளின் நிலைமையை கணக்கில் எடுத்துக்கொண்டு அந்த அடிப்படையில் சிபாரிசு செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறது. அப்படி சிபாரிசு செய்தால் அவர் களுக்கு உபயோககரமாக இருக்கும். இப்பொது பார்த்தால் ராஜ்ய சர்க் காருடைய ஊழியர்களின் சம்பளம் மத்திய சர்க்காருடைய ஊழியர்களின் சம்பளத்திற்கு குறைவாக இருக்கிறது. இப்படிப்பட்ட வித்யாசம் இல்லாத அடிப்படையில் நாம் இப்பொழுதே சிபாரிசு செய்ய வேண்டும். இந்த வித்யாசத்தை கனம் மந்திரி அவர்கள் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். இரண்டாவது சம்பளக் கமிஷனுடைய சிபாரிசு வருவதற்கு முன்னதாக ராஜ்ய சர்க்கார் ஊழியர்களுக்கு அதிகமாகக் கொடுக்க வேண்டும் என்று கிளர்ச்சி செய்ய வேண்டியது அவசியம். இது ஒரு சாதாரண பிரச்னை அல்ல என்பதை கனம் நிதி மந்திரி அவர்களே ஒப்புக்கொண் டிருக்கிறார். இது ஒரு தேசீய பிரச்னை என்பதையும் அவர் வலியுறுத்தி யிருக்கிறார். இது ஒரு தேசிய பிரச்னைதான். இது தீர்க்கப்பட வேண்டும். தேசத்தில் இருக்கும் எல்லா சக்திகளையும் ஒன்று திரட்டி ஆலோசனை செய்து இந்த சிக்கலைத் தீர்க்க வேண்டும், என்பதை கனம் மந்திரி அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

உணவு உற்பத்தி பெருகிவிட்டால் எல்லா பிரச்னையும் தீர்ந்து விடும் என்று கனம் நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார். உற்பத்தி பெருக வேண்டியது அவசியம் தான். உற்பத்தி பெருகினால் தேசம் முன்னேற்றம் அடையும் என்பதும் வாஸ்தவம் தான். உற்பத்தி பெருகாமல் இருந்தால் எந்த தேசமும் முன்னேற்றமடைய முடியாது. நம்முடைய திறமையால் மட்டும் தேசம் முன்னேற்றமடைந்து விடும் என்பதல்ல. இப்படி அரசியல் வாதிகளும் அரசாங்கத்தில் இருக்கக்கூடிய மந்திரிகளும் நினைத்து விட முடியாது. தேசத்திலுள்ள உழைப்பாளிகள், மக்கள் எல்லோரும் சேர்ந்து உற்பத்தியைப் பெருக்கினால்தான் தேசம் முன்னேற்றமடைய முடியும். அந்த அடிப்படை உண்மைதான். ஆனால் ராஜ்யத்திலுள்ள நிலைமை என்ன என்பதைப் பார்க்க வேண்டும். நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் தன்னுடைய பட்ஜெட் பிரசங்கத்தில் என்ன குறிப்பிட்டிருக்கிறார் என்பதையும் பார்க்கவேண்டும். நம்முடைய ராஜ்யத்தில் 46 லட்சம் டன் உணவு அதிகப்படியாக உற்பத்தியாகி உற்பத்தி பெருகி இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார். கடந்த ஆறு வருஷ காலத்தில் 12 லட்சம் டன் உணவு உற்பத்தி பெருகி இருக்கிறது என்றும் சொல்லுகிறார். இவ்வளவு தூரம் உணவு உற்பத்தி பெருகியிருந்தும்கூட கடந்த நாலைந்து மாதமாக பார்த்தால் எல்லா பொருள்களின் விலைவாசிகள் உயர்ந்திருக் கின்றன என்பது நன்றாகத் தெரியவரும். உற்பத்தி பெருகியிருந்தும்கூட விலைவாசியின் உயர்வுக்குக் காரணம் என்ன ? படி 11 அணா என்று விற்கப்பட்ட அரிசி இப்பொழுது ரூ. 1-2-6 என்று விற்கப்படுகிறது. தினசரி வாழ்க்கைக்குத் தேவையான ஒவ்வொரு பொருளின் விலையும் நாளுக்கு நாள் உயர்ந்துகொண்டே போகிறது. அதற்குக் காரணம் என்ன ? தினசரி வாழ்க்கைக்கு அரிசி, பருப்பு, எண்ணை போன்ற அத்தியாவசியமான பொருள்களின் விலைவாசி எவ்வளவு தூரம் உயர்ந் திருக்கிறது என்பதைப் பார்க்க வேண்டும். அதற்குக் காரணம் என்ன? மற்றும் சில பொருள்களின் விலை இரண்டு மடங்கு உயர்ந்திருக்கிறது. இதற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டு பிடித்து அதற்கு வேண்டிய

நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்கொண்டதா? உற்பத்தி பெருகி வரும் காலத்தில் விலைவாசிகள் உயருவதற்கு காரணம் என்ன? **Wages chasing the prices and the prices chasing the wages** தான் காரணம் என்று கனம் மந்திரி சொல்லுகிறார். இப்படிப்பட்ட நிலைமை ஏற்படக்கூடாது என்றும் அவர் சொன்னார். இப்படி விலைவாசி உயர்வதைத் தடுக்க அரசாங்கத்திற்கு சக்தி இல்லையா? இது மனித சக்திக்கு அப்பாற்பட்டதா? கனம் நிதி அமைச்சர் அவர்கள் தன்னுடைய திறைமையை உபயோகித்து இதை ஏன் கட்டுப்படுத்தக்கூடாது என்று கேட்கிறேன். இதைப் பற்றி பரிசீலனை செய்து அதற்கு வேண்டிய பரிகாரத்தைக் கண்டுபிடிக்க வேண்டிய நடவடிக்கையை ஏன் எடுத்துக் கொள்ளக்கூடாது என்று கேட்கிறேன். அப்படிப்பட்ட ஒரு நடவடிக்கையை எடுத்துக்கொண்டால் ராஜ்யத்திலுள்ள சர்க்கார் ஊழியர்களுடையவும், பாட்டாளி மக்களுடையவும், விவசாயிகளுடையவும் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு சாத்தியமாகும் என்பதை அவருக்கு நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். "வேஜஸ் இன் கைண்ட் அண்ட் வேஜஸ் இன் மணி" என்று சொல்லுகிறார். இதனால் வாங்கும் சக்தி குறையாது. அதனால் எந்த விதமான பிரயோசனமும் இல்லை. அதனால் விலைவாசிகள் குறையாது. வாழ்க்கைத் தரம் உயராது. வாழ்க்கைத் தரம் உயர வேண்டுமானால் அவர்களுக்கு தேவையான சம்பளம் கொடுக்கப்பட வேண்டும். அவர்களுடைய சம்பளம் குறையாமல் தங்களுக்கு தேவையான பொருள்களை வாங்குவதற்கு அவர்களுக்கு சக்தி இருக்க வேண்டும்.

வாழ்க்கைத் தரம் உயர்ந்தால் வாழ்க்கைத்தர புள்ளியும் உயருகிறது. அதற்குத் தக்கபடி அவர்களுக்கு பஞ்சப்படி கொடுக்க வேண்டும். சர்க்காருடைய உத்தியோகஸ்தர்களாக இருந்தாலும் சரி, மத்தியதர உழைப்பாளியாக இருந்தாலும் சரி நம்முடைய ராஜ்யம் சம்பந்தப்பட்ட மட்டில் அவர்களுடைய வாழ்க்கைத் தர புள்ளி விவரத்திற்குத் தக்கபடி அவர்களுக்கு பஞ்சப்படி கொடுக்க வேண்டும். இப்படிப்பட்ட ஒரு கொள்கையை தேசம் பூராவுமே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இது ஒரு தேசிய பிரச்னையாகவும் கருதி வருகிறார்கள். இது கூலி உயர்வு பிரச்னை. இது தீர்க்கப்பட வேண்டும். ராஜ்ய சர்க்காருடைய ஊழியர்கள் சம்பந்தப்பட்ட மட்டில் இந்தப் பிரச்னை இப்பொழுது இருக்கிறது என்பதை அவர்கள் சிந்தித்து பார்க்க வேண்டும். தேசம் பூராவுமே விலைவாசி பெருவாரியாக உயர்ந்திருக்கிறது. அதற்குத்தக்கபடி பஞ்சப்படியும் உயர வேண்டும். இந்த கொள்கையை ஏற்கனவே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். சமீபத்தில் மின்சார இலாகா சம்பந்தமாக பேச்சு வார்த்தையை நடத்த ஒரு கமிட்டியை நியமித்தார்கள். அந்தக் கமிட்டிகூட இப்படித்தான் சிபார்சு செய்திருக்கிறது. 100 என்பதை அடிப்படையாகக் கொண்டு எந்த அளவுக்கு விலைவாசி உயர்ந்திருக்கிறதோ அந்த அளவுக்கு பஞ்சப்படியை உயர்த்திக்கொடுக்க வேண்டும். ஒரு எண் புள்ளி உயர்வுக்கு 2½ அணு பஞ்சப்படி உயர்த்திக்கொடுக்க வேண்டும் என்ற கொள்கைப்படி சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். இது போன்று பஞ்சாலை தொழிலிலும் சரி, எல்லா மற்ற தொழிலிலும் சரி விலைவாசி உயர்வுக்குத்தக்கபடி பஞ்சப்படியை உயர்த்திக்கொடுக்க வேண்டும். இப்படிப்பட்ட ஒரு கொள்கையை தேசம் பூராவும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அம்மாதிரி ஐந்து பாயின்ட் உயர்ந்தால் ஐந்து ரூபாய் உயர்த்திக்கொடுக்க வேண்டும் என்றும் சிபாரிசு செய்திருக்கிறார்கள். விலைவாசி உயர்வுக்குத் தக்கபடி பஞ்சப்படி கொடுத்தால்தான் உண்மையான சம்பளத்தில் காலம் கழிக்க முடியும். இல்லாவிட்டால் வாங்கும் சக்தி குறைந்து தான் போகும். அதை உணர்ந்து தான் இது வரைக்கும் பஞ்சப்படியை உயர்த்திக்கொடுக்க வேண்டும் என்று சிபார்சு செய்திருக்கிறார்கள். அதன் படி தான் விலைவாசி ஏற்றத்திற்கு தக்கப்படி பஞ்சப்படி உயர வேண்டும் என்கிற கொள்கையை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், நம்முடைய ராஜ்ய சர்க்காரின் கீழ் வேலை செய்யும் ஊழியர்களுக்கு மட்டும் விலைவாசி எவ்வளவு உயர்ந்தாலும் சரி, அதற்கு ஏற்றவாறு சம்பளமோ பஞ்சப்படியோ

11 a.m.

உயருவது என்ற கொள்கை ஒப்புக்கொள்ளப்படவில்லை. பெருத்த கிளர்ச்சிக்குப் பிறகு, பெருத்த தகராறுக்குப் பிறகு, ஐந்து ரூபாய், பத்து ரூபாய் என்ற முறையில் அவ்வப்போது பஞ்சப்படி உயர்த்திக் கொடுக்கப் பட்டிருக்கிறதே தவிர, விலைவாசிக்குத் தகுந்த மாதிரி கொடுக்கப்பட வில்லை. ஆகையால், இந்த அதிருப்தி நீடித்துக்கொண்டு தான் இருக்கும் என்பதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

சம்பளத்தை எவ்வளவு தான் ஜாஸ்தி பண்ணி விட்டாலும், நிர்வாகத் திறமை உயர்ந்துவிடுமா என்று நிதி அமைச்சர் அவர்கள் கேட்டார்கள். சம்பளத்தை அதிகப்படுத்துவதினாலே நிர்வாகத் திறமை தானாகவே உயர்ந்துவிடும் என்று நான் முன்பு செய்த என்னுடைய பேச்சிலும் குறிப்பிடவில்லை. இப்பொழுதும் அந்தக் கருத்து எனக்கு இல்லை. நிர்வாகத் திறமை குறைவதற்குக் காரணம் என்ன ? பொதுவாக இன்று மொழியிலே இருக்கும் கோளாறு அதற்குக் காரணம் என்று அவர்கள் சொன்னார்கள். அது என்னவோ அடிப்படையான உண்மை தான். ஆட்சி மொழியும் போதனா மொழியும் ஒன்றாக இருந்து, நம்முடைய கல்வியினுடைய தரமும் உயர்ந்தால்தான், நிர்வாகத் திறமை உயரும் என்பது ஒரு அடிப்படையான உண்மை. ஆனால், இன்றைக்கு இருக்கும் சூழ்நிலையில் கூட, திறமைசாலிகள் எந்த உத்தியோகத்தை நோக்கிப் போகிறார்கள் என்பதை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன். எஸ்.எஸ்.எல்.ஸி. படித்தவர்களை எடுத்துக்கொள்வோம். தமிழிலே படித்தவர்களாகவே இருக்கட்டும். அவர்களுக்குள் திறமைசாலிகளாக இருக்கின்றவர்கள் ரயில்வே உத்தியோகத்திற்குப் போகலாமா, தபால் இலாகா உத்தியோகத்திற்குப் போகலாமா அல்லது வெளியே ஏதாவது தனிப்பட்ட நபர்கள் நடத்துகிற கம்பெனிகளுக்குச் செல்லலாமா என்பதில் படித்த வாலிபர்களிடத்தில் நோக்கம் இருக்கிறதே தவிர, ராஜ்ய சர்க்கார் உத்தியோகத்திற்கு வருவதில் நோக்கம் இல்லாமல் இருக்கிறது. வேறு எங்கும் வேலை கிடைக்காவிட்டால், சர்விஸ் கமிஷனுக்கு ஒரு மனுப் போட்டு வைப்போம் என்று வருகிறார்கள் என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளவேண்டுமென்று கருதுகிறேன். ஏனென்றால், ராஜ்ய சர்க்காரின் கீழ் வேலை செய்கின்றவர்களுடைய சம்பளம் வெகு குறைவாக இருக்கிறது. வாழ்க்கை வசதிகளும் வெகு குறைவாக இருப்பதால், தனியார் தொழிலுக்குப்போனால் அதிகச் சம்பளம் கிடைக்கும், மத்திய சர்க்கார் வேலைக்குப் போனால் அதிகச் சம்பளம் கிடைக்கும் என்று சொல்லி, அதிகத் திறமையுள்ளவர்களை மத்திய சர்க்காரும், தனியாரும் எடுத்துக்கொண்டு போய்விடுகிறார்கள். மற்றவர்கள்தான் நம்முடைய ராஜ்ய சர்க்கார் உத்தியோகத்திற்கு வரக்கூடிய நிலைமை இருக்கிறது. ஏறத்தாழ சம்பள விகிதமும் வாழ்க்கை வசதிகளும் ஒரே மாதிரியாக இருக்குமானால், ராஜ்ய சர்க்காரின் கீழ் வேலை பார்த்தாலும் சரி, மத்திய சர்க்காரின் கீழ் வேலை பார்த்தாலும்சரி, உத்தியோகத்திற்கு வரக்கூடியவர்கள் ஒரே மாதிரி முயற்சி செய்வார்கள் என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். அப்படிப்பட்ட விகிதங்கள் இல்லாத இந்த நிலைமையில், மத்திய சர்க்காரிடத்திலும், தபால் இலாகாவிலும், தனியாரிடத்திலும் வேலை கிடைக்காதவர்கள் மட்டும் நம்முடைய ராஜ்ய சர்க்கார் வேலைகளுக்கு மனுப்போட்டால், அவர்களுக்குள்ளேதான் நாம் பொறுக்கி யெடுக்க வேண்டும் என்ற துர்ப்பாக்கியமான நிலைமையில் நம்முடைய ராஜ்ய சர்க்காருக்கு திறமைக்குறைவு இன்னும் அதிகமாகிறது என்பதை நான் எடுத்துக் காட்டுகிறேன். திறமைக் குறைவு அடியோடு போக வேண்டுமென்று சொன்னால், அடிப்படையான நிலைமையில் மாறுதல் வரவேண்டியது அவசியம். ஆனால், சாத்தியமான அளவுக்கு சம்பளம், பஞ்சப்படி முதலியவற்றில் இவ்வளவு ஏற்றத்தாழ்வு இல்லாமல் இருந்தால் பலரும் ராஜ்ய சர்க்கார் உத்தியோகத்திற்கும் வருவதற்கு முயற்சி செய்வார்கள். ரயில்வே இலாகாவாக இருந்தாலும் சரி, தபால் இலாகாவாக இருந்தாலும் சரி, அவைகளில் மனுப்போட்டு, வேறு மொழி பேசும்

இடங்களுக்கு மாற்றப்படக்கூடிய ஆபத்து இருந்தபோதிலுங்கூட, அந்த இலாகாக்களுக்குப் போவது மேல் என்று நினைக்கிறார்கள். ஆனால், உள்ளூரில் தாலூகா ஆபீசிலும், கலெக்டர் ஆபீசிலும் வேலை செய்வதை அவ்வளவு வசதியாக படித்த வாலிபர்கள் கருதவில்லை. இன்று காலை டாக்டர்கள் விஷயத்தில் ரெவினியு அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும் போதுகூட, சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் டாக்டர்கள் ராஜினாமா செய்துவிட்டு, வெளியே தங்களுடைய வருமானத்தை அபிவிருத்தி செய்துகொள்வதற்குப் போகிறார்கள் என்று குறிப்பிட்டார்கள். அது உண்மை தான். சர்க்காருடைய சம்பள விகிதம் குறைவாக இருப்பதால், வெளியே சென்று சொந்தமாக அவர்கள் ப்ராக்டிஸ் பண்ணினால் அதிக வருமானம் கிடைக்கும் என்ற நிலைமையில் சர்க்கார் உத்தியோகத்திற்கு திறமைசாலிகள் வருவது சாத்தியம் இல்லாமல் போய்விடுகிறது. இந்த உண்மையையெல்லாம் நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் மனதில் கொண்டு, நம்முடைய ராஜ்ய சர்க்காருடைய சம்பளம், பஞ்சப்படி இன்னும் போக்குவரத்து அலவன்ஸ் இவையெல்லாம் கிட்டத்தட்ட மத்திய சர்க்கார் கொடுக்கக்கூடிய அளவுக்காவது கொண்டுவரவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

ஷார்ட்ஹாண்டு டைப்பிஸ்ட் நிலைமையை எடுத்துப் பார்த்தால், தனிப் பட்ட நபர்கள் ரூ. 250 வரையில் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், நம்முடைய ராஜ்ய சர்க்காரின் சம்பள விகிதம் வெகு குறைவாக இருக்கிறது. ஆகவே, இந்த சம்பள விஷயத்தில் இருக்கும் ஏற்றத் தாழ்வானது திறமைசாலிகள் ராஜ்ய சர்க்காருடைய வேலைக்கு வருவதற்குத் தடையாக இருக்கிறது என்பதையும், அதிகத் திறமையுடையவர்கள், அதிக உற்சாகம் உடையவர்கள் பிற வேலையைத் தேடிக்கொள்ளக்கூடிய நிலைமை இருக்கிறது என்பதையும் நிதி அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஆகையால், திறமை சம்பந்தப்பட்ட மட்டில், வெறும் சம்பள உயர்வால் திறமை வந்துவிடும் என்று நான் எடுத்துக் காட்டியதாக, நான் சொல்லாததைச் சொல்லி என் மீது குறை சொல்ல வேண்டாம் என்று நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

விலைவாசிகள் குறைக்கப்படவேண்டும் என்பதை நான் வரவேற்கிறேன். ரூபா, அணா, பைசாவில் சம்பளம் உயரவேண்டுமென்று யாரும் கேட்பார்கள் என்று நான் நினைக்கவில்லை. வாழ்க்கை வசதிக்கான பொருள்களை அதிக விலை கொடுக்கவேண்டிய அவசியமில்லாமல் கிடைக்கச் செய்து, கூடுதலாக வீடு கட்டிக் கொடுத்து அவர்களை சௌகரியமாக வைத்து வேலை வாங்கினால், உற்சாகமாக அவர்கள் வேலை செய்வார்கள், கடன் தொல்லை இல்லாமல் இருப்பதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருவதாகச் சொல்லியிருக்கிறார்கள். அது நல்ல செய்தி ; உற்சாகம் அளிக்கக்கூடிய நல்ல செய்தி. சர்க்கார் பரிகாரம் செய்யப் போகிறார்கள், கடன் நிவாரணம் அளிப்பதற்கு உதவி செய்வோம் என்று சொல்கிறார்கள். அது சம்பந்தமாக ஒரு வேண்டு கோளை உடனடியாக கவனிக்கவேண்டுமென்று, அவர்கள் குறிப்பிட்டதினால், நான் குறிப்பிட விரும்புகிறேன்.

பண்டிகைகளுக்காக ரூ. 75-க்கு அதிகப்படாமல் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு கொடுப்பது என்ற திட்டம் இரண்டு வருஷங்களுக்கு முன்னால் ஆரம்பிக்கப்பட்டது. அது கொடுத்து வரப்படுகிறது. முதலில் பண்டிகைக் காக ரூ. 75 கடன் கொடுத்து, மாதா மாதம் சம்பளத்திலிருந்து அந்தக் கடனுக்காக ஒரு தொகையை பிடித்தம் செய்துகொண்டு வரும்போது, அடுத்த பண்டிகை வரும்போது, கடனைத் திருப்பிக் கொடுத்த அளவுக்கு சேர்த்து, ரூ. 75 என்ற அளவுக்கு கடனைப் புதுப்பித்துக் கொடுக்கிறார்கள். ரூ. 75 என்பதும் எல்லோருக்கும் கொடுக்கப்படுவதில்லை. குறைவான சம்பளம் இருப்பவர்களுக்கு ஒரு மாதம் சம்பளத்திற்கு மேற்படாத அளவுக்குத்தான் பண்டிகைக்காக கடன் கொடுக்கப்படுகிறது. ஏற்கனவே பாக்கி இருக்குமானால், அப்பேர்பட்டவர்களுக்கு அந்த பாக்கித் தொகையைக் கழித்துக்கொண்டு மிச்சம் இருந்தால்தான் கொடுக்கப்படும் என்ற நிலைமை

இருக்கிறது. சிலருக்கு ரூ. 15, ரூ. 20 கூட கிடைக்க முடியாமல் இருக்கிறது. ஆகவே, அவர்கள் வெளியே போய் கடன் வாங்க வேண்டியிருக்கிறது. ஏன் இதை வற்புறுத்திச் சொல்கிறேன் என்றால், மார்வாடிகளிடம் இரண்டணு வட்டிக்கு கடன் வாங்காமல் அவர்களை காப்பாற்றவேண்டும். தீபாவளி, பொங்கல், கிருஸ்துமஸ், ரம்ஸான் போன்ற பண்டிகை காலத்தில் அவர்களுக்கு கடன் வாங்க அவசியம் ஏற்படுகிறது. குடும்பத்தைக் கொஞ்சம் உற்சாகப்படுத்தவேண்டும் என்ற எண்ணத்தினால் எப்படியாவது இரண்டணு, நாலணு வட்டிக்கு கடன் வாங்கியாவது, பண்டிகையைக் கொண்டாடுகிறார்கள். கடன் பட்டாவது பண்டிகை கொண்டாடுவானேன் என்று கேட்கலாம். ஆனால், கடன் வாங்கியாவது பண்டிகையைக் கொண்டாடும் துர்ப்பாக்கியமான நிலைமை இருக்கத்தான் செய்கிறது. ஒரு முறை வட்டிக்காரனிடம் சிக்கிவிட்டால், அவர்கள் மீளுவது சாத்தியம் இல்லை. ஆகவே, ஒரு மாதச் சம்பளம் என்று இருப்பதை இரண்டு மாதச் சம்பளமாகவும், ரூ. 75 என்பதை ரூ. 100 என்றும் உயர்த்தி, வருகின்ற தீபாவளிப் பண்டிகையைக் கொண்டாடும் வகையில் சர்க்கார் சிப்பந்திகளுக்கு அட்வான்ஸாகக் கொடுத்தால், இந்தத் தீபாவளியையாவது மார்வாடிக்காரரிடம் கடன் வாங்காமல், சர்க்காரிடமிருந்து வட்டியில்லாக் கடன் வாங்கி கொண்டாடுவார்கள். அந்தக் கடனை சர்க்காருக்கு மாதா மாதம் சம்பளத்திலிருந்து திருப்பிக் கொடுத்துவிடுவார்கள். இப்படிச் செய்தால் ஒவ்வொரு வருஷமும் சாதாரண ப்யூன், லோயர் டிவிஷன் க்ளார்க், மற்ற அதிகாரிகள் உள்பட அவர்கள் நூறு ரூபாய் வரையில் சர்க்காரிடமிருந்து வட்டியில்லாமல் அட்வான்ஸ் பெற்றுக்கொண்டு பண்டிகை கொண்டாட முடியும். இரண்டணு, நாலணு வட்டிக்கு கடன் வாங்கவேண்டிய ஹிம்சையும் குறையும். இது நிதி அமைச்சருடைய கையிலே இருக்கிறது. அது செலவு அல்ல. ஏதோ இரண்டு மாதம், மூன்று மாதத்திற்குள் திருப்பிக் கொடுத்துவிடப்போகிறார்கள். இந்த யோசனையை நிதி அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டுமென்று நான் வலியுறுத்திக்கூற விரும்புகிறேன்.

சம்பளத்தை உயர்த்துவது ஒரு புறம் இருக்க, சர்விஸ் கண்டிஷன் சம்பந்தப்பட்ட வரையில் அமைச்சர் அவர்கள் கான்பிடென்ஷியல் பைல் சம்பந்தமாகக் குறிப்பிட்டார்கள். விதிகளையெல்லாம் பரிசீலனை செய்து நான்கு வால்யூம்களாக வெளியிட்டிருக்கிறோம், அவைகளில் ஏதாவது குறைபாடுகள் இருந்தால் எடுத்துக் காட்டுங்கள் என்று நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இருக்கலாம், ஆனால், இப்பொழுது செய்திருக்கும் விதிகளெல்லாம் பழைய விதிகளின் அடிப்படையில், இருப்பதால் அவைகளிலே இருக்கும் குறைபாடுகள் என்ன என்ன என்று நாங்கள் இன்னும் விரிவாக அதைப் பரிசீலனை செய்வதற்குச் சந்தர்ப்பம் இல்லை. விரிவாகப் பரிசீலனை பண்ணவில்லை. ஆனால், அவர்களிடம் நான் சொல்லிக்கொள்வது—அது சிறந்த வழியாக இருந்தபோதிலும் இந்தச் சபை முன்பு கொண்டுவந்து, சபையில் இருக்கும் சகல கருத்து உடையவர்களுக்கும் சந்தர்ப்பம் கொடுத்து, அவர்கள் கொண்டுவரும் திருத்தங்களை ஏற்றுக்கொள்ளாவிட்டாலுங்கூட, ஒரு விவாதத்திற்கு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் சட்டம் கொண்டுவரவேண்டுமென்று நான் கூறுகிறேன். இந்தச் சபையில் அத்தகைய சட்டம் வந்தாலும்கூட, நிதி அமைச்சர் அவர்கள் நாங்கள் சொல்வதை ஒத்துக்கொள்ளாவிட்டாலும், நாங்கள் கொடுத்திருக்கும் தீர்மானம் என்ன கதி ஆகும் என்று தெரியும். இதே விதிகளைக் கொண்டுவந்து, மெஜாரிடி பலத்தை வைத்துக்கொண்டு சட்டமாக நிறைவேற்றக்கூடிய சக்தி அவர்களுக்கு இருக்கிறது. ஆனால், கிடைக்கக்கூடிய அனுகூலம் ஸ்தூலமாகப் பரிசீலனை செய்து எங்களுடைய யோசனையைக் கொடுப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கும். அந்தச் சந்தர்ப்பத்தை ஏன் கொடுக்கவில்லை ? நாங்கள் உத்தியோகப் பற்றற்ற தீர்மானமாகக் கொண்டுவரலாம். ஆனால், ஒவ்வொரு வருஷமும் தீர்மானம் கொண்டுவந்து, ஐந்து வருஷம் நாங்கள் முயற்சி செய்தாலும், எங்களுக்கு அந்தச் சாத்தியப்பாடு கிடைக்காது. ஆகையால், நிதி அமைச்சரைக் கேட்டுக்கொள்வது, சட்டமாக ஆக்கும் முறையில், எந்த அடிப்படையில்

இருந்தாலும் சரி, பழைய விதிகள் அடிப்படையில் இருந்தாலும் சரி, திருத்தங்களை மாற்றவேண்டியிருந்தாலும் சரி, அதற்காக வேண்டிய எல்லா நடவடிக்கையையும் எடுக்கவேண்டும். சபை கமிட்டி போட்டு பரிசீலனை செய்யலாம். ஸ்தல-ஸ்தாபனம் சம்பந்தமாக பரிசீலனை செய்தது போல் எல்லாக் கட்சித் தலைவர்களையும் கொண்ட கமிட்டி போட்டு, இந்த விதிகளைப் பரிசீலனை செய்து, திருத்தங்கள் சொல்லி, சபையின் முன் கொண்டுவரலாம். அப்படியில்லாமல், திருத்தங்கள் பூராவும் படித்து விட்டு குறைபாடுகளைக் காட்டுங்கள் என்று சொல்வது சரியல்ல என்று நான் நினைக்கிறேன். ஆகையால், சட்டமாக்க உடனடியாக நடவடிக்கை எடுக்காவிட்டாலும், இதற்காக ஒரு தனி சட்டசபைக் கமிட்டி வைத்து அவர்கள் சொன்ன நான்கு வால்யூம்களை வைத்து பரிசீலனை செய்து அவர்கள் கொடுக்கும் யோசனைகளை ஆலோசனை செய்து, அதன்பிறகு அவசியம் இருந்தால் சட்டம் கொண்டுவரவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

11-10 a.m. Confidential file சம்பந்தப்பட்டமட்டில் சில மாறுதல்கள் செய் திருக்கிறார்கள் என்று அவர்கள் சொன்னார்கள். Confidential file-ஐ அடியோடு விட்டுவிடுவது சாத்தியமல்ல என்று அவர்கள் குறிப்பிட்டார்கள். ஒவ்வொரு உத்தியோகஸ்தரும், அவர்கள் எந்த அந்தஸ்தில் இருந்தாலும் சரி, அவர்களுடைய உண்மையான தகுதி என்ன, திறமை என்ன, யோக்கியதை என்ன என்பதைப் பரிசீலித்துத்தான் அவர்களுக்கு உத்தியோக உயர்வு கொடுக்கப்படவேண்டும் என்பதில் இரண்டு வித கருத்துக்கள் இருக்க முடியாது. அது எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய உண்மை தான். இந்த Confidential file இப்பொழுது வைத்திருக்கக்கூடிய முறையில் நல்லவர்கள் கெட்டவர்களாகவும், கெட்டவர்கள் நல்லவர்களாக வும் மாறக்கூடிய துர்பாக்கியமான நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. நம்முடைய ராஜ்ய சர்க்கார் சம்பந்தப்பட்டமட்டில் லோயர் டிவிஷன் கிளார்க்குகளிலிருந்து அதிகாரிகள் வரையில் Confidential file வைக்கப்பட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் சம்பந்தப்பட்டமட்டில் லோயர் டிவிஷன் குமாஸ்தாக்களுக்கெல்லாம் இது கிடையாது. இதை அறவே எடுத்துவிடவேண்டும். அப்படி எடுக்கமுடியாவிட்டாலும், அவர்களுடைய திறமை, தகுதியில் உள்ள குறைபாடு என்ன என்பதை சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அந்தந்த உத்தியோகஸ்தர்களுக்கு அறிவித்து, அவர்களுடைய ஆட்சேபனையை அறிந்து கொண்டுதான் Confidential file-ல் ரிக்கார்டு செய்யவேண்டும். இல்லா விட்டால் நல்ல திறமையான அஸிஸ்டெண்ட் இன்ஜினீர்களும் மற்றவர்களும், கொஞ்சம் சுயநலம் படைத்த அதிகாரிகளால் அடக்கி ஒடுக்கப்பட்டு, திறமைக் குறைவானவர்களாகக் கருதப்படும் துர்பாக்கியமான நிலைமை ஏற்படும். இப்பொழுது வைத்திருக்கக்கூடிய Confidential file முறை அக்கிரமமானது. அதை அடியோடு கைவிடவேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், 'நிதி நிலைமையை எப்படிச் சரிகட்டுவது' என்று சொன்னார்கள். நிதி நிலைமையை பொதுவாக அபிவிருத்தி செய்வதற்கான யோசனை வேறு. இப்பொழுது உடனடியாக இருக்கக்கூடிய இந்தப் பிரச்னையை எப்படித் தீர்ப்பது என்பது வேறு. இது அவசரமாகத் தீர்க்கப்படவேண்டிய விஷயம். இப்பொழுது விலை வாசிகள் ஏறி இருக்கின்றன. இந்தக் காலத்தில் சர்க்கார் ஊழியர்களிடையே வளர்ந்து இருக்கக்கூடிய அதிருப்தியின் காரணமாக நிர்வாகத்திறமை குறைந்துவிடாதிருக்க அவர்களுடைய பூரண ஒத்துழைப்பைப் பெறவேண்டும் என்பதற்காகத்தான், இப்பொழுது உடனடியாக, அவசரமாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று நான் கூறி இருக்கிறேன். நிதி அமைச்சர் அவர்கள் நேஷனல் டெவலப்மெண்ட் கௌன்சிலில் கொடுத்திருப்பதாகக் குறிப்பிட்டதில் ஒன்று—ராஜ்ய சர்க்கார் ஊழியர்களையும், மத்திய சர்க்கார் ஊழியர்களையும் ஒரு ரீஜினல் யூனிட்டாக வைத்து ராஜ்ய சர்க்கார் ஊழியர்களைப் பிரமோஷன் செய்வதன் மூலம் மத்திய சர்க்கார்களுக்குத் தேவையான தபால், ரயில்வே இலாகா

களில் எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதாகும். இது ரொம்ப அபாய கரமான யோசனை. இதைக் கை விடவேண்டும். இதற்குப் பதிலாக மத்திய சர்க்காரிடத்திலும் நேஷனல் டெவலப்மெண்ட் கௌன்சிலிடத்திலும் Second Pay Commission-ன் முடிவை வலியுறுத்திக் கூற வேண்டியது என்னவென்றால், அவர்கள் சிபாரிசு செய்யக்கூடிய சம்பளத்தைப் பூராவும் அப்படியே ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளுக்கும் அமுல் நடத்தியாக வேண்டுமென்று வலியுறுத்திக் கூறி, அதனால் ஏற்படும் அதிகபட்சச் செலவின் பெரும் பகுதியை 4, 5 வருஷ காலத்திற்கு மத்திய சர்க்காரையே ஏற்றுக்கொள்ளும்படி செய்ய வேண்டும். இந்தக் கருத்தை வலியுறுத்த வேண்டியதற்குப் பதிலாக ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளை ஏற்றுக்கொள்ளுங்கள் என்று சொல்வது சரியல்ல. இவ்வாறு செய்வது, ராஜ்ய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு ஒரு சர்விஸ் கமிஷன் மாதிரி வேலை செய்வதாக முடியும். ராஜ்ய சர்க்கார் ஊழியர்களை பிரமோஷன் மூலம் மத்திய சர்க்கார் இலாக்காக்களுக்கு அனுப்பக்கூடிய நிலைமை இருக்குமானால் ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகள் எல்லோரும் தாங்கள் "டெம்பரரி" யாக இருக்கிறோம் என்பது போன்ற ஒரு மன நிலையைக் கொண்டு, எப்பொழுது இங்கிருந்து பாயலாம் என்று பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆகவே, இந்தக் கொள்கையைக் கை விடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஏற்கனவே ராஜ்யப் பிரிவினை காரணமாக ஏற்பட்ட அதிகாரிகளுடைய மாற்றத்தின் காரணமாகவும், ரயில்வே இலாகாக்களில், எல்லா ரயில்வேக்களையும் ஒன்றாக இணைத்ததன் காரணமாகவும் ஏற்பட்ட சிக்கல்கள் தீர்க்கப்பட முடியாமல் இருந்து வருகின்றன. 7, 8 வருஷங்கள் ஆகியும்கூட அடிப்படைப் பிரச்னை அப்படியே இருக்கின்றது. ஆகவே, ரீஜினல் யூனிட்டி என்ற முறை சிக்கல்களை அதிகப்படுத்தும். அதற்குப் பதிலாக இரண்டாவது பே கமிஷன் முன்பும் நேஷனல் டெவலப்மெண்ட் கௌன்சில் முன்பும் வலியுறுத்தப்பட்ட சிபாரிசுகளை அப்படியே ராஜ்ய சர்க்கார் அமுல் நடத்த வேண்டும் என்பதை முக்கியமாக வலியுறுத்த வேண்டும். அதனால் ஏற்படக்கூடிய செலவை மத்திய சர்க்கார் ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்த வேண்டுமே தவிர, கோழிமுட்டை விற்பதன் மூலமும் இறைச்சி விற்பதன் மூலமும் தீர்த்து விடலாம் என்று நினைக்கக்கூடாது.

கடைசியாகச் சில வார்த்தைகள் இந்தத் தீர்மானத்தினுடைய நோக்கம், நிர்வாகத்திறமையை அபிவிருத்தி செய்வதற்குள்ள மார்க்கங்களைக் கண்டு பிடிப்பது, சம்பள உயர்வு, சர்விஸ் கண்டிஷன் முதலியவற்றிற்கான வழிவகைகளைக் காண்பதுதான். உண்மையான நோக்கம் எல்லாவற்றையும் தீர்மான ரூபத்தில் கொடுப்பது இயலாது. அதற்காகத்தான் ஒரு கமிட்டி ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லுகிறேன். அரசாங்க அதிகாரிகளைக் கொண்டு இந்தப் பிரச்னையில் உள்ள சிக்கல்கள் என்னென்ன என்பதை ஆராய்ந்திருக்கலாம். உத்தியோகப்பற்றற்றவர்களுடைய கண்ணோட்டம் அவசியமாயிருக்கிறது என்பதை உத்தேசித்துத்தான் நான் இத்தகைய ஒரு கமிட்டியை ஏற்படுத்த வேண்டுமென்று வலியுறுத்துகிறேன். நான் கூறிய காரணங்களிலிருந்து பார்த்தாலும், நிதி மந்திரி அவர்கள் பே கமிஷன் முன்பாக இந்தக் கமிட்டி சொல்லும் யோசனைகளை எடுத்துக் கொண்டு போய் வலியுறுத்துவதற்கும் வசதி ஏற்படும். அவர்களோடு வாதாட முடியும். ஆகவே, இந்தத் தீர்மானம் அவசரமானது—அவசியமானது, இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று நான் அவர்களைக் கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் இப்போது சொன்ன பல்வேறு கருத்துக்களைப் பற்றி நான் அதிகமாகப் பதில் சொல்லப் போவதில்லை. ஒரு முக்கியமான பிரச்னையைக் கிளப்பினார்கள். நம் ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் விவசாய உற்பத்தி அதிகமாக இருக்கிறது. அவ்வாறு இருந்தும் கூட இன்றைக்கு ஏன் விலை உயர்ந்து விட்டது என்ற ஒரு

கேள்வியைப் போட்டார்கள். அதற்குப் பதிலும் அவர்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். இப்போது ஏதோ ஒரு பக்கத்தில் விளைந்தால் அந்தப் பக்கத்தில் மட்டும் அது உபயோகப்படுகிறதென்ற அடிப்படையில் இயங்கவில்லை. இந்தியா முழுவதும் ஒன்றாக இயங்குகிறது. அதன் காரணத்தினால் எங்கு விளைச்சல் அதிகமாக இருந்தாலும் கூட விளைச்சல் அதிகமில்லாத பகுதிகளுக்குப் போகவேண்டியிருக்கிறது. அதோடு ஜனப் பெருக்கத்திற்குப் போதிய அளவில் உற்பத்தியாகவில்லை. அதன் காரணமாகத் தான் இன்றைக்கு எங்கு அதிகமாக விளைச்சல் இருக்கிறதோ அந்தப் பகுதியில் வியாபாரிகள் போட்டி போட்டுக் கொண்டு கொள்முதல் செய்கிறார்கள். இந்தப் பிரதேசத்தைவிட ஆந்திராவில் விளைச்சல் அதிகம். ஆனால் அங்கு போய் கொள்முதல் செய்கிறவர்களிடையே போட்டா போட்டி இருப்பதன் காரணத்தினால் அங்கும் விலை அதிகமாக இருக்கிறதைத்தான் பார்க்கிறோம். ஆகையால் இன்று இருக்கக் கூடிய பிரச்னை ஒரு பகுதியில் உற்பத்தி பெருகுவது மட்டும் அல்ல. அப்படி உற்பத்தியாகியும் பிரயோசனமில்லை. எல்லாப் பகுதியிலும் உற்பத்தி பெருகியாக வேண்டும். அப்போது தான் பற்றாக்குறை இல்லாமல் செய்ய முடியும். அதனால் விலை குறையும். உடனடியாகச் சிலர் நினைக்கலாம். அதனால் தான் தமிழ்நாடு தனியாக இருந்துவிட்டால் நல்லது என்கிறோம் என்று சொல்லலாம். உணவு மட்டும் அல்ல. பொருளாதார அமைப்பில் இன்று பார்க்கிறோம். ஒருவருக்கொருவர் உணவு முதற்கொண்டு எல்லாப் பொருளையும் பரஸ்பரம் கொடுத்து வாங்கி உதவி செய்து கொள்ளவேண்டியிருக்கிறது. ஆகையால் தான் இன்றைக்கு தஞ்சை ஜில்லாவில் உணவு அதிகம் உற்பத்தியாகியிருக்கிறது என்றால் அண்டை ராஜ்யங்களிலிருந்து வியாபாரிகள் அங்கே வந்து கொள்முதல் செய்கிறார்கள். அதைத் தவிர்க்க முடியாது. அண்டை ராஜ்யத்திலுள்ள மக்களும் வாழத்தான் வேண்டும். "அவர்கள் எப்படி ஆனால் என்ன? நாம் வாழ்ந்தால் போதும்" என்கிற கொள்கையை நான் ஒப்புக் கொள்ளவில்லை. அவர்களும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். இதை உணர்ந்தே ஏதோ வாதத்திற்காகத்தான் அப்படிச் சொல்லியிருப்பார்கள் என்று நான் நினைக்கிறேன்.

அதற்கு அடுத்தபடியாக இந்தக் கமிட்டியை உடனடியாக அமைப்பது, அவசரமானது, அவசியமானது என்பதை வற்புறுத்துவதற்கு அவர்கள் சொன்ன காரணம் இந்தக் கமிட்டியின் யாதாஸ்தையும் எடுத்துக்கொண்டு போய் நான் பே கமிஷன் முன்பாக வாதாடுவதற்கு, டெவலெப்மெண்டு கவுன்ஸிலில் எடுத்துச் சொல்வதற்கு வசதியாக இருக்கும் என்று குறிப்பிட்டார்கள். இப்படி ஐந்தாறு மாதங்களுக்கு முன்பாக நினைத்திருந்தால் ஒருகால் வசதியாக இருந்திருக்கும். அப்போது எனக்கும் தோன்றாமல் போய் விட்டது. ஆனால் இப்போதுள்ள நிலைமை என்ன? இந்த மாத முடிவிற்குள்ளாகவே இதைப்பற்றி பேசுவதற்கு என்னை டெல்லிக்கு வரச் சொன்னார்கள். நான் தான் அடுத்த மாதம் 8, 9-ம் தேதிகளில் எனக்கும் டெல்லியில் வேலை இருப்பதால் 7-ந்தேதி சந்திப்பை வைத்துக் கொள்ளும்படியாகச் சொன்னேன். அவர்களும் வாய்தா கொடுத்திருக்கிறார்கள். இந்த ஒரு வாரத்திற்குள் ஒரு கமிட்டியை நியமித்து, அவர்கள் எல்லாவிதமான பிரச்னைகளையும் பரிசீலித்து எனக்கு உதவியாக ஒரு யாதாஸ்தை சமர்ப்பித்துக்கொடுப்பார்கள் என்று யாரும் எண்ண முடியாது. அது இப்போது முடியாத காரியம் ஆகும். ஆனால் ஒரு விஷயம். அங்கத்தினர்கள் தங்களுடைய கருத்துக்களை இங்கே நன்றாக எடுத்து உரைத்து வலியுறுத்தியிருக்கிறார்கள். ஆகவே நான் டெல்லியில் என்னுடைய சொந்த அபிப்பிராயத்தை மட்டும் எடுத்துக்கொண்டு சென்று பேசப்போவதில்லை. இங்கே பேசியிருக்கிற அங்கத்தினர்களுடைய கருத்துக்களை எல்லாம் எடுத்துக்கொண்டு போகிறேன். இவைகள் எல்லாவற்றையும் முன் வைத்து அவர்களோடு நம் ராஜ்யத்தைப்பற்றியும், ராஜ்ய சர்க்கார் ஊழியர்களுடைய நிலைமையைப்பற்றியும் பேசப் போகிறேன் என்ற உறுதியை அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக விதிகளைச் சட்டமாக்குவதற்கு அவை நம் சபை முன்பு வந்தால் அதிலுள்ள குறைபாடுகளைப்பற்றி எல்லோரும் கலந்து ஆலோசித்துத் திருத்துவதற்குச் சந்தர்ப்பம் ஏற்படும் என்று சொன்னார்கள். அந்தக் கருத்தை நானும் ஒப்புக்கொள்கிறேன். கூடிய சீக்கிரத்தில் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறேன். சட்டமாக வந்தாலும் வராவிட்டாலும் அந்த விதிகளை நாம் பரிசீலனை செய்து அதிலுள்ள அம்சங்கள் என்ன என்பதை நாம் எல்லோரும் கலந்து தெரிந்துகொள்ளலாம். அதிலுள்ள குறைபாடுகளையும் நீக்கலாம். ஆகையால் அதில் நடவடிக்கை எடுப்பதற்கு எந்த விதமான கஷ்டமும் இருக்காது என்று நினைக்கிறேன்.

ஆகையால் இன்றைக்குக் கல்யாணசுந்தரம் அவர்கள் கொண்டு வந்திருக்கும் தீர்மானத்தின் நோக்கத்தில் யாருக்கும் வேறுபாடு இருப்பதாகத் தெரியவில்லை. நம்முடைய ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளுக்குச் சம்பள உயர்வு கொடுக்கவேண்டும் என்கிற விஷயத்தில் எல்லோரும் ஒரே விதமான கருத்து உடையவர்களாக இருக்கிறோம். அதை எந்த முறையில் நிறைவேற்றுவது என்பதுதான் பிரச்னை. மத்திய சர்க்காரிடமிருந்து எந்த விதமான உதவியையும் நாம் எதிர்ப்பார்க்கவில்லை என்றால் நாமே தனியாக ஒரு கமிட்டியைப் போட்டு பரிசீலனை செய்து ஒரு முடிவை எடுத்து விடலாம். ஆனால் நான் முன்பே சொன்ன பிரகாரம் மத்திய சர்க்காருடைய உதவியையும் நாம் எதிர்பார்க்கிறோம். அவர்களைக் கேட்டுக் கொண்டு செய்யவில்லை என்பது இல்லாமல் அவர்களாலேயே நியமிக்கப்பட்டபே கமிஷனுடைய சிபார்சு என்ன வருகிறது என்று பார்த்துக் கொண்டு அவர்களுடைய சிபார்சின்படியே ராஜ்ய சர்க்காருடைய சம்பளத்தையும் உயர்த்தவேண்டும் என்று வற்புறுத்துவது நல்லது. அதற்கு வேண்டிய பண உதவியையும் மத்திய சர்க்காரிடமிருந்து கேட்டு வாங்கலாம் என்று நினைக்கிறேன். இந்த முறையில் இந்தப் பிரச்னைக்கு நல்லதொரு முடிவு காணமுடியும் என்றும் நம்புகிறேன். திறமையாக வாதங்கள் செய்வது மட்டும் பயன் அளிக்காது. காரியத்தை மத்திய சர்க்காரிடமிருந்து எவ்விதம் சாதித்துக்கொள்ளலாம் என்றும் கவனிக்கவேண்டும். இந்தத் துறையில் மற்றவர்களைவிட எனக்குச் சிறிது அனுபவம் இருக்கிறது என்ற காரணத்தினால் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். இது ஒரு கட்சிப் பிரச்னை அல்ல. கட்சிப் பிரச்னையாகக் கருதாமல் எல்லோருடைய பொதுப் பிரச்னையாகக் கருதி இதைத் தீர்க்கவேண்டும் என்கிற காரணத்தினால் திரு கல்யாணசுந்தரம் அவர்களை தீர்மானத்தை வலியுறுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri A. VEDARATHNAM:** பாயின்ட் ஆப் க்ளாரிபிகேஷன். கனம் நிதி அமைச்சர் கூறியபடி திரு கல்யாணசுந்தரம் அவர்கள் திறமையாக வாதாடினார்கள். நிர்வாகத் திறமை குறைவுக்குச் சம்பள உயர்வு காரணமென்றும் சம்பள உயர்வு காரணமாக திறமையானவர்கள் மத்திய சர்க்கார் தபால், தந்தி ரயில்வே இலாக்காக்களுக்குப் போய் விடுவதாகவும், இங்குள்ளவர்கள் மட்டமானவர்களாகவும் சொன்னார்கள். ஆனால் தபால், தந்தி, ரயில்வே இலாகாவை எடுத்துக்கொண்டால் அங்கே திறமையைக் காணோம். 240 நிமிஷம், 450 நிமிஷம் என்று ஒவ்வொரு ரயில்களும் நேரமாகத்தான் வருகின்றன. தபால் சரிவரப் போய்ச் சேருவதே இல்லை. தபால் வந்த பிறகு தந்தி வருகிறது. இதைப் பார்க்கும்போது சம்பள உயர்வுக்கும் நிர்வாகத் திறமைக்கும் சம்பந்தம் காணப்படவில்லையே, இதற்கு என்ன காரணம் கூறுகிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** அறிவு உயர்வைப் பற்றியோ, அறிவு குறைவைப் பற்றியோ அவர் கூறியதை நான் குறிப்பிட விரும்பவில்லை. என் அநுபவத்தை வைத்துக்கொண்டு சொல்வேன். இங்குள்ளவர்கள் மட்டமானவர்கள் என்று அவர் சொன்னதைக் கூட அப்போது நான்

சொல்ல விரும்பவில்லை. வேறு எந்த ராஜ்ய நிர்வாகஸ்தர்களை எடுத்துக் கொண்டாலும், மத்திய சர்க்காருடைய நிர்வாக இயந்திரத்தையே எடுத்துக்கொண்டாலும்கூட அவர்களுக்கு நம் ராஜ்ய நிர்வாகிகள் திறமைக் குறைவானவர்களாக இல்லை. யாரோடு வேண்டுமானாலும் ஒப்பிட முடியும்.

**Sri M. KALYANASUNDARAM:** பர்சனல் எக்ஸ்ப்ளனேஷன்: நம்முடைய ராஜ்ய சர்க்காருடைய சிப்பந்திகள் நிர்வாகத் திறமைக் குறைவு உள்ளவர்கள், மட்டமானவர்கள் என்று நான் என் பிரசங்கத்தில் சொல்லவரவில்லை. அவர்கள் உற்சாகம் இழந்து வருகிறார்கள் என்று குறிப்பிட்டேன். தபால், தந்தி, ரயில்வே இலாகாவில் நிர்வாகத் திறமை குறைவாகியிருக்கிறது என்றால் அதற்குக் காரணம் என்னிடம் கேட்டுப் பயனில்லை. ஊழியர்களும் பொறுப்பாளி அல்ல. மத்திய சர்க்காரில் உள்ள அவர்களது காங்கிரஸ் கட்சி அமைச்சர்களைத்தான் கேட்கவேண்டும்.

இந்தத் தீர்மானம் சம்பந்தப்பட்ட வரையில் நிதி அமைச்சர் அவர்கள் திறமையாக வாதாடி இதில் இருக்கக்கூடிய வேகத்தையே எடுத்துவிட்டார்கள் என்பது என் அபிப்பிராயம். எப்படி இருந்தாலும் இதிலுள்ள கொள்கையை ஒப்புக் கொண்டுவிட்டார்கள். அதுமட்டுமல்ல. இரண்டாவது பே கமிஷனின் சிபார்சு வெளியான பிறகு வேண்டுமானால் ஒரு கமிட்டியை அமைப்பதாகவும், இன்னும் சர்வீஸ் கண்டிஷன், ரூல் முதலியவற்றைப் பரிசீலிப்பதற்குச் சந்தர்ப்பம் அளிப்பதாகவும், இங்கு சொன்னவர்களுடைய கருத்துக்களை எல்லாம் தாமே டெவலெப்மெண்டு கவுன்ஸில், பே கமிஷன் முன்பாக வலியுறுத்துவதாகவும் உறுதி அளித்திருப்பதனால் என் தீர்மானத்தை வலியுறுத்தாமல் அப்படியே விட்டுவிட விரும்புகிறேன்.

**Mr. SPEAKER:** Is the hon. Member withdrawing his resolution?

**Sri M. KALYANASUNDARAM:** I am not withdrawing my resolution. I am not pressing it either.

**Mr. SPEAKER:** The hon. Member will have either to press his resolution or withdraw it. He cannot leave it in the mid-air like that.

**Sri M. KALYANASUNDARAM:** In that case, I withdraw my resolution, Sir.

The resolution was, by leave, withdrawn.

### (2) CEILING ON LAND HOLDINGS—*cont.*

**Mr. SPEAKER:** Now, let us continue the discussion on the next resolution which reads as follows :—

"This House recommends to the Government to bring in legislation fixing a ceiling on Land Holdings and for the distribution of excess lands which are in excess of the ceilings fixed to the tenants and landless poor."

Fifteen Members have already taken part in the discussion. As the Hon. the Finance Minister wants to intervene in the debate now, I shall call him. The Hon. the Minister for Revenue will of course reply to the debate at the end.

30th October 1958]

SRI M. KALYANASUNDARAM : Sir, I understand that some more hon. Members want to speak on this resolution. So, I think that after the Hon. Finance Minister finishes his speech, those Members will also be given an opportunity to speak on the resolution.

MR. SPEAKER : Sure, sure. After the speech of the Hon. Finance Minister, those Members will have a chance to speak.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, a few more Members may speak now. I am not in a hurry. I shall speak a little later.

MR. SPEAKER : All right. Sir S. Ramaswamy Thevar may now speak.

SRI S. RAMASAMI THEVAR : கனம் தலைவர் அவர்களே, நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டுவது பற்றி நெடுநாட்களாகப் பேசப்பட்டு வந்திருக்கிறது. நாடு விடுதலை அடைந்ததிலிருந்தே " நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்ட வேண்டும், நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்ட வேண்டும் " என்று சொல்லப்பட்டு வந்திருக்கிறது. அவ்வாறு சொல்லி வந்ததன் காரணமாகவே இப்போது உணவு உற்பத்தி குறைந்திருக்கிறது. இந்தப் பேச்சின்—கோஷத்தின்—விளைவாகவே நில உடைமையாளர்களுக்கும் உழவர்களுக்கும் இடையில் தகராறுகள் ஏற்பட்டு, அதனால் உணவு தானிய விளைச்சல் குறைந்திருக்கிறது. அதனால் மக்கள் இப்போது கஷ்டமான நிலைமையில் இருக்கிறார்கள். நல்லதை செய்ய வேண்டுமாயின் அதை உடனே செய்யவேண்டும் ;" செய்யப்போகிறோம், செய்யப்போகிறோம்" என்று சொல்லி காலம் தாழ்த்திக்கொண்டிருந்தால் பல அல்லல்கள் ஏற்படுகின்றன. காலா காலத்தில் நடவடிக்கை எடுக்காததால் உணவு உற்பத்தி குறைந்து நாட்டில் பஞ்ச நிலைமை ஏற்பட்டிருக்கிறது. சர்க்கார் காரியம் செய்யாமல் பேசிக்கொண்டேயிருந்ததால், உழவர்களுக்கும் நில உடைமையாளர்களுக்கும் இருக்கும் உறவு நிலை பாதிக்கப்பட்டிருக்கிறது. முன்பு இரு சாராரும் ஸௌஜன்யமாக இருந்து வந்தனர். அவர்கள் இரு சாராரும் ஒற்றுமையுடன் உணவு உற்பத்திப் பெருக்கத்திற்குப் பாடுபட்டு வந்தனர். இப்போது அந்த நிலைமை மாறிவிட்டது. இப்போது எங்கே பார்த்தாலும் உழவர்களுக்கும் நில உடைமையாளர்களுக்கும் சண்டை சச்சரவுகள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. இந்த நிலைமையை மாற்றுவதற்காகவும் விவசாயத் தொழிலாளிகளுக்கு நன்மைகள் செய்வதற்காகவும் சர்க்கார் பல சட்டங்களை இயற்றியிருக்கின்றனர். அச்சட்டங்கள் பணக்காரர்களுக்கும் நிலச் சுவாந்தார்களுக்கும் நல்ல பலனளிக்கின்றனவேயொழிய ஏழை எளிய விவசாயிகளுக்கு நல்ல பலன் அளிக்கவில்லை. இதனால் இன்று நாட்டில் பெரிய குழப்பம் ஏற்பட்டிருப்பதுடன், உணவு உற்பத்தியும் குறைந்திருக்கிறது.

நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்ட வேண்டும் என்று சொல்லப்படுகிறது. நிலம் போன்ற வேறு பல சொத்துக்களும் நாட்டில் இருக்கின்றன. பல தொழில்கள் இருக்கின்றன. பலருக்கு பலவிதமான செல்வங்கள் இருக்கின்றன. அந்தச் செல்வங்களுக்கும் உடைமை வரம்பு கட்ட வேண்டும். அவைகளுக்கு வரம்பு கட்டும்போது பல குழப்பங்களும் தொல்லைகளும் ஏற்படலாம். நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் நிலச் சீர்திருத்தத்தை உடனடியாகச் செய்யவேண்டுமா வேண்டாமா என்று யோசிக்கவேண்டும். உணவு தானிய உற்பத்தி பெருகவேண்டுமானால், இந்தச் சீர்திருத்தத்தை கொஞ்ச காலத்திற்குத் தள்ளிவைத்துவிட்டு, விவசாயிகள் நிலங்களிலிருந்து வெளியேற்றப்படுவதைத் தடுப்பதற்கான காரியங்களையும் விவசாயிகளுக்கும் நில உடைமையாளர்களுக்குமிடையே நல்ல உறவு நிலை நிலவும்படி செய்வதற்கான காரியங்களையும் சர்க்கார் செய்யவேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

[Sri S. Ramasami Thevar] [30th October 1958

நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டுவதற்கு முன் சில காரியங்களை சர்க்கார் செய்யவேண்டும். ஜமீந்தார்களால் கோயில்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள நிலங்கள் எல்லாவற்றையும் சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த ராஜ்யத்தில் கோயில் நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன. ஆண்டவன் பேரிலுள்ள பல நிலங்கள் சரிவர விவசாயத்திற்குப் பயன்படுத்தப்படாமல் கிடக்கின்றன. குறிப்பாக, ஆவுடையார் கோவிலுக்குப் பக்கத்தில் இருக்கும் பல கிராமங்கள் ஜமீந்தார்களால் கோயில்களுக்கு வழங்கப்பட்டவை. ஜமீந்தார்களால் கோயில்களுக்குக் கொடுக்கப்பட்ட கிராமங்கள்கூட இன்னும் "டேகன் ஓவர்" ஆகவில்லை. அந்த கிராமங்களிலுள்ள நீர்ப்பாசனக் குளங்களை கோயிலாரும் மராமத்து செய்வதில்லை. சர்க்காரும் மராமத்து செய்வதில்லை. மழை சரிவரப் பெய்யாத நிலையில் அவை வறண்டு கிடக்கின்றன. இதனல் விவசாயம் பாதிக்கப்படுகிறது. இந்த நிலைமையை சர்க்கார் மாற்ற வேண்டும். இந்த மாதிரியான கோவில் நிலங்களை சர்க்கார் சீக்கிரம் எடுத்துக்கொள்ளவேண்டும்.

'நில உடைமைக்கு வரம்பு கட்ட வேண்டும், வரம்பு கட்ட வேண்டும்' என்று சொல்லிக்கொண்டு சர்க்கார் சும்மாயிருப்பதை விட, ஒரேயடியாக 'நில உடைமைக்கு வரம்பு கட்டப்போவதில்லை' என்று சொல்லிவிடுவது மேல் என்று நான் நினைக்கிறேன். அவ்வாறு செய்வது உணவு தானிய உற்பத்திப் பெருக்கத்திற்குச் சாதகமாக இருக்கும். விவசாயிகளுக்கும், நிலச்சுவாந்தார்களுக்கும் இடையேயுள்ள சுமுகமான உறவைக் கெடுக்கக் கூடிய சட்டங்களை இயற்ற வேண்டாம் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**SRI N. K. PALANISAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, நில உடைமைக்கு வரம்பு கட்டும் திட்டம் இப்போது இரண்டு காரணங்கள் காட்டப்பட்டு எதிர்க்கப்படுகிறது. அதாவது, நில உடைமைக்கு வரம்பு நிர்ணயிக்கப்பட்டால், நிலங்களெல்லாம் துண்டுகளாக ஆகிவிடும் என்றும், உணவு உற்பத்தி குறைந்துவிடும் என்றும் சொல்லப்படுகிறது. ஆனல் நில உடைமைக்கு வரம்பு கட்டப்பட்டால் உணவு தானிய உற்பத்தி எப்படிக் குறையும் என்று விளக்கப்படவில்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சுமார் 1,200 கோடி ரூபாய்க்கு மேல் செலவிடப்பட்டது. அத்திட்டம் முடிந்த பின் உணவுப் பிரச்னை தீர்ந்துவிடும் என்று, அத்திட்டம் வகுக்கப்பட்டபோது சொல்லப்பட்டது. ஆனல் உணவுப் பிரச்னை இன்னும் தீரவில்லை. வேறு பல திட்டங்களையும் போட்டும்கூட இதுவரையிலும் ரூபாய் 1,550 கோடிக்கு மேல் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்திருக்கிறோம். நில உடைமைக்கு வரம்பு கட்டப்படாமல் இருந்தபோதிலும் இங்கே உணவில் சுய தேவைப் பூர்த்தி ஏற்படவில்லை என்பது இதிலிருந்து நன்ருகத் தெரிகிறது.

நிலங்களைத் துண்டு துண்டாகப் பிரிக்கக்கூடாது என்று சொல்லப்படுகிறது. அதை நாங்கள் ஒத்துக்கொள்கிறோம். நிலங்களைத் துண்டு துண்டாகப் பிரிக்க வேண்டுமென்று நாங்கள் சொல்லவில்லை. பெரிய நிலச்சுவாந்தார்களிடம் அளவுக்கு அதிகமாக இருக்கும் நிலங்களை நிலமில்லாத விவசாயிகளுக்குக் கொடுக்கவேண்டுமென்றுதான் நாங்கள் கூறுகிறோம். 'ஸோஷலிஸம்' பேசிவிட்டு உழுபவனுக்கு நிலம் இல்லை என்று சொன்னல் என்ன அர்த்தம் என்று கேட்க விரும்புகிறேன். கனம் நிதி அமைச்சர் கூட சமீபத்தில் ஹைதராபாத்தில், இந்நாட்டில் உள்ள விவசாயிகளில் 90 சத விகிதத்தினர் சிறு விவசாயிகள் என்றும் அவர்களுக்கு 'இன்வெஸ்டிங் கெபாஸிடி' இல்லாததால் அவர்கள் உணவு தானியம் உற்பத்தி செய்ய முடியவில்லை என்றும் கூறும் தோரணையில் பேசியிருக்கிறார். அவருடைய வாதத்தில் சிறு விவசாயிகளுக்கு 'இன்வெஸ்டிங் கெபாஸிடி' கிடையாது என்பதால் அவர்களுடைய நிலங்களை பெரிய நிலச்சுவாந்தார்களிடம் கொடுத்துவிட்டால் உணவு உற்பத்தி பெருகும் என்ற கருத்து இருக்கிறது. இந்திய சர்க்காரின் தொழில் இலாகா கொடுக்கும் கணக்கைப் பார்ப்போம். ஆந்திராவில் மொத்த விவசாயிகளில் 52 சத விகிதத்தினர் நிலமில்லாதவர்கள் என்றும், நம் ராஜ்யத்தில் (சென்னையில்) மொத்த விவசாயிகளில் 55 சத விகிதத்தினர் நிலமில்லாத விவசாயிகள் என்றும் அந்த இலாகாவினர் கணக்கு கொடுத்திருக்கிருர்கள். நம் ராஜ்

30th October 1958] [Sri N. K. Palanisami]

யத்தில் விவசாயத் தொழிலில் 1/6 பங்கினர் நிலமில்லாத விவசாயிகள். மேலும் நம் ராஜ்யத்தில் எத்தனையோ ஏழை விவசாயிகள் இருக்கிறார்கள். கனம் நிதி அமைச்சரின் பேச்சில், பெரிய விவசாயிகள்தான் உணவு உற்பத்தி செய்ய வேண்டும், மற்ற விவசாயிகளுக்கு அந்தத் தொழிலில் இடம் இல்லை என்ற கருத்து இருக்கிறது. Ceiling on family holdings, ceiling on personal cultivation ஆகிய இரண்டு வரம்புகளையும் நிர்ணயிக்க வேண்டுமென்று ஏற்கனவே திட்டக் கமிஷன் சொல்லியிருக்கிறது. எனவே இந்த இரண்டையும் நாம் ஏற்கனவே ஒத்துக்கொண்டிருக்கிறோம். மேலும் தமிழ் நாட்டில் அரசாங்கத்தார் ஸோஷலிஸம் பேசிய காலத்தில் 'இத்தகைய திட்டங்களைக் கொண்டு வந்து நாங்கள் சோஷலிஸ சமுதாயத்தை உருவாக்கப்போகிறோம்' என்று சொன்னார்கள்.

11-40 a.m.

1952-ம் வருடத்தில் மூன்று பேர்கள் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அவர்கள் பரிசீலனை செய்த பிறகு என்ன முடிவு எடுத்தார்கள் என்று யாருக்கும் தெரியாது. இப்பொழுது கனம் பந்த் அவர்கள், மொரார்ஜி போன்றவர்களைக் கொண்ட மூவர் கமிட்டி ஒன்று போட்டிருக்கிறார்கள். ஏற்கனவே ப்ளானிங் கமிஷனும் இதைப்பற்றி சொல்லியிருக்கிறது. வருடாவருடம் ஒவ்வொரு மகாசபையிலும் இம்மாதிரி தீர்மானங்கள் போட்டு அவைகளை நிறைவேற்றுவதாக இருந்தபோதிலும்கூட இன்றைய தினம் இதற்கு விரோதமானதொரு மனப்பான்மை இருப்பதற்கு காரணம் என்னவென்று தெரியவில்லை. நாங்கள் மட்டுமல்ல உச்ச வரம்பு கட்ட வேண்டுமென்று சொல்வது. ப்ளானிங் கமிஷனும் சொல்லியிருக்கிறது. விவசாயிகளுக்கு நிலம் கொடுக்க வேண்டுமென்பது மட்டுமல்ல பிரச்னை. இந்த நாட்டில் இருக்கக்கூடிய அடிப்படைத் தொழில்கள் அபிவிருத்தி அடைய வேண்டும். அப்படி தொழில்கள் வளருவதற்கு அடிப்படையாக நிலம் உழுபவனுக்கு சொந்தமாக்கப்படவேண்டும். இது நாங்கள் மட்டும் சொல்வதல்ல. ஏற்கனவே 1948-ல் குமரப்பா கமிட்டி என்ன சொல்லியிருக்கிறது பாருங்கள்.

**"We agree with the report that it had been found by experience that unless the land is owned my the tiller his incentive to production does not reach the optimum point."**

அதாவது கொஞ்சம் நிலம் கொடுத்தால் கூட போதும். தன்னுடைய நிலம் என்ற உணர்ச்சி ஏற்பட்டவுடன் அவனுக்கு வண்டி வேண்டியதில்லை, தலையிலே உரத்தை சுமந்து வந்து நிலத்திற்கு போடுகிறான். மாடு இல்லாமலேயே கொத்தி வெள்ளாமை செய்வதைப் பார்க்கிறோம். தன்னுடைய பூமி என்றவுடனேயே ஒரு உணர்ச்சி ஏற்படுகிறது. ஆகவே அதன் காரணமாக உற்பத்தி பெருக வாய்ப்பு ஏற்படுகிறது. கூடுதல் உற்பத்தி செய்கிறான். சாதாரண விவசாயிகூட சைக்கிள் வாங்கிக் கொள்ள முடிகிறது. அதனால்அப்படி வரும்போது இப்பொழுது இருக்கக்கூடிய சைக்கிள் தொழிற்சாலைகள் போதாமல் கூடுதல் தொழிற்சாலைகள் ஏற்பட வாய்ப்பு இருக்கும். இதை, உதாரணத்திற்கு சொல்கிறேன். நம் நாட்டை எடுத்துக் கொண்டால் 55 சத விகிதம் கூலி விவசாயிகளாவார்கள். ஓரளவு அவர்களுக்கு நிலம் கொடுத்தால் கூட இப்பொழுதுள்ள வறுமை நிலை போய் நல்ல முறையில் அவர்கள் வாழ முடியும். நாம் ஏராளமான சாமான்களை உற்பத்தி செய்கிறோம். இயந்திர சாதனங்களையும் உற்பத்தி செய்கிறோம். ஆனால் அவைகளை விற்பனை செய்யும்போது ஓரளவுதான் விற்பனையாகிறது. ஒரு கட்டம் வரும்போது விற்பனையாகாமல் தேங்கி விடுகிறது. இன்றையதினம் நாம் நம் மாகாணத்தில் பார்க்கிறோம், பல மில்கள் மூடப்படுவதையும், பல ஷிப்ட்கள் மூடப்படுவதையும். காரணம், உள்நாட்டிலுள்ள விவசாயிகளிடமும், பொது ஜனங்களிடமும் அவைகளை வாங்க பணமில்லாததுதான். ஆக, முதலில் மக்களின் வாங்கும் சக்தியை அதிகரிக்க வேண்டும். முதலில் உழுபவனுக்கு நிலம் கொடுக்க வேண்டும். அடுத்தபடி இந்த நாட்டிலுள்ள தொழில்கள் அபிவிருத்தி அடையச் செய்ய வேண்டும். இவைகளுக்கு ஸீலிங் அவசியம். விவசாயிகளுக்கு நிலம் கிடைத்தாகவேண்டுமென்று சொல்வது அதற்கு மிகவும் அவசியமாகிறது. திட்டக் கமிஷனும், காங்கிரஸ் சார்பில் உள்ளவர்கள் இதற்கு

[Sri N. K. Palanisami] [30th October 1958

தீர்மானங்கள் நிறைவேற்றியுங்கூட அவர்கள் கொண்டு வருவதற்கு பதிலாக எதிர்கட்சியில் உள்ள நாங்கள்தான் இதை அமுலாக்குங்கள், அமுலாக்குங்கள் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. இன்று வேறு ஒரு நிலை ஏற்பட்டிருக்கிறது. பல மாகாணங்களிலும் உள்ள அமைச்சர்கள் இதை எதிர்த்து பேசியிருக்கிறார்கள். ஒரிஸாவில் உச்சவரம்பு கட்ட வேண்டுமென்ற தீர்மானத்தைக் கொண்டுவந்தபோது அங்குள்ள சட்ட சபையில் அதை விவாதிக்க முடியாமல் போய்விட்டது. அதேபோல் ராஜஸ்தானை எடுத்துக் கொண்டால் அங்குள்ள மந்திரி சபையிலே ஒரு பிளவு ஏற்பட்டிருக்கிறது. ஆந்திராவை எடுத்துக்கொண்டால் விவசாய மந்திரி திம்மரெட்டி அவர்கள் உச்ச வரம்பு கூடாதென்ற முறையில் பேசியிருப்பதைப் பார்க்கிறோம். உச்ச வரம்பு கட்டக் கூடாதென்று ஒரு மாகாநாடு ஏப்ரலில் நடந்தது, மைசூரில். மாஜி மந்திரி ஹனுமந்தையா அவர்கள் பேசும்போது, 40 வருஷகாலமாக சோஷியலிஸத்தை எதிர்த்து வந்த நாங்கள் திடீரென நேரு அவர்கள் இரண்டு மணி நேரம் பேசியதைக் கேட்டவுடன் மனம் மாற முடியாது, என்று பேசியிருக்கிறார்கள். அதோடு அக்பர் "தீன் இலாகி" என்ற மதத்தை ஏற்படுத்தி எப்படி அவர் இறந்து போனவுடனே அதுவும் போய் விட்டதோ அதேபோல்தான் இந்த சோஷியலிஸமும் போகும் என்ற முறையில் பேசியிருக்கிறார்கள். அடிப்படைக் கொள்கையை ஒத்துக்கொண்ட பிறகு இதற்கு நேர் விரோதமாக போகும் நிலைதான் இன்று ஏற்பட்டிருக்கிறது. உச்ச வரம்பை எப்படி கட்டுவது? ஒவ்வொரு மாகாணத்திலும், ஒவ்வொரு ஜில்லாவிலும் வித விதமான பூமிகள், வெவ்வேறு தரமுள்ள பூமிகள் இருக்கின்றன. ஆகவே, ஒரு கட்சியினர் மட்டுமின்றி, விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் எல்லோரும் சேர்ந்து எந்த முறையில் எப்படி உச்ச வரம்பு கட்டுவது என்று ஆலோசித்துப் பார்த்து ஒரு தீர்மானம் செய்து அதை உடனடியாக அமுல் நடத்த வேண்டும். அப்படிக் கொண்டுவந்தால்தான் நாம் ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்ற முடியும், அடிப்படைத் தொழில்களையும் வளர்க்க முடியும், அப்படியென்றால் தான் நிலப்பிரச்னையைத் தீர்க்க முடியும் என்று சொல்லிக்கொண்டு இதை ஆதரிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

*Sri P. S. ELLAPPAN : தலைவர் அவர்களே, இந்த நிலப் பிரச்னையானது, மார்க்கண்டேயனுக்கு வரம் கொடுத்தது போல் போய்கொண்டிருக்கிறது. இப்பொழுது, ஜமீன்தார்கள் எப்பொழுது நமது நிலங்களை எடுத்து கொண்டு நம்மை விடுவார்கள் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஜமீந்தார்களுக்கு அவர்களது நிலங்களைக் கொடுக்க இஷ்டம் இல்லை. ஆகவே அரசாங்கம் அவர்களோடு சேர்ந்து கொண்டு இதைக் கொண்டு வர காலதாமதமாகிறது என்று சொல்கிறார்கள் பலர். கிராமங்களில் இப்பொழுது விவசாயம் செய்யவே ஆள் கிடையாது. சால்ட்கோட்டர்ஸ், கொத்தவால்சாவடி, ரேவு போன்றயிடங்களில் நாட்டுப்புற ஆள்கள் கூலிக் கூடைகளை தலையின் மேல் வைத்துக்கொண்டு சுற்றுவதைப் பார்க்கிறோம். உழைக்கக்கூடிய மக்கள் அத்தனை பேர்களும் வேறு கதியில்லாமல் சென்னைக்கு வந்து திண்டாடுகிறார்கள். சர்க்கார் புறம்போக்கு நிலங்களை எடுத்து பயிரிடலாம் என்றால் அதற்கு எத்தனையோ விதமான முட்டுக் கட்டைகளை போடுகிறார்கள், கர்ணம், கிராம முன்சீப் போன்றவர்கள். மிராசுதார்கள் அதற்கு முட்டுக்கட்டை போடுகிறார்கள். அவர்கள் செய்யும் அட்டூழியங்களைச் சொல்லவே முடியாது. அப்படி எவ்வளவோ சம்பவங்கள் நடந்திருக்கிறது. போன வாரத்தில்தான் 22 பேர்களை அரெஸ்ட் செய்திருக்கிறார்கள். போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர், ரெவினியூ இன்ஸ்பெக்டராக புறம்போக்கில் பயிரிட்டதை கைப்பற்றி, கிணறு முதலியவைகளை இடித்துத் தள்ளி அதன் காரணமாக கலவரம் நடந்திருக்கிறது. ஒரு ஆளுக்கு சொந்தமாக கால்காணி நிலம் இருந்தால் போதும், இப்படிப்பட்ட கலவரங்கள் ஏற்படாது. ஆகவே, இந்த சட்டத்தை வெகு விரைவில் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதனால் காங்கிரஸ் கட்சிக்கும் நல்ல பெயர் கிடைக்கும். எல்லோரும் தங்கள் பிள்ளைகள்தான் என்ற நினைப்பில் இதை உடனடியாக கொண்டு வரவேண்டும். அடிக்கடி தப்படியாக, வினோபாஜி வந்து தர்மம் வாங்கினார்கள். அது யாரிடம் இருக்கிறது, அவைகள் ஏழைகளுக்கு எப்பொழுது கிடைக்கும் என்று

30th October 1958] [Sri P. S. Ellappan]

தெரியவில்லை. அதற்கு ஒரு வழியையும் காணோம். ஜமீந்தார்களை ஒழித்து விட்டார்கள், ஆனால் அவர்கள் நிலங்களை ஒழிக்க முடியவில்லை. விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் பெரும்பாலும் ஹரிஜன மக்களாவார்கள். அவர்கள் படும் கஷ்டங்கள் கொஞ்சமல்ல. மஹாத்மா காந்தியடிகள் சுயராஜ்யத்தை ஒரு கையிலும், ஹரிஜனங்களை ஒரு கையிலும் ஏந்தி சமுத்திரத்திலிருந்து வெளியேற்றினார்கள். எல்லோரும் படித்து விட்டு சொல்லுகிறார்கள், ஆனால் நான் கிராமத்திலுள்ள கஷ்டங்களை பற்றி சொல்லுகிறேன். என்னைக் கேட்டால், ஏழு நாளில் இதைக் கொண்டு வரவேண்டுமென்று சொல்வேன். கூடிய சீக்கிரத்தில் இந்த சட்டத்தை கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : தலைவர் அவர்களே, இந்த விவாதத்தில் நான் கலந்துகொள்வதாக இருக்கவில்லை. ஆனால் சமீபத்தில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் நான் தெரிவித்த சில கருத்துக்களையொட்டி சில பேர்கள் வரவேற்றுப் பேசினார்கள். சில பேர்கள் தப்பபிப்பிராயம் கொண்டு அதை வரவேற்றிருக்கிறார்கள். இன்னும் சில பேர்கள் தப்பபிப்பிராயம் கொண்டு அதைக் கண்டித்தும் இருக்கிறார்கள். இன்னும் சில பேர்கள் ஏதோ இதுவரையிலும் சொல்லாத ஒரு புதிய கருத்தை நான் கொண்டு வந்து இந்தப் பிரச்னையை தள்ளிப்போடுவதற்கு முயற்சி செய்கின்ற முறையில் நான் கண்டு பிடித்திருக்கும் ஒரு புதிய யோசனை என்றும் நினைக்கிறார்கள். இதன் காரணத்தினால்தான் இந்தப் பிரச்னையில் நாம் எந்த முறையில் அணுகவேண்டும், இந்தப் பிரச்னையில் இருக்கின்ற பல்வேறு கஷ்டங்கள் என்ன என்பதைபற்றி விளக்க வேண்டியது என்னுடைய கடமையாக இருக்கிறது. அவ்வாறு நான் விளக்கும்போது இதற்கான முடிவுகளை நான் சொல்ல முடியாத நிலைமையில் இருக்கின்றேன் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். ஏனென்றால் இதற்காக ஒரு கமிட்டியும் நியமிக்கப்பட்டிருக்கிறது. நானும் அதில் ஒரு அங்கத்தினராக இருக்கிறேன். அந்த கமிட்டியில் பல விஷயங்களைப்பற்றியும் சர்ச்சை செய்து கூடிய சீக்கிரத்தில் ஒரு முடிவு எடுக்கவேண்டியதாக இருக்கிறது. இன்றைக்கு நாட்டில் இருக்கின்ற முக்கியமான பிரச்னை உணவுப் பிரச்னை என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ள முடியும். முதலாவது ஐந்தாண்டு திட்டத்தை உருவாக்கிய காலத்தில் விவசாயத்திற்கு முதலிடம் கொடுத்து விவசாய உற்பத்திக்கு அனுசரணையாக இருக்கக்கூடிய பல்வேறு நீர்பாசன திட்டங்களை எல்லாம் நிறைவேற்ற வேண்டும் என்கின்ற முறையில் அதற்காக தொழில் துறையில் அதிகமாக கவனம் செலுத்தாமல் அதிகமான தொகை விவசாயத் துறையில் ஒதுக்கப்பட்டிருந்தது. இவ்விதம் முதலாவது ஐந்தாண்டு திட்டம் முடிவுறுகின்ற காலத்தில் பல பேர்களுக்கு ஒரு எண்ணம் ஏற்பட்டது. நாம் இந்த உணவுப்பிரச்னையும் தீர்த்துவிட்டோம் என்கின்ற எண்ணம் ஏற்பட்டது. இன்றைக்கும் இந்தியாவினுடைய விவசாயம் எல்லாம் பெரும்பாலும் மழையைப்பொறுத்துத்தான் இருக்கிறது. ஆனால் பருவ மழை அதிகமான இடங்களில் பாதகம் இல்லாத முறையில் பெய்ததால் இந்தியாவிலுள்ளவர்களுக்கு ஓரளவு உணவு போதும் என்கின்ற அளவுக்கு இருக்கின்றது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன். ஆனால் இத்தனை பரந்த நாட்டிலே ஏதோ ஒரு சில பகுதிகள் மட்டும், இன்றையதினம் பாதிக்கப்படுகின்றன. இன்றைக்கு 100-ல் 10 பங்கு பகுதிகள் மட்டும் பாதிக்கப்படுகின்றன என்றிருந்தால் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால் பல சமயங்களில் 25 பங்கு பகுதிகள், சில சமயங்களில் 50 பங்கு பகுதிகள் மழையில்லாமல் பாதிக்கப்படுகின்றன. சில இடங்களில் மழை அதிகமாகி வெள்ளத்தினால் பாதிக்கப்படுகின்றன. ஆகவே நாம் கணக்கிடும்பொழுது ஆற்று ஆழத்தை கணக்கெடுப்பது போல் கணக்கெடுக்கக்கூடாது. அந்த கதை எல்லோருக்கும் தெரியும் என்று நினைக்கிறேன். ஆற்றை கடக்க வேண்டிய ஒருவன், ஆற்றின் ஆழத்தை கணக்கெடுப்பதற்காக ஆற்றில் ஒவ்வொரு பக்கத்திலும் ஆழத்தை சராசரி கணக்கெடுத்து விட்டு நட்டாற்றில் இறங்கி திண்டாடின கதையை எல்லோரும் அறிவார்கள். அவ்வாறு இல்லாமல் சாதாரணமாக

11-50 a.m.

பாதிக்கப்படும் இடங்களே என்பதை மனதில் வைத்துக்கொண்டு பார்த்தால் இன்றைக்கு நமக்கு போதுமான அளவு உணவு கிடைக்கிறதா என்பதை நாம் ஆலோசித்துப் பார்க்கவேண்டும்.

அது மட்டுமல்ல, இன்றைக்கு நாட்டிலுள்ள மக்கள் எல்லோரும் மூன்று நேரமும் உண்ணுவதற்கு உணவு கிடைக்கிறதா என்று பார்த்தால் கிடைப்பதில்லை என்பதை நாம் உணர்ந்து கொள்ள முடியும். ஆகவே இன்றைக்கு மக்களுக்கு வயிறார உண்ணுவதற்கு உணவு கிடைப்பதில்லை என்கின்ற நிலைமை இருந்து கொண்டுதான் இருக்கின்றது. இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையை வைத்துக்கொண்டு நாம் இந்தப் பிரச்னையை அணுக வேண்டும். பொதுவாக உணவு என்றும் சொல்லும் போது வெறும் தான்யம் மட்டுமல்ல. தானியம் மட்டும் என்று சொன்னால் வயிற்றை மாத்திரம் நிரப்பிக்கொண்டிருக்க முடியும். அதோடு, நமக்கு தேவையான பால், பழம் போன்ற உணவுப்பொருள்கள் எவ்வளவு கிடைக்கிறது. இவைகள் பலருக்கு கனவாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. சிலருக்குத்தான் நனவாக கிடைத்துக்கொண்டிருக்கிறது. ஆகவே உணவுப்பொருள்கள் என்று சொல்லும்போது சத்துள்ள உணவுப்பொருள் என்று கணக்கிட வேண்டியதாக இருக்கிறது. ஆகவே இந்த நிலைமையில் பார்க்கிறபொழுது உணவு உற்பத்தியை குறைவாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. இதை இன்னும் அதிகமாக்க வேண்டியது நம்முடைய கடமையாக இருக்கிறது. இதில் யாருக்கும் அபிப்பிராய பேதம் இருக்க முடியாது. ஆனால் எந்த முறையில் உற்பத்தியைப் பெருக்க முடியும் என்பதை நாம் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். உற்சாகமாக இருந்தால்தான் உணவு உற்பத்தியை பெருக்க முடியும் என்று சிலர் நினைக்கிறார்கள். உற்சாகம் வேண்டியதுதான். இருந்தாலும் வெறும் உற்சாகத்தினால் மட்டும் உற்பத்தி பெருகி விட முடியாது. பல்வேறு திட்டங்களும் பல்வேறு சௌகரியங்களும் பல்வேறு சாதனைகளும் குடியானவர்களுக்கு கிடைத்தால்தான் உற்பத்தியை பெருக்க முடியும். இதில் குடியானவர்கள் என்பதில் சிறிய குடியானவர்களாக இருந்தாலும் சரி, பெரிய குடியானவர்களாக இருந்தாலும் சரி அவர்களுக்கு இந்த வசதிகள் எல்லாம் கிடைக்கவேண்டும். பெரிய உற்சாகத்துடன் போடுகின்ற விதையெல்லாம் பதராக இருந்தால், அந்த விவசாயத்தில் என்னதான் உற்சாகம் இருந்தாலும் இதில் பிரயோஜனம் ஒன்றும் இல்லாமல் போய் விடும், விழலுக்கு இறைத்த நீராகப் போய் விடும். எல்லோருக்கும் நல்ல தரமுள்ள விதை கிடைக்க வேண்டும். இது உணவு உற்பத்திப் பெருக்குக்கு மிக மிக அவசியம் என்பதை நாம் உணர்ந்திருக்கிறோம். அதே மாதிரி தான் சத்துள்ள உரம் கிடைக்க வேண்டும். அத்துடன் நீர்பாசன வசதி மிக முக்கியம். நாம் இப்போது அதிகமாக மழையை நம்பித்தான் இருக்கிறோம். அதுவும் காலா காலத்தில் மழை பெய்யவில்லையென்றால் ஒரு பிரயோஜனமும் இல்லாமல் போய்விடும். விதைத்து 15 நாட்களுக்குள் மழை பெய்ய வேண்டும். இல்லாவிட்டால் அத்தனையும் காய்ந்துபோகும். ஆகவே பருவகாலத்தில் மழை பெய்தால்தான் நமக்கு உபயோகமாக இருக்கும். ஆகவே நீர்பாசன வசதி நமக்கு தேவையான நேரத்தில் கிடைக்கவேண்டியது மிக அவசியம். அதே மாதிரிதான் விவசாயக் கருவிகள் எல்லாம் திறமையான கருவிகளாகக் கிடைக்கவேண்டும். இப்போது இருக்கிற ஒரு சாண் கலப்பையை வைத்துக்கொண்டு நாம் விவசாயம் செய்து கொண்டு வந்தால் நல்ல பலனை அடைய முடியாது. ஆகவே நல்ல விவசாயக் கருவிகள் நமக்குத் தேவையாக இருக்கின்றன. இவைகள் எல்லாம் குடியானவர்களுக்கு எந்த அளவு கிடைக்கச் செய்கின்றோமோ அந்த அளவு நாம் உணவு உற்பத்தியைப் பெருக்கிக்கொள்ள முடியும். இருக்கக்கூடிய நிலத்தை எல்லாம் பங்கிட்டுக்கொடுத்துவிட்டு இந்த வசதிகள் இன்னும் செய்து கொடுக்கவில்லையென்றால் உற்பத்தி பெருகிவிட முடியாது. ஏதோ மனதிற்கு ஒரு சாந்தி ஏற்படுவதற்காகத்தான் இந்த நிலங்களைப் பங்கு போட்டு கொள்ள முடியுமே தவிர இந்த வசதிகள் ஒன்றும் இல்லாமல் நிலத்தை எப்படித்தான் பங்கு போட்டாலும் உற்பத்தி பெருகி விட முடியாது.

ஆகவேதான் நாம் இன்றைக்கு நிலப் பிரச்னையைப்பற்றி விவாதிக்கும் போது உணவுப் பிரச்னையையும் சேர்த்துப் பார்க்கவேண்டியதாக இருக்கிறது.

30th October 1958] [Sri C. Subramaniam]

இந்த நிலப் பிரச்னையில் என்ன மாதிரியான மாறுதல்களைப் செய்ய வேண்டும் என்று சிலர் சொன்னார்கள். நான் இன்னொரு பதிலில் குறிப்பிட்டதுபோல், இன்றைக்கு நம் நாட்டில் இருக்கின்ற விவசாயிகளில் பெரும்பாலோர் சிறு குடியானவர்கள்தான். ஆனால் இன்று நாட்டில் சிறு குடியானவர்கள்தான் உற்பத்தியைப் பெருக்கிக்கொண்டிருக்கிறார்கள். உதாரணமாக இன்றைக்கு ஈரோட்டுக்குப் போய்ப் பார்ப்போமேயானால் அங்கு இரண்டு ஏக்கர்களுக்கு மேற்பட்ட நிலம் உடைய குடியானவர்களே மிகக் கம்மியாகத்தான் இருப்பார்கள். இரண்டு ஏக்கருக்கு உட்பட்ட நிலம் வைத்துக்கொண்டிருக்கிறவர்கள்தான் அதிகமாக உணவு உற்பத்தி செய்கிறார்கள். அவர்களிடத்தில் வேண்டிய அளவுக்கு வசதியிருக்கிறது. ஒவ்வொருவரும் ரொக்கமாக ரூபாய் 5,000, 6000 வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்கள் நல்ல முறையில் விவசாயத்தில் ஈடுபட முடிகின்றது. இதேமாதிரி இரண்டு ஏக்கர்கள் வைத்திருப்பவர்களை மற்ற இடத்திலேயும் பார்க்கலாம். ஏதோ உழுதோம், விதைத்தோம், இது நம் தலைவிதி என்ற முறையில் நல்ல விளைச்சல் இல்லாமல், நல்ல விதை போடுவதற்கு வசதியில்லாமல், நல்ல உரம் போடுவதற்கு வசதியில்லாமல், கிணறுகள் வெட்டப் போதிய வசதியில்லாமல் இருக்கிறார்கள். இப்படி நம் சிறு குடியானவர்களின் நிலைமையை எடுத்துக் கொண்டு பார்க்கும்போது, அவர்களுக்கு நிலத்தைக் கொடுத்தால் உற்பத்தி பெருக முடியாது. வசதியில்லாதபோது நிலம் கொடுத்தால்கூட உற்பத்தி பெருகாது என்பதை எல்லோரும் நேரடியாகப் பார்த்தால் ஒத்துக்கொள்வார்கள், இதை மறுக்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

12 noon.

ரூரல் கிரெடிட் ஸர்வே நடந்தது நம் ராஜ்யத்தில். அந்த ரிப்போர்ட்டை ஓரளவுக்காவது எல்லோரும் படித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். அதிலே பார்க்கும்போது விவசாயிகளுக்கு—பண்டிகை மாதிரி இல்லை, சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு பண்டிகை கொண்டாட ஏதாவது கொடுக்க வேண்டுமென்று சொன்னார்கள்—பண்டிகை கிடக்கட்டும்—விவசாயம் செய்வதற்கு, இரண்டு ரூபாய் தர்ம வட்டி கொடுத்து, வட்டியையும் முன்னமேயே பிடித்துக் கொண்டு பாக்கியை வாங்கிக்கொண்டு, விளையக் கூடிய தானியத்தையும் அவன் கேட்கும் விலைக்கே அவனுக்கே விற்றுவிட்டு, முன்னேற முடியாமல் இருக்கின்ற நிலைமை இருக்கிறது. அது இப்போது மாறியிருக்கிறதா என்றால் இல்லை. நூற்றுக்கு 90 பேர்கள் வசதியில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதைத் தீர்க்க முதலில் அவர்களுக்கு வசதி செய்து கொடுக்கவேண்டும். அப்போது தான் அந்த பூமிகளில் விளைச்சல் அதிகமாகும். அதை அடிப்படையாக வைத்துக்கொண்டு கேட்டதுதான் நான் கேட்ட அந்தக் கேள்வி. நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டி பாக்கி நிலங்களை எடுத்துப் பிரித்துக் கொடுக்க வேண்டும். பிரித்துக் கொடுக்க வேண்டுமென்றால் யாருக்கு ? அதற்கு உடனே பதில் சொல்லி விட்டார் பழனிசாமி, நிலம் இல்லாத ஏழை விவசாயிகளுக்கு என்று. ஏழை விவசாயிகளுடைய நிலை என்ன ? அவர்கள் கடன் பட்டு இருக்கிறார்கள் என்பதால் அவர்களிடம் பணம் இருக்காது. அவர்களுக்கு இந்த நிலத்தைக் கொடுத்தால் எந்த வித பொருளாதார சக்தியில்லாமல், இந்த இரண்டு ஏக்கர் நிலம் என்னுடைய பூமி என்ற உணர்ச்சி வந்ததோடு வேறு எந்தவித உதவியும் இல்லாமலே, உற்பத்தியும் பெருக முடியாத நிலை ஏற்பட்டு விடும் என்பதை யோசித்துப் பார்த்தீர்களா என்றுதான் கேட்டேன். ஆகையால் இதற்கு வழி செய்தாக வேண்டுமென்று சிந்தித்து அந்த வகையில் வழி செய்ய வேண்டும். எடுத்துக்கொள்ளும் பூமியை நிலம் இல்லாத விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுப்பதால் மட்டும் பிரச்னை தீராது. எந்த முறையில் எடுத்து விவசாயம் செய்ய முடியும், கூட்டுறவு முறையில் செய்ய முடியுமா என்று பரீட்சை பார்த்தால் அதிலே இருக்கக் கூடிய சிக்கல்கள் நமக்குத் தெரிந்திருக்கிறது. இன்றைக்கு எத்தனை கூட்டுறவு சங்கங்கள் வைத்து வெற்றிகரமாக நடந்து கொண்டிருக்கிறது என்று பார்க்கிறோம். இனிமேல் வெற்றிகரமாக ஆகுமோ என்னவோ. இது வரையில் கூட்டுறவு விவசாயப் பண்ணைகள் வைத்த உடனே இரண்டு வருஷத்தில் அல்லது மூன்று வருஷத்தில் அல்லது ஐந்து வருஷத்தில் கலைக்க வேண்டிய நிலைமைதான்

[Sri C. Subramaniam] [30th October 1958

ஏற்பட்டிருக்கிறது. தொடர்ந்து நீடித்திருக்கக்கூடிய சங்கமே கிடையாது, தெங்குமராட்டாவில், நீலகிரியில் இருக்கும் ஒன்றைத் தவிர, மற்ற இடங்களில் கூட்டுறவுப் பண்ணைகள் சரியாக நடக்கவில்லை.

நமது பிரதம மந்திரி அவர்கள் சொன்னதுபோல கூட்டுறவுச் சட்டம் கூட்டுறவு வளர்ச்சிக்கு வசதியாக இல்லாமல் இருக்கலாம். இவைகளுக்கு முதலிடம் கொடுக்காமல், இன்றைக்கு நிலத்தைப் பிரித்துக் கொடுக்கலாம் என்றால்—வயிற்றை ஆபரேஷன் செய்ய வேண்டியது அவசியம் ; அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யாமல், அதற்கு வேண்டிய உபகரணங்களைச் சேர்த்துக் கொள்ளாமல், முதலில் வயிற்றைக் கிழிப்பதற்கு வேண்டிய உபகரணங்கள் இருக்கின்றன என்று வயிற்றைக் கிழித்து விட்டு, ரத்தம் வந்தவுடன் இந்த ரத்தத்தை நிறுத்த forceps வேண்டும் என்ற உடனே forceps கொண்டு வர, இங்கு இருந்தால் கொண்டு வா, இல்லையானால் பக்கத்து ஆஸ்பத்திரியிலிருந்தாவது தேடிக்கொண்டு வா என்று சொல்லுகிற முறையில் வயிற்றை ஆபரேஷன் செய்த மாதிரிதான் ஆகும். நிலப் பிரச்னையைப் பொறுத்த வரையில் உச்ச வரம்பு கட்டவேண்டுமென்று லட்சியத்தில், கொள்கையளவில் அபிப்பிராய பேதம் இருக்க வேண்டியதில்லை. பிரித்த பிறகு எப்படி சாகுபடி செய்யப் போகிறோம் ; இப்போதே இருக்கக் கூடிய லட்சக் கணக்கான ஏழைக் குடியானவர்களுக்கு போதுமான வசதி செய்து கொடுக்க முடியவில்லை. இன்னும் நிலமில்லாதவர்களுக்குப் பிரித்துக்கொடுத்து அவர்களும் குடியானவர்களாக அவர்களுக்கும் வசதி செய்து கொடுக்க முடியுமா என்று ஆலோசித்துப் பார்த்து பிறபாடு இந்த பூமிகளைப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று தான் நான் சொல்கிறேன். லட்சிய அளவிலே, கொள்கையளவிலே, பிரித்துக் கொடுப்பதிலே ஆட்சேபணையில்லை என்று நான் வலியுறுத்திச் சொன்னேன். பிரித்துக் கொடுத்த பிற்பாடு எந்த முறையில் சாகுபடி செய்யப் போகிறோம். இப்போது நிலம் இல்லாத ஏழை விவசாயிகளுக்குக் கொடுத்தால் நம் லட்சியம் பூர்த்தியாகும். பயிரிட வசதியாக இருக்கும் என்று கொஞ்சம் பணம் இருக்கின்றவர்களுக்குக் கொடுத்தால் மேலும் மேலும் பணக்காரர்களாக்குகிறார்கள் என்று சொல்வார்கள். ஒன்றுமில்லாதவர்களுக்குத்தான் முதலிடம் கொடுக்கவேண்டும் என்று சொல்கிறார்கள். அவர்களுக்கு பொருளாதார சக்தி கிடையாது. அதற்கு நாம் என்ன செய்யப் போகிறோம். அதற்கு வேண்டிய மார்க்கத்தை வகுத்திருக்கிறோமா என்பதைப் பற்றி யாராவது யோசித்தார்களா, இதையெல்லாம் நன்கு சிந்தித்து பதில் சொல்லவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். (ஸ்ரீ என். கே. பழனிசாமி குறுக்கிட்டார்.) கோவாப்ரேடிவ் பார்மிங் வைக்கலாம். நடை முறையில் கோவாப்ரேடிவ் பார்மிங் எப்படி நடக்கிறது என்பதைப் பற்றிச் சொன்னேன். இன்றைக்கு அதிலே வெற்றியில்லாமல் இருக்கிறது. ஏன் கூட்டுறவு முறையில் விவசாயப் பண்ணைகளை நடத்த முடியவில்லை, அது ஏன் பரவலாக இல்லை, இதிலே என்ன குறைகள் இருக்கின்றன என்று யோசித்து முடிவு செய்யாமல், நிலம் இருக்கிறது, துண்டு போட்டு விடலாம் என்று சொன்னால், வயிற்றை ஆபரேஷன் செய்யவேண்டுமென்று உடனே வயிற்றைக் கீரிய மாதிரிதான் ஆகும்.

திடீரென்று இப்போதுதான் இது தோன்றியதா என்று சிலர் நினைக்கிறார்கள். நான் இதைப் பற்றி முன்னாலேயே சொல்லியிருக்கிறேன். இதைப் பற்றி பல இடங்களில் பேசியிருக்கிறேன். ஆனால் சட்ட சபையில் பேசினேனா இல்லையா என்று எனக்கே சந்தேகமாக இருந்தது. அது எனக்கு நினைவில்லாமல் இருந்தது. 1953–54-ம் வருஷத்து பட்ஜெட் பேச்சைப் பார்க்கும்போது இதே கருத்தை நான் தெரிவித்திருக்கிறேன். 1953–54-ல் நிலப் பிரச்னை பற்றி அப்போது எதிர் கட்சித் தலைவராக இருந்த ஸ்ரீராமமூர்த்தி அவர்கள் பேசிய போது, உடனடியாக நிலத்தைப் பிரிக்கவேண்டும், உடனடியாக குடியானவர்களுக்கு 75 பங்கும், பூமி சொந்தக்காரர்களுக்கு 25 பங்கும் என்று நிர்ணயிக்கவேண்டும் என்று பேசியபோது, அதற்கு பதில் சொல்லுகையில் நான் அப்போது இந்த மாதிரி சொல்லியிருக்கிறேன்.

30th October 1958] [Sri C. Subramaniam]

"The hon. Leader of the Opposition seems to think: 'If only you divide the land, if only you increase the tenant's share of the produce, production will go up'. He seems to think that if the tenant is given 75 per cent of the produce, production would go up automatically. But, Sir, I would like to point out to him the pattern of the holdings in our State. Of course, he cited Tanjore. I know Tanjore is rather peculiarly situated. There are bigger landlords there. That is the reason why special legislation was necessary for that district. But if we take the pattern of the entire State, we see that we are largely a State of peasant proprietors. The theory of the Leader of the Opposition is that if a tenant is allowed to have 75 per cent of the production, the tenant would be enthused and production would increase. Well, Sir, here are the vast majority of the people who hold the land and who get the entire produce from the land. Why has not production increased in those cases? On the other hand, production is going down. There is not sufficient production even in the field which is owned by the peasant and tilled by him. Production has gone down throughout the entire country. If that be so, the cause is somewhere else. That is, as I said, failure of the rains. Not only the failure of the rains but our holdings are quite uneconomical and the peasants do not have sufficient capital to invest in agriculture. Therefore, we should improve the economic condition of the small peasants so that sufficient resources might me made available to them to undertake better cultivation of the land. Better seeds and manure also should be supplied to them. It is in that task the Government are engaged now and the Hon. the Minister in charge of Agriculture explained how the Government are doing their best to see that peasants take to better methods of cultivation and the use of better seeds and manure and thus increase production. Only when production increases, the purchasing power of the people will increase. By a mere magic or by distribution of the existing wealth, neither production nor purchasing power could be increased."

நான் ஏதோ ஒரு கருத்தை முதன் முதலாக 1958-ம் வருஷத்திலே சொல்லி இந்த நில பிரச்னையை ஒத்திப்போடவேண்டும் என்று உபாயம் கண்டு பிடித்திருக்கிறேன் என்று சிலர் நினைக்கிறார்கள்.

**Sri N. K. PALANISAMI:** சுப்ரமணியம் கமிட்டி ரிப்போர்ட்டில் "ஸீலிங்" கூடாது என்று கனம் மந்திரி அவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

**The Hon. Sri C. SUBRAMANIAM:** அகவே நான் பதிய கருத்து ஒன்றையும் சொல்லவில்லை என்பதை ஸ்திரப்படுத்துகிறார்கள். இன்றைக்கு நாம் சிறிய குடியானவர்களின் பிரச்னையைத் தீர்க்க முடியவில்லை என்றால், அதிலும் கொஞ்சம் வசதியிருக்கக்கூடிய குடியானவர்களுக்கு அதிக வசதிகளைச் செய்து கொடுக்க முடியவில்லையென்றால், ஒரு வசதியுமே இல்லாமலிருக்கும் ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான குடியானவர்களுக்கு நிலத்தைப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, அவர்களுக்கு வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று நினைத்தால், அதிலே வெற்றி பெறமுடியுமா என்பதைச் சிந்தித்துப் பாக்கவேண்டும். முடியாது என்று சொன்னால், இன்றைக்கு இருக்கக்கூடிய கூட்டுறவு சட்டமும், கூட்டுறவுப் பண்ணை வளர்ச்சித் திட்டமும், கூட்டுறவு அதிகாரிகளும், தடையாக இருக்கின்றன என்று சொன்னால், கூட்டுறவுப்பண்ணையை நல்ல முறையில் நடத்தக்கூடிய வேறொரு விதியையும், வேறொரு அதிகார வர்க்கத்தையும் ஏற்படுத்தியாகவேண்டும்.

12·10 p.m.

[Sri C. Subramaniam] [30th October 1958

இவைகள் ஏற்படுத்துவதற்கு முன்னால், நிலத்தைப் பிரிக்கவேண்டுமென்று சொன்னால், அது உணவு உற்பத்தியைப் பாதிப்பதாகத்தான் இருக்கும். ஆகவே, உணவு உற்பத்தி குறைந்தாலும் பரவாயில்லை, பட்டினியாக இருந்தாலும் பரவாயில்லை, நிலத்தைப் பிரித்துக்கொடுக்கத்தான் வேண்டும் என்று யாராவது யோசனை சொல்லுவார்களேயானால், நானும் அவர்களோடு சேர்ந்து பட்டினியாக இருப்பதற்குத் தயார். ஜனநாயக அடிப்படையிலே எது மெஜாரிட்டி தீர்மானமாக இருக்கிறதோ, அதை ஏற்று நடத்தவேண்டியவர்களாக இருக்கிறோம். நான் மட்டும் இன்னொரு ஊருக்குப் போய்விட முடியாது. விவசாயத் துறையில் "உற்பத்தி பெருகவில்லை, உற்பத்தி பெருகவில்லை" என்று சொன்னால், பெரியபண்ணைகளை வைத்திருப்பவர்கள், ஓரளவு வசதியுள்ளவர்களாலேயே முடியவில்லை என்று சொன்னால், வசதியே இல்லாதவர்கள் எந்த நிலைமையில் இருக்கிறார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். உற்பத்தியை பெருக்குவதற்கான சூழ்நிலையை ஏற்படுத்தி, அதற்கான நிர்வாக அமைப்பை ஏற்படுத்தி, அதற்கான கூட்டுறவு அமைப்பை ஏற்படுத்தி, அதற்கான பொருளாதார சக்தியும் இருக்கிறது என்று சொன்னால், இன்னும் அதிகமான விளைச்சல் எதிர்பார்க்க முடியும். ஈரோட்டிலே இருக்கும் குடியானவர்கள் அதிகமாக உற்பத்தி செய்ய முடியும் என்று நிரூபித்துக் காட்டியிருக்கிறார்கள் என்றால், அவர்களுக்குப் பொருளாதார சக்தியிருந்ததன் காரணமாக, விளைச்சலை அதிகப்படுத்த முடியுமென்று நிரூபித்திருக்கிறார்கள்.

நில அமைப்பைப்பற்றி பேசும்பொழுது, ஒருவரும் தான் உழுவதற்கு மேற்பட்ட பூமியை, தன் மேற்பார்வைக்கு அதிகப்பட்ட அளவு பூமியை, சொந்தமாக வைத்துக்கொள்வதற்கு, லட்சிய பூர்வமாக உரிமை இருக்கக் கூடாது என்று ஒப்புக்கொண்டாலும்கூட, இன்றைக்கு இருக்கக்கூடிய நிலையில், யாருக்கு நிலத்தைப் பிரித்துக்கொடுப்பது, எப்படிப் பிரித்துக் கொடுப்பது, எப்படி அந்த பண்ணைகளை நடத்துவது என்று முடிவு காண்பதற்கு முன்னர் இந்தக் காரியத்தைச் செய்வோமேயானால், நன்மைக்குப் பதிலாக தீமைதான் வந்து சேரும். எந்த ஒரு நல்ல காரியத்தைச் செய்தாலும், போதிய பின்பலம் இல்லாமல் காரியத்திலே இறங்கினால், தோல்வியைத் தான் அடையவேண்டியிருக்கும். ஒரு படை முன்னேறிச் செல்லுகிறது என்று வைத்துக்கொள்வோம். அந்தப் படைக்குப் போதுமான ஆயுதங்கள், தளவாடங்கள், உணவு தான்யங்கள் போய்ச் சேரக்கூடிய அளவுக்கு பின்பலம் இருக்கவேண்டும். 200 மைல் அல்லது 300 மைலுக்குப் பின்னாலிருந்து தளவாடங்கள், உணவுதான்யங்கள் வருவதில் தத்தளிக்கும் நிலைமை ஏற்பட்டால், தைரியவான்கள், வீரர்கள் என்றெல்லாம் பெயர் எடுக்கலாம், ஆனால் போரில் வெற்றி காணமுடியாது. அதற்கு வேண்டிய ஆயுதங்கள் செய்யவில்லை என்று வேண்டுமானால் குற்றம் சாட்டுங்கள், ஏற்றுக்கொள்வதற்குத் தயார். ஆனால் ஆயத்தமில்லாமலேயே காரியத்தைச் செய்யுங்கள் என்று சொன்னால், அதிலே வெற்றி காண முடியாது, தோல்விதான் ஏற்படும். பின்னர், பெரிய மிராசுதார்களே, "பார்த்தீர்களா, நாங்கள் அப்பொழுதே சொன்னோம், பிரித்துக் கொடுத்தால் என்னவாகுமென்று, அதன்படியே நடந்துவிட்டது" என்று சொல்லக்கூடிய நிலைமை ஏற்படும். அவர்களுடைய குற்றச்சாட்டை நிஜப்படுத்தியவர்களாவோம். அவர்களுக்கு இடம் கொடுத்தவர்களாவோம். "பிரித்துக் கொடுப்பதினால் அதிக கஷ்டம்தான் ஏற்படும், யாருக்கும் லாபம் ஏற்படாது என்று சொன்னோம், அதை நிரூபித்து விட்டார்கள், பார்த்தீர்களா" என்று அவர்கள் சொல்லுவதற்கு இடம் ஏற்படும். ஆகவே, இந்தப் பிரச்னையிலே வெற்றி பெற வேண்டுமானால், எல்லாவிதமான ஆயத்தங்களையும் செய்துகொண்டுதான் நாம் இறங்கவேண்டும். பின்னர் இதைப் பற்றியெல்லாம் யோசித்துக் கொள்ளலாம் என்று இதிலே திடீரென்று இறங்குவோமேயானால், தோல்விதான் காணமுடியும். இப்பொழுது இருப்பதைக் காட்டிலும், மக்கள் பஞ்சத்திலும், பட்டினியிலும் கஷ்டப்படுவார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இதற்காக, உச்ச வரம்பு கட்டவேண்டியதில்லை என்று நான் நினைப்பதாக யாரும் கருதவேண்டிய அவசியமில்லை. இந்தத் திட்டத்தை நிறைவேற்றவேண்டுமென்று சொன்னால். அதற்கான எல்லாவிதமான ஆயத்தங்களையும் செய்துகொண்டு, இதிலே வெற்றி காணமுடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டு, அந்த அடிப்படையிலே இதிலே புகவேண்டு

30th October 1958] [Sri C. Subramaniam]

மென்று சொல்ல விரும்புகிறேன். அவ்வாறு இல்லாமல் இந்தப் பிரச்னையை நாம் எடுத்துக் கொள்வோமேயானால், அதன் மூலமாக கஷ்டங்கள் தான் ஏற்படும். பின்னர் இந்தக் கொள்கையை நிறைவேற்றுவதிலும்கூட கஷ்டங்கள் ஏற்படும். கனம் பழனிசாமி சொன்னதுபோல, எவ்வளவு தான் உணர்ச்சி வசப்பட்டிருந்தாலும், $\frac{1}{4}$ ஏக்கர், $\frac{1}{2}$ ஏக்கர் போன்ற சிறிய உடமைகளைச் சரிவர நடத்த முடியாது. அவைகளை எல்லாம் "Consolidation of holdings" செய்துதான் ஆகவேண்டியிருக்கும். கனம் பழனிசாமி சொன்னது எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. கம்யூனிச கொள்கையை அவர் அடிப்படையாகக் கொண்டவர், அதிலே நம்பிக்கையுள்ளவர். தனிப்பட்டவர்களுக்கு பூமியில் சொத்துரிமை இருந்தால் தான் அக்கறை காட்டுவார்கள் என்று சொன்னார். அப்படியென்றால், கூட்டுறவு முறைப்படி விவசாயம் செய்வது கம்யூனிச கொள்கைக்குப் புறம்பாக இருக்கும். அதிலே யாருக்கும் தனிப்பட்ட சொத்துரிமை கிடையவே கிடையாது. அதற்காக ரஷியாவிலே விவசாய உற்பத்தி அதிகமில்லை யென்று சொல்லிவிட முடியுமா, என்ன ? தனிப்பட்டவர்களுக்கு சொத்து உரிமையிருந்தால்தான் அதிகமாக விளைச்சல் ஏற்படுமென்றால், அதை ஏன் தொழில் துறையில் பின்பற்றக்கூடாது? சொந்தத் தொழில் என்ற உரிமை இருந்தால்தான் உற்பத்தி பெருகும் என்பதை அவர் ஒப்புக்கொள்வாரா ? இதற்கும் அதற்கும் சம்பந்தம் கிடையாது. ஒன்றுக்கொன்று முரண்பாடான கருத்துக்களைச் சொல்லிக் குழப்புவதினால் பிரயோஜனம் ஒன்றுமில்லை. நிலப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு எல்லாவிதமான ஆயத்தங்களையும் செய்துகொண்டு, அந்த அடிப்படையிலே இறங்க வேண்டும். அதற்கு வேண்டிய ஆயத்தங்கள் இல்லாமல் ஆற்றிலே இறங்கவேண்டும் என்று சொன்னால், அதனால் விபரீதம் ஏற்படும். இதை மற்றவர்களும் ஏற்றுக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன். உச்ச வரம்பு கட்டி இன்றைக்கு நிலத்தை எடுத்துக்கொண்டால், அதை எப்படி பங்கிட்டுக் கொடுப்பது, என்னென்ன காரியங்களைச் செய்யவேண்டும், என்னென்ன அவசரமான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும் என்பதற்கு ஒரு கமிட்டியைப் போட்டு பரிசீலனை செய்வதுதான் முக்கியமேதவிர, கொள்கை அளவிலே உச்ச வரம்பு கட்டுவதற்கு நீங்கள் தீர்மானம் கொண்டு வந்திருக்கிறீர்கள், அதை நாங்களும் ஒப்புக்கொண்டோம் என்ற அடிப்படையிலே நடந்து கொண்டால், மற்றவர்களை ஏமாற்றுவது போலத் தான் இருக்கும். உண்மைப் பிரச்னையை அணுகுவதாக இருக்காது. இன்றைக்கு சிறிய நிலச்சுவான்தார்களுக்கு எந்த முறையில் உதவி செய்து வருகிறோம், இருக்கக் கூடிய நிலத்தை பங்கிட்டுக் கொடுப்பது என்றால் எந்த முறையில் பங்கிட்டுக் கொடுப்பது, எந்த முறையில் குடியானவர்களுக்கு வசதிகளைச் செய்து கொடுப்பது என்பதை யெல்லாம் ஆராய்ந்து, அறிந்து, செயலிலே இறங்கினால் வெற்றி பெற முடியும் என்பதை நிரூபித்துக் காண்பித்து, அந்த அடிப்படையிலே படிப்படியாகச் செல்வோமேயானால், வெற்றி காண முடியும். அவ்வாறு இல்லாமல், ஒரே தாவாக தாவவேண்டுமென்று சொன்னால், சக்தியுள்ளவர்கள் வேண்டுமானால் தாவலாம், மற்றவர்கள் தாவினால் பற்களும், மண்டையும் தான் உடையும். ஆகவே, கொள்கை அடிப்படையிலே "doctrinaire approach" என்று சொல்லுவார்கள், வெறும் கோஷங்கள் அடிப்படையிலே இதை அணுகாமல், எந்த முறையிலே நம்முடைய பொருளாதாரத்தை இது பாதிக்காது, எந்த முறையிலே விவசாய உற்பத்தியை பாதிக்காது, எந்த முறையிலே இந்தப் பிரச்னையை தீர்ப்பதன் மூலம் உற்பத்தியை பெருக்க முடியும் என்று யோசித்து, அந்த அடிபடையிலே இதை அணுகி, அதற்கான திட்டங்களை வகுத்து, இந்த நில உச்ச வரம்புப் பிரச்னையை நாம் தீர்க்க வேண்டும். அந்த முறையிலே இந்தப் பிரச்னையை இந்த சட்டசபை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த அவகாசத்தைக் கொடுத்ததற்காக சபாநாயகருக்கும், சபையோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*SRI C. N. ANNADURAI: சட்டமன்றத் தலைவர் அவர்களே, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது என்ற கொள்கையில் நம்முடைய நிதி அமைச்சர் அவர்களுக்கு மாறுபாடான கருத்து இல்லை என்பதனை அவர் எடுத்துச் சொன்னதற்காக நான் உண்மையாகவே மகிழ்ச்சி அடைகிறேன்.

ஏனென்றால், அவர்கள் எவ்வளவு தெளிவாக எவ்வளவு தூய நோக்கத்துடன் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் பேசியிருந்தபோதிலும், நாட்டிலே பரவலாக ஒரு எண்ணம் வளர்ந்திருக்கிறது. அதை சிலர் படித்து வரவேற்றிருக்கிறார்கள். சில பேர்கள் பயப்பட்டுக்கொண்டு, நம்முடைய நிதி அமைச்சர் எப்பொழுது மிராசுதார்களுக்கு வழக்கறிஞராகி விட்டார் என்று கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இன்றைய தினம் அவர்கள் நமக்கு அவர் தம் கொள்கையிலிருந்து மாறவில்லை, சர்க்காரும் அந்தக் கொள்கையை நழுவவிடவில்லை என்பதனை எடுத்துச் சொன்னதற்காக நாம் உண்மையாக அவரைப் பாராட்ட கடமைப்பட்டிருக்கிறோம். எனக்கு மிக ஆச்சரியத்தைக் கொடுப்பது என்னவென்றால், அவர் இன்றைய தினம் பேசிய எல்லா வாதங்களையும் ஒவ்வொரு மிராசுதார்கள் மகா நாட்டிலும் பேசுகிறார்கள். நிலத்திற்கு உச்சவரம்பு கட்டவேண்டுமென்று கருதுகின்ற இந்த சர்க்காரினுடைய வாதங்களும், இருக்கிற நிலங்களை விட்டுவிடக்கூடாது என்று பிடிவாதமாகக் கருதிக் கொண்டிருக்கிறவர்களுடைய வாதங்களும், இரண்டும் எப்படி ஒன்று போலவே இருக்கின்றன என்பது எனக்கு அவ்வளவாக விளங்கவில்லை. ஒரு சமயம் உச்சத்திற்கு செல்கிற நேரத்தில் மேதாவிகள் ஒன்றுபட்டுவிடுகிறார்களோ என்று ஐயப்படுகிறேன். மிராசுதார்கள் மகாநாட்டில் நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டக்கூடாது என்று சொல்லுகிற நேரத்தில், அவர்களும் அப்படிச் செய்தால் உற்பத்தி கெட்டுவிடும் என்று வலியுருத்துகிறார்கள். அது போலவே, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டுமென்று கொள்கையை உடனடியாக திட்டவட்டமாக நிறைவேற்றினால் உற்பத்தி பாதிக்கப்பட்டு விடும் என்று நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் வலியுறுத்திகிறார்கள். இரண்டு வாதங்களும் ஒன்று போல் காணப்படுவதால், நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் மிராசுதார்கள் பக்கத்தில் சாய்ந்துவிட்டார்களோ என்று சிலர் ஐயுறுவதற்குக் காரணம் இருக்கிறது. ஏனென்றால், நாட்டிலுள்ள பெரும்பாலான மக்கள் நம்முடைய நிதி அமைச்சர் அவர்களைப் போல் லட்சியம், லட்சியத்திற்கான விளக்கம், திட்டம், திட்ட நிறைவேற்றம் என்றெல்லாம் வகுத்துப் பார்த்து நிலைமையைகளை ஆராய்ந்து பார்க்கக்கூடியவர்கள் அல்ல. அவர்களுக்கு அதற்கேற்ற நேரமும் இல்லை. அவர்கள் அறிய விரும்புவது எல்லாம், நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டும் என்று ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்ட காலத்தில், அது வேண்டாம் என்று நிதி அமைச்சர் கூறிவிட்டார் என்று வெளியே பேசிக்கொள்ளப்படுகிறதே. அது ஏன் என்பது தான். வெளியே எப்படிப் பேசிக்கொண்டாலும் அதைத் தாங்கிக் கொள்ளுவதற்கு அவர்களுக்கு வலுவு இருக்கிறது. அவர்களுக்கு வலுவு இருக்கிறது என்பதை நான் உணர்ந்திருக்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நிலப்பிரச்னையைப் பற்றித் தீர்மானம் அல்ல அங்கு வந்தது. உணவு உற்பத்தியைப் பற்றிய தீர்மானம்தான் அங்கு வந்திருக்கிறது. அதிலே நிலப் பிரச்னையைப் பற்றியும் கவனிக்க வேண்டிய ஒரு கட்டம் ஏற்பட்டது. அங்கு இருக்கக்கூடிய ஒரு நண்பர் ஸ்ரீ என். கே. பழனிசாமி அவர்கள் சொன்னது போல, நிலத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டால், தானாகவே உற்பத்தி பெருகிவிடும் என்கின்ற கருத்தை வெளியிட்டார்கள். அது தவறு என்கின்ற முறையில், இது கொஞ்சம் கவனிக்கப்பட வேண்டிய விஷயம் என்று எடுத்துக் சொன்னேன். அங்கு உச்ச வரம்பு பற்றிய தீர்மானமும் வரவில்லை. அதை எதிர்த்துப் பேச சந்தர்ப்பமும் எழவில்லை.

*SRI C. N. ANNADURAI : நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது பற்றி அங்கே பிரச்னை எழவில்லை, உணவு உற்பத்தியைப் பற்றிய பிரச்னை தான் எழுந்தது என்று நிதி அமைச்சர் அவர்கள் விளக்கம் அளித்தார்கள். அங்கே நிதி அமைச்சர் அவர்கள் வெளியிட்ட கருத்து நாம் இப்பொழுது எடுத்துக்கொண்டு விவாதித்துக் கொண்டிருக்கிற தீர்மானத்திற்கு பாதகமாகிவிடக்கூடாது என்ற அளவில்தான் நான் கூறுகிறேன். நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டும் என்று சொல்லுகின்ற நேரத்தில், ஒரு லட்சியத்தை பார்த்துக்கொண்டிருக்கிறோம். அந்த லட்சியத்திலிருந்து நழுவவிடவில்லை என்று மறுபடியும் நிதி அமைச்சர் அவர்கள்

30th October 1958] [Sri C. N. Annadurai]

உறுதி அளித்ததற்காக நாட்டிலுள்ள எல்லா கட்சியினர்களும் அவர்களுக்கு நன்றி கூற கடமைப்பட்டிருக்கிறார்கள். அதனை அவர்கள் விளக்குகின்ற நேரத்தில், "நான் இப்பொழுது புதிய கருத்துக்களை சொல்லவில்லை. நீண்ட நாளைக்கு முன்னாலேயே சொல்லியிருக்கிறேன்" என்று கூறினார். நல்ல பொருக்கு விதைகள், நீர்ப்பாசன வசதிகள், நல்ல உரங்கள், குடியானவர்களுக்குத் தேவையான பண வசதிகள், இவைகளையெல்லாம் கொடுத்தால் தான் உற்பத்தி பெருகுமே தவிர, நிலத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டால் உற்பத்தி பெருகிவிடாது என்பதனை எடுத்துச்சொன்னார்கள். நிலத்தைப் பிரித்து வாங்கிக்கொள்கிறவர்களும், நிலத்தைப் பெற்றுக்கொண்ட பிறகு, நல்ல விதை, நல்ல உரம், சர்க்காரிடமிருந்து மானியங்கள், கடன்கள் இவைகளையெல்லாம் பெற முடியும் என்ற நம்பிக்கையின் பேரிலேதான் நிலத்தை கேட்கிறார்களே தவிர, நிலத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டால், நந்தனார் காலம் போல் சிவகனங்கள் வந்து உழுது விடுவார்கள் என்று நம்பிக் கொண்டிருக்கவில்லை. நாட்டை ஆளுகின்ற சர்க்கார் ஏழை விவசாயிகளுக்கு நிலத்தைப் பங்கிட்டுக் கொடுக்க கடமைப்பட்டிருப்பதுபோல், பிரித்துக்கொடுத்த நிலங்களை நல்ல விளை நிலங்களாக மாற்றுவதற்காக ஏழை விவசாயிகளுக்கு உதவி செய்ய கடமை பட்டிருக்கிறார்கள். வேண்டுமானால், அந்தக் கடமைகளை நிறைவேற்றுவதற்கு வசதி இல்லை என்று வாதாடலாம். அதற்குப் போதுமான திட்டங்களை நாங்கள் போட்டுக்கொள்ளவில்லை என்று சொல்லலாம். அதை வேண்டுமானால் குற்றமாகச் சொல்லுங்கள் என்று நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அவர்களை குற்றம் கூறுதவற்கு நாங்கள் அவ்வளவு பெரியவர்கள் அல்ல. எனக்குத் தோன்றுவது என்னவென்றால், நிதி அமைச்சர் இந்தப் பிரச்னையை தெரிந்து கொண்டிருக்கும்போது, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டும் என்று அவரைச் சார்ந்திருக்கிற கட்சியினர்களும், அவர்கள் ஈடுபட்டிருக்கிற ஆட்சியும் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறபோது, அது வெற்றி பெறுவதற்கான திட்டங்களை இதற்கு முன்னாலே வகுத்துக்கொள்ளுவதற்கு என்ன? என்ன குறிக்கிட்டது என்று அறிய விரும்புகிறேன். 1953-ம் ஆண்டிலேயே இதைப்பற்றி நான் வலியுறுத்தியிருக்கிறேன் என்று இந்த மாமன்றத்தில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் இதைப் பற்றி பேசியதை எடுத்து படித்துக் காண்பித்தார்கள். அதிலிருந்து இது வரையில், இப்பொழுது அவர்கள் அமைக்க விரும்புகிற அந்தக் கமிட்டியை, அதாவது இந்த சட்டமன்ற அங்கத்தினர்கள் கொண்ட கமிட்டியை அமைத்து இதுவரையில் வேலை செய்து வந்திருந்தால் இப்படி குந்தகப் பட வேண்டிய அவசியமும் தயக்கமும் அடையவேண்டிய காரணமும் இருந்திருக்காது. அப்படிச் செய்ய முடியாமல் இருந்ததற்குள்ள காரணத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர்களுடன் நெருங்கிப் பழகக்கூடிய சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்கவில்லை. ஒன்று எனக்குத் தோன்றுகிறது, இந்தப் பிரச்னைகளை நன்றாகப் புரிந்து கொண்டும் அதைத் தீர்க்காமல் இருந்திருக்கிறார்கள் என்றால் இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு ஏற்ற ஆற்றல் பெற்று இருக்கிறார்கள். அப்படியிருந்தும் அந்தப் பிரச்னைகளைத் தீர்க்காமல் இருக்கிறார்கள் என்றால், அவர்கள் தங்களையும் அறியாமல் எதிரிகளுடைய கையாளாக ஆகி விட்டார்களோ என்றுதான் நான் வருத்தத்துடன் கூற வேண்டியதாக இருக்கிறது.

உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக மட்டுமே நிலத்தைப் பிரித்துக் கொடுக்கவேண்டும் என்று யாரும் வாதாடுவது இல்லை. நிலத்தைப் பிரித்துக் கொடுக்க வேண்டியதன் லட்சியம் அவர்களுக்குள்ள ஒரு உடமையில் உரிமை பெறவேண்டும் என்ற கொள்கையும், அவர்கள் உழைப்பதற்கான பலன் அவர்களுக்கே சேருகிறது என்ற உரிமை மனப்பான்மை அவர்களுடைய மனதில் வரவேண்டும் என்ற திட்டத்தையும் வைத்துத்தான் நிலத்தைப் பிரித்துக் கொடுக்கவேண்டும் என்று பேசுகிறோம். அதிக அளவுக்கு ஒருவரிடத்தில் செல்வம் குவிந்திருக்கக்கூடாது என்று சம தர்மப் பிரச்னை இருக்கிறதே தவிர உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக சம தர்ம பிரச்னை ஏற்படவில்லை. சம தர்மப் பிரச்னை இல்லாத நாட்டிலேகூட உணவு உற்பத்தி அதிகரித்திருக்கிறது. முதலாளித்துவ நாடாகிய அமெரிக்காவில் கூட உணவு உற்பத்தி ஏராளமாகப் பெருகி இருக்கிறது. அதைப்

[Sri C. N. Annadurai] [30th October 1958

போலவே சம தர்மத்திற்கு அச்சாணியாக இருக்கக்கூடிய சோவியத் நாட்டில் கூட உணவு உற்பத்தி பெருகிக் கொண்டே இருக்கிறது. திட்டத்தின் அடிப்படையில் உணவு உற்பத்தி பெருகவேண்டும் என்று பேசுகிற நேரத்தில், திட்டங்களின் அடிப்படையில் உணவு உற்பத்தி என்பது உணவு உற்பத்தி பெருகுவதற்கு திட்டங்கள் உதவிகரமாக இருக்கலாம் என்பது தான் பொருள். உணவு உற்பத்தி பெருகவேண்டும் என்று கூறுகிற நேரத்தில் நிலத்தினுடைய தரம், அதில் பாடுபடுகிற மக்களுக்கு கிடைக்கிற வசதிகள், அப்படிப்பட்ட வசதிகள் நாட்டை ஆளுகிறவர்கள் செய்து தருகிற முறை, பாங்கு, அவைகளைப் பொறுத்து உற்பத்தி பெருக்கம் இருக்கிறது. கோவை மாவட்டத்தில் நிலத்தினுடைய வளத்தைப்பற்றியும் உழைப்பாளிகளுடைய திறமைப்பற்றியும் கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார். ஒரே நாளில் செங்கற்பட்டு மாவட்டத்தின் நில வளத்தைப் பற்றியும் கோவை மாவட்டத்திலுள்ள நில வளத்தைப் பற்றியும் பேசுவதற்கு வாய்ப்பு ஏற்படுத்திக் கொண்டது பற்றி நான் மகிழ்கிறேன். கோவை மாவட்டத்தில் நிலவளம் அவ்வளவு அதிகமாக இருப்பதன் காரணம் அங்குள்ளவைகள் " வர்ஜின் சாயில் ".

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கே நல்ல உழைப்பாளிகள் இருக்கிறார்கள். அதுதான் காரணம்.

SRI M. KALYANASUNDARAM : அப்படியானால் மற்றவர்கள் சோம்பேறிகளா ?

* SRI C. N. ANNADURAI : " வர்ஜின் சாயில் " என்பதன் முழுப் பொருளை கனம் நிதி அமைச்சர் அவர்கள் உணர்ந்து கொண்டால் நல்லது. வர்ஜின் சாயிலாக இருப்பதன் காரணத்தாலேயும் நல்ல உழைப்பாளிகளாக இருப்பதன் காரணத்தாலேயும் உணவு உற்பத்தி அதிகமாகி இருக்கிறது. எங்கள் மாவட்ட நிலம் கொஞ்சம் ஔவை பிராயத்தை அடைந்திருக்கிறது. அதனால்தான் செங்கற்பட்டு ஜில்லாவில் நல்ல உழைப்பாளிகள் இருந்தும்கூட பலன் கிடைக்கவில்லை என்பதை நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை. கோவை மாவட்டத்தில் மண் வளம் எப்படி இருக்கிறது என்பதையும் நான் மறக்கவில்லை. பல ஆண்டுகள் அங்கே தங்கி வாழ்ந்திருக்கிறேன். அவர்களுடைய உழைப்புத் திறமையும் தமிழ் அகத்திலேயே வேறு எந்த உழவர்களுக்கும் இல்லை என்பது தெரியும். அதை நான் தெரிந்து கொண்டிருக்கிறேன். ஏனென்றால் அவர்கள் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு அவர்களைச் சூழ இருக்கும் காடுகளை எல்லாம்,—கோவையில் நிலங்களை அவர்கள் காடுகள் என்றுதான் சொல்லுவார்கள்,—அந்தக் காடுகளில் அவர்கள் பருக்கைக் கற்களைப் பொறுக்கி எடுத்து வீசிவிட்டு, நிலம் வளம்பெற, பாடுபட்டு உழைத்து வருகிறார்கள். அப்படி உழைப்பதற்கும் அவர்களுக்கு உற்சாகம் இருக்கிறது. அதில் விளைகிற அவ்வளவும் அவர்களுக்கே சொந்தம், இதிலே விளைகிற நெல்லை எந்த வியாபாரியும் கொள்ளை லாபத்திற்கு விற்கப் போவதில்லை. இதிலே கிடைக்கும் தானியம் மறுபடியும் கஞ்சிக் கலயத்திற்கு வந்து சேரும் அல்லது அருமை மனைவிக்குத் தங்க நகையாகும். நிதி அமைச்சர் சொன்னதைப்போல் ஆறாயிரம், ஏழாயிரம் என்று பணத்தைச் சேர்த்து வைக்க உதவும் ; சில இடங்களில் அவர்களுக்குப் பிறக்கும் உதவாக்கரைப் பிள்ளைகள் செலவழிப்பதற்குக்கூட பயன்பட்டுக்கொண்டு வருகிறது என்ற எண்ணம், உழைப்பை அதிகப் பலனுள்ளதாக்குகிறது.

நிலம் தங்களுக்குச் சொந்தம் என்ற எண்ணம் வரும்போது, அதிலே கிடைக்கும் உற்சாகம் நல்ல விதையிலே இல்லை. அதிலே கிடைக்கும் உற்சாகம் நல்ல உரத்திலே இல்லை. உரம் வேண்டாம் விதை வேண்டாம் என்று சொல்லவில்லை. உரத்தையும் விதையையும் வாங்கித்தர வேண்டியது சர்க்காருடைய கடமை. அதைப்போலவே நாட்டு மக்களுக்கு அவர்கள் உழைப்பினால் கிடைக்கும் பலனை அவர்கள் அனுபவிக்க முடியும் என்ற உரிமை தரும் உற்சாகத்தை அளிக்கவேண்டும்.

30th October 1958] [Sri C. N. Annadurai]

வசதி இல்லாதவனுக்கு நிலத்தைப் பங்கிட்டுக் கொடுத்தால் என்ன பலன் என்று நம்மிடத்தில் வாதாடும் நிதி அமைச்சர் அவர்கள் காங்கிரஸ் தியாகிகளுக்கு நிலத்தை 5 ஏக்கர் 10 ஏக்கர் என்று பங்கிட்ட நேரத்தில் அவர்களிடம் ஏர் இருக்கிறதா கலப்பை இருக்கிறதா, பணம் இருக்கிறதா என்று ஆராயவில்லை என்பதைக் கவனிக்கவேண்டும். அவர்களால் நல்ல விதை வாங்கிக் கொள்ள முடியுமா என்றும் எண்ணிப் பார்க்கவில்லை. உரம் பெற்றுக்கொள்ள வசதி இருக்கிறதா என்றும் எண்ணிப் பார்க்க வில்லை. தியாகம் செய்தார்கள், அவர்களைக் காப்பாற்றினால் பெருமை பெற்றுக்கொள்ளலாம் என்ற எண்ணத்திலே பங்கிட்டுக் கொடுத்தார்கள். நிதி அமைச்சர் சொன்னதுபோல், சிலர் நல்ல உழைப்பால் பயன் அடைந் தார்கள். சிலர் நிலத்தைப் பெற்று, கடன்பட்டுக் கெட்டுவிட்டும் இருக் கிறார்கள். சிலர், நிலத்தை வாங்கி யார் யாருக்குக் கொடுக்கவேண்டு மென்று மனதில் எண்ணியிருந்தார்களோ அவர்களுக்குக் கொடுத்தும் இருக்கிறார்கள். பலவகையிலே நிலம் துர்விநியோகிக்கப்பட்டதைக் காரண மாகக் காட்டி, நிலத்தைப் பங்கிட்டுக் கொடுக்கக் கூடாது என்று நிதி அமைச்சர் வாதாடி தப்பித்துக்கொள்ளப் பார்க்கிறார் என்று மற்றவர்கள் பேசி, அவருடைய வாதத்தைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது என்ப தற்காகத்தான் இன்றைய தினம் அமைச்சர் அதைப்பற்றி பேசவேண்டும் என்று பெரிதும் விரும்பினேன். ‘ நிலத்தைப் பிரித்துக் கொடுப்பது தவறு என்ற வாதத்தை நிதி அமைச்சர் அவர்கள் கூறினார்கள் ; பாருங்கள் ; பாருங்கள் ’ என்ற வகையில் பெரிய பெரிய பத்திரிகைகள் அவருடைய படத்தைப் போட்டுக் காட்டுவதையும், அவர் பேசிய பேச்சை பக்கம் பக்கமாகப் போடுவதையும் கண்டு அவர் எங்கேயாவது மயங்கி விடுகிறாரோ என்பதற்காகவும், அதையெல்லாம் கண்டு அவர் மயங்காமல், தம்முடைய கொள்கையை எடுத்துச் சொல்ல வேண்டுமென்றும் நான் பெரிதும் விரும்பினேன்.

லட்சியங்களை நிறைவேற்றும் நேரத்தில், நேரிடக் கூடிய கொள்கைக் குழப்பங்கள், நேரிடக்கூடிய சிக்கல்கள், இவைகளை அமைச்சர்களும் மற் றோரும் அனுசரித்துப் பார்க்க வேண்டும். என்னைப் பொறுத்த வரையில் சொல்வேன்—நம்முடைய நாட்டில் ஆயிரம் இரண்டாயிரம் ஏக்கர் என்றோ, ஆயிரம் இரண்டாயிரம் வேலி என்றோ, பல பேரிடத்தில் இல்லாமல் ‘ பெசன்ட் ப்ரொப்ரைட்டர் ’ என்று சொல்லக்கூடிய சிறு சிறு நிலச் சுவாந்தார்களிடத்தில் பெருவாரியான நிலம் இருக்கிறது என்பதை அவர் கள் குறிப்பிட்டார்கள். அப்படியிருந்தும், ஏன் உற்பத்தி பெருகவில்லை என்று 1953-ம் ஆண்டிலே அவர்கள் கேட்டதை இங்கே படித்துக் காட்டி னார்கள். இப்பொழுது அவர்களே மற்ற சொற்பொழிவுகளிலே இங்கே நம்முடைய உற்பத்தி பெருகியிருக்கிறது என்பதைக் காட்டியிருக்கிறார்கள். 1953-ம் ஆண்டிலே நிலம் பிரிக்கப்பட்டால் உற்பத்தி பெருகி விடாது என்று எடுத்துச் சொல்லப் பயன்பட்ட அதே வாதத்தை இன்றைய தினம் எதற்குப் பயன்படுத்துகிறார்கள். எங்களுடைய நாட்டில், எங்களுடைய திட்டத்தினால், நாங்கள் விவசாயிகளுடைய பிரச்னைகளைத் தீர்ப்பதிலே எடுத்துக்கொண்ட முயற்சியினால் உற்பத்தி பெருகியிருக்கிறது என்று காட்டப்படுகிறது. உற்பத்தி பெருக்கத்திற்கும், நிலத்தைப் பிரிப்பதற்கும் சம்பந்தம் இல்லை என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால், அதே நேரத்தில், அவர் உண்மையாக ஒன்றுக்கொன்று இந்த இரண்டு பிரச்னைகளையும் தொடர்பு படுத்த வேண்டிய அவசியம் இல்லையென்றால், நம்முடைய நண்பர் கோதண்டராமன் அவர்கள் கொண்டு வந்திருக்கும் தீர்மானத் தைச் சர்க்கார் ஏற்றுக்கொள்வதால் ஒரு சங்கடமும் இல்லை. தீர்மானம் குறிப்பிடுவது லட்சியத்தைத்தான். அதிகமான அளவுக்கு நிலத்தை வைத்துக் கொண்டிருப்பவர்களைப் பொறுத்த வரையில், உச்ச வரம்பு கட்டி விடுங்கள், மிச்ச நிலங்களை நிலமில்லாத ஏழை மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுங்கள் என்ற லட்சியம் தீர்மானமாக தரப்பட்டிருக்கிறது. அதை ஏற்றுக்கொள்வதால் உற்பத்தி ஒன்றும் கெட்டு விடாது என்று நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் நம்புவார்கள் என்று நான் நம்புகிறேன். தீர்மானத்தை ஏற்றுக்கொண்டுவிட்டேன் என்று நிதி அமைச்சர் அவர்கள் சொல்லிவிட்டால், வெளியிலே உள்ளவர்கள், நாம் எந்த இடத்தை நோக்கிச் செல்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு உதவியாக

இருக்கும். இந்தத் தீர்மானத்தை சர்க்காரே எற்றுக்கொண்டால், அது அவர்களுடைய பெருந்தன்மையை மட்டுமல்ல, அவர்களுக்கு லட்சியத்திலே இருக்கும் நம்பிக்கையையும் எடுத்துக்காட்டுவதாக அமையும்.

ஆகையால், இதை ஏற்றுக்கொள்வதற்கும் உணவு உற்பத்திக்கும் அதிக சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லை. நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டும் என்ற பிரச்னை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியிலே பேசப்பட்ட நேரத்திலேதான் இந்தத் திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன என்று அறிகிறேன். அங்கே நிறைவேற்றிய தீர்மானத்தின் வாசகத்தைச் சொன்னால் நன்றாக இருக்கும் என்று நிதி அமைச்சர் அவர்களை நான் முதலிலேயே கேட்டுக்கொண்டேன். தீர்மானத்தின் வாசகத்தைப்பற்றி யார் என்ன சொன்னாலும், நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டிப் பிரித்துத் தரவேண்டுமென்பதுதான் சர்க்காருடைய லட்சியம் என்பதையும், உணவு உற்பத்திப் பெருக்கத்தையும், நிலப் பிரச்னையையும் ஒன்று படுத்துவது தவறு என்பதையும் நிதி அமைச்சர் அவர்கள் உடனடியாக பொது மக்களுக்கு ஒரு அறிக்கையின் மூலம் தெரிவித்துவிட வேண்டும். நிலத் திற்கு உச்ச வரம்பு கட்டுவது என்ற சர்க்காருடைய லட்சியத்தை நழுவ விட்டுவிடவில்லை, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது எங்களுடைய கடமை, உணவு உற்பத்தியை எப்படிப் பெருக்குவது என்பதற்கும் இதற்கும் தொடர்பு இல்லை என்று நிதி அமைச்சர் அவர்கள் விளக்கம் அளிப்பா ரானால், மிக நல்ல முறையிலே அது நாட்டுக்குப் பயன்படும். அப்படிச் செய்யாவிட்டால், நாட்டில் பலர் உணவு உற்பத்தியை அதிகரித்தல், நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டுதல் ஆகிய இரண்டு பிரச்னைகளையும் சேர்த்து, “பாருங்கள், பாருங்கள்; கனம் நிதி அமைச்சர் நன்றாகக் கூறியிருக் கிறார். நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டினால் உணவு உற்பத்திப் பெருக் கம் பாதிக்கப்படும் என்று அவர் கூறியிருக்கிறார். அவர் கோவை மாவட்டத்தைச் சேர்ந்தவர். எனவே, அவர் உழவுத் தொழிலில் திறமை படைத்தவர். அவரே அவ்வாறு கூறியிருக்கிறார்” என்று சொல்வார்கள். கனம் நிதி அமைச்சரின் நண்பரும் என் நண்பருமான திரு. கருத் திருமன் அவர்கள் உழவருக்கு நிலத்தில் ஒரு அங்குலம் விட்டுக்கொடுப்ப தற்குக்கூட எவ்வளவு பிடிவாதம் செய்தார்கள் என்பதைப் பார்த்தோம். ‘உழவருக்கு அதிக நெல் கொடுங்கள்’ என்று நாங்கள் சொன்னபோது திரு. கருத்திருமன் ‘என், நாற்று நடுபவர்களுக்கு நெல் கொடுக்க வேண்டாமா?’ என்று கேட்டு கடைசியில் மாடு வரைக்கும் தமது வாதத் தைக் கொண்டுவந்தார். ஒருவருக்கு நிலத்தில் உரிமை ஏற்பட்டு விட்டால் அதை விட்டுக்கொடுப்பது அவருக்கு அவ்வளவு சுலபமல்ல. உடைமை உணர்ச்சி என்பது யாருக்கும் எளிதில் குறையாது. வாதம் செய்வதால் உடைமை உணர்ச்சி குறைந்துவிடாது. ஒரு கட்சியில் சேர்ந்துவிட்டதால் மட்டும் உடைமை உரிமையை விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை யாருக்கும் வந்துவிடாது. தங்கள் கட்சியில் சேர்ந்துவிட்டவர்களுக்கு அந்த மனப் பான்மை வந்துவிடும் என்று பெரும் கட்சித் தலைவர்கள் நம்பினால் அவர்கள் தவறு செய்தவர்கள் ஆவார்கள். யாருக்கும் உடைமை உணர்ச்சி அவ்வளவு சீக்கிரம் குறைந்து விடாது. நிலச்சுவாந்தார்களுக்கு இருக்கும் நில உடைமை உணர்ச்சியைக் குறைக்க வேண்டுமென்பதற்காகத்தான் நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் லட்சியத்தை நாம் ஏற்றுக்கொண் டிருக்கிறோம்.

**SRI P. G. KARUTHIRUMAN** : நிலச்சுவாந்தார்கள் நில உடைமையை விட்டுக்கொடுக்க மாட்டார்கள் என்று ஸ்ரீ. அண்ணாதுரை சொன்னார். நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டப்பட்ட பிறகு, என்னிடம் உச்ச வரம்பிற்கு மேல் உள்ள நிலங்களை யாருக்குக் கொடுக்க வேண்டுமென்று கனம் அங்கத்தினர் கூறுகிறாரோ அவர்களுக்குக் கொடுக்க நான் தயாராயிருக் கிறேன் என்று இந்த சந்தர்ப்பத்தில் அறிவித்துக் கொள்கிறேன்.

* **SRI C. N. ANNADURAI** : அவ்வளவு தயாராக இருப்பவர் வினோ பாஜி வந்தபோது அவருக்குக் கொடுத்திருக்கலாம்.

30th October 1958]

**Sri P. G. KARUTHIRUMAN** : அவருக்குக் கொடுத்திருக்கிறேன். அது கனம் அங்கத்தினருக்குத் தெரியாது. ஏனென்றால் அப்போது அவர் அரசியலில் இல்லை.

* **Sri C. N. ANNADURAI** : சட்டங்கள் கொண்டுவரப்படும்போது மனிதர்களின் நல்லெண்ணங்களைத் தடவிப்பார்த்து அவை கொண்டுவரப் படுவதில்லை. நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் சட்டம் கொண்டுவரப் பட்ட பிறகு, நல்ல மனிதர்களின் நல்லெண்ணத்தை அறிந்துகொள்பவர்கள் பலர் நிச்சயமாக திரு. கருத்திருமன் போன்றவர்களிடமிருந்து நிலங்களைப் பெற்றுக்கொள்ளக்கூடும்.

உச்ச வரம்பு கட்டிவிட்டால், அந்த வரம்பிற்கு மேல் நிலச்சுவாந்தார்களிடம் இருக்கும் நிலங்களை என்ன செய்வது என்று கேட்கப்படுகிறது. அவை விவசாயத்திற்குப் பயன்படுத்தப்படாவிட்டால் உணவு உற்பத்திப் பெருக்கத் திட்டம் கெட்டுவிடுமே என்று கூறப்பட்டது. நாம் அவ்வாறு கவலைப்பட வேண்டியதில்லை. அந்த நிலங்களை நிலமில்லாத ஏழைகளுக்குப் பங்கிட்டுக் கொடுப்பதற்கான வழிவகைகளைக் காண வேண்டும். அந்த நிலங்களைக் கூட்டுறவு சாகுபடித் திட்டத்திற்கு உட்படுத்தலாம் என்றால், கூட்டுறவு சாகுபடி முறை நல்ல பலன் தரவில்லையே என்று சொல்லப் பட்டது. எதிர்க் கட்சிக்காரர்கள் நல்ல லட்சியத்தை வகுத்துக் கொடுத்தால் 'அதை நாங்கள் எப்படி நிறைவேற்றுவது' என்று சர்க்கார் சொல்கிறார்கள். சர்க்காரால் கூட்டுறவு சாகுபடித் திட்டத்தையும் நல்ல முறையில் நடத்த முடியவில்லை ; எதிர்க் கட்சிக்காரர்கள் குறிப்பிடும் லட்சியத்தையும் சர்க்கார் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் ; அவர்களாகவும் நல்ல வழிவகைகளை வகுத்துக்கொள்ளமாட்டார்கள் ; நல்ல திட்டங்களை அமலுக்குக் கொண்டுவரும் விஷயத்தில் எதிர்க்கட்சிகளுடன் கலந்தாலோசிக்கவும் மாட்டார்கள் ; இந்த நிலையில் ஆளும் கட்சியினர் வீணாக வாதாடுவதில் பயனில்லை. ஜனநாயகத்தில் ஆளும் கட்சிக்கு உள்ள வலிமையைப் பயன்படுத்திக்கொண்டு வாதாடுவதில் பயனில்லை. சட்ட மன்றத்தில் ஆளும் கட்சியினரும் எதிர்க்கட்சியினரும் வெறும் வாதப் பிரதிவாதங்கள் செய்வதில் பயனில்லை. அவரவர்களிடம் உச்ச வரம்பிற்கு மேல் இருக்கும் நிலங்களை மற்றவர்களுக்கு பங்கிட்டுக் கொடுக்கும்போது அவைகளை எவ்வாறு—எந்த அளவில்—பங்கிட்டுக் கொடுப்பது எப்படிச் செய்தால் உணவு உற்பத்திப் பெருக்கத்திற்குச் சாதகமாக இருக்கும் என்று யோசனை கூறக்கூடிய நிபுணர்கள் நம்மிடம் இல்லாமலில்லை. உணவு உற்பத்திப் பெருக்கம் சம்பந்தமாக ராஜ்ய அரசாங்கத்தார் அமைத்திருக்கும் கமிட்டியில் எதிர்க் கட்சிக்காரர்கள் சேர்க்கப்படவில்லை. 'இங்கே சொன்னாலும் கேட்டுக் கொள்கிறேன், வெளியே சொன்னாலும் கேட்டுக்கொள்கிறேன்' என்று கனம் நிதி அமைச்சர் சொன்னார். 'அக்ரிகல்சர் கமிட்டி' யில் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களும் அதிகாரிகளும் அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்களே தவிர, எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்கள் அங்கத்தினர்களாக நியமிக்கப்படவில்லை. எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்கள் அதில் இடம் பெறச் செய்வதற்கு அரசாங்கத்தார் வழி வகுக்கவில்லை. அரசாங்கத்தாரின் காரியம் இப்படிப்பட்டதாக இருக்கிறது. இந்த சர்க்கார் இவ்வாறு செயலாற்றிவிட்டு, யார் வேண்டுமானாலும் எந்த யோசனையை வேண்டுமானாலும் சொல்லலாம் என்று சொல்கிறார்கள். இது எதைப் போல் இருக்கிறது ? இது, இரவில் வீட்டிற்கு வந்த விருந்தாளியை வாசலில் உட்காரவைத்துவிட்டு வீட்டுக்காரன் உள்ளே போய் தான் சாப்பிட்டு விட்டு வெளியேவந்து விருந்தாளியிடம் 'சாப்பாடு ஆகிவிட்டதே, தூங்குவோம். காலையில் பார்த்துக்கொள்ளலாம்' என்றுசொல்வது போல் இருக்கிறது. இந்த வழக்கம் கோவையில் கிடையாது. பஞ்சப் பிரதேசத்தில் இந்த வழக்கம் உண்டு. நாங்கள் குறிப்பிடும் திட்டங்களைப் பற்றிக் குறிப்பிடும்போது கனம் நிதி அமைச்சர் "இது கசாப்புக் கடைத் திட்டத்தைப் போல் இருக்கிறது. இது கோழி முட்டைத் திட்டத்தைப்போல் இருக்கிறது இது பலனளிக்குமா ? எப்பொழுது பலனளிக்கும் ; பத்து வருஷங்களாகுமே ; என்று குறிப்பிடுகிறார். நான் கோழி வளர்த்திருக்கிறேன்.

ஆறுவது மாதத்தில் கோழி முட்டையிடும்; அவசரப்பட்டு அடை காக்காம லிருந்தால் 25 நாட்களில் குஞ்சு பொறிக்கும். பத்து வருஷங்கள் காத் திருக்க வேண்டாம்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்போதுள்ள நிலைமையைப் பார்த் தால், திட்டம் பலனளிக்க பத்து வருஷங்கள் ஆகும் என்றுதான் நான் சொன்னேன். அதாவது, இப்போதிருக்கும் அளவை இன்னும் அதிகப் படுத்தி மூன்று கோடி ரூபாய் வருமானம் பெறுவதற்கு பத்து வருஷங்கள் ஆகும் என்று சொன்னேன்.

* SRI C. N. ANNADURAI : யோசனைகளை நன்றாகப் பரிசீலித்துப் பார்க்க வேண்டும். திட்டங்களைத் தெரிவிக்கும்போது கேலி செய்வது எளிது. திட்டங்களைக் கொடுப்பவர்கள் அவைகளைப் பூரணமாகக் கொடுக்க முடி யாது. கோடிட்டுத்தான் கொடுக்க முடியும். திட்டங்களைக் கோடிட்டுக் காட் டுபவர்களைப்பற்றி கேலி பேசுவது எளிது. அவர்களைப்பற்றி அவ்வாறு கேலி பேசுவதைப் பொழுது போக்காக வைத்துக்கொள்ளலாம்; ஆனால் அவ் வாறு செய்வதன் மூலம் பிரச்னையைப் புரிந்துகொள்ளவோ, தீர்க்கவோ முடியாது. எங்களுக்கு சந்தர்ப்பம் வாய்க்கும்போது நாங்களும் கனம் அமைச்சர் கோடிட்டுக் காட்டுவதை கேலி செய்ய முடியும். கனம் நிதி அமைச்சர் நல்ல உழைப்பாளி, ஏனென்றால் அவர் கோவை மாவட்டத் தைச் சேர்ந்தவர் என்று நாங்கள் சொல்ல முடியும். கேலி பேசும் வழக் கத்தை கனம் நிதி அமைச்சர் கடைப்பிடிப்பார் என்று நான் நம்பவில்லை. இந்த வழக்கம் ஜனநாயகத்தில் ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான் இதைப்பற்றி நான் இவ்வளவு தூரம் பேசுகிறேன்.

12-40 p.m.

உற்பத்தி ஆகக் கூடிய நிலங்களை தனிப்பட்ட ஆட்களிடத்தில் விட்டு விட்டால் சாகுபடி செய்வதற்கு அவர்களுக்கு வசதி கிடைக்காது என்றால், பஞ்சாயத்து யூனியன்களிடம் அவைகளை ஒப்படைத்துவிடலாம். அந்த பஞ் சாயத்து யூனியன்களுக்கும், பஞ்சாயத்துக்களுக்கும் சர்க்கார் மானியங்கள் தரலாம். ஆனால் அதில் கிடைக்கக்கூடியது பஞ்சாயத்துக்குச் சொந்த மென்று ஆகவேண்டும். என்ன செய்வது? வேறு பல சிக்கல்கள் உண்டானால் என்ன செய்வது? என்று சிக்கல்களைக் காட்டி திணற வைப்பதில் பிரயோஜனம் இல்லை. எப்படிப்பட்ட நல்ல திட்டமானாலும் சரி சிக்கல் இல்லாமல் இராது. சிக்கலை நீக்குவதில்தான் இன்பம் இருக் கிறது என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியாமல் இராது. நூல் நூற்கிற அவருக்கு எத்தனை தரம் அது அறுந்து போகிறது, எத்தனை தரம் ஒட்டவைக்க வேண்டியிருக்கிறது, முடிச்சுப் போட்டு நூல் இழுக்கும் போது எத்தனை இன்பம் உண்டாகிறது என்பது தெரியாமல் இராது— அவர் நூல் நூற்கிறார் என்ற நம்பிக்கையில் பேசுகிறேன்—சிக்கலை நீக்கு வதில்தான் இன்பம் இருக்கிறது என்பதை உணர்ந்து சிக்கல்களை நீக்குவ தில் தாங்கள் எவ்வளவு திறமை உடையவர்கள் என்பதைக் காட்டுவார்க ளானால் மெத்த மகிழ்ச்சியடைய முடியும். நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது சர்க்காருடைய கொள்கை என்பதைத் தெளிவு படுத்தியதற்காக நன்றி கூறி என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, நிலச் சீர்திருத்தச்சட்டம் விரிவான முறையிலே முக்கியமாக நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது, நிலங்களை நல்ல முறையில் சீர்திருத்தி அமைப்பது, உற்பத்தியைப் பெருக்குவது, அதே நேரத்தில் உழவர்களுடைய நீண்ட நாளைய குறைகளை எல்லாம் போக்கி உழைப்புக்குத் தக்க ஊதியம், அவர் களுக்குக் கிடைக்கும்படியான நிலத்தில் அவர்களுக்கு ஓர் உரிமை இருக்கும் படியாக சுதந்திரமாக அவர்கள் வேலை செய்யும்படியாக செய்வது ஆகிய எல்லா பிரச்னைகளையும் தீர்க்கக் கூடிய மசோதாவை—கொண்டுவர வேண் டும் என்று பல காலமாக தேசத்தில் எங்கே பார்த்தாலும் வற்புறுத்தப் பட்டு வந்திருக்கிறது.

30th October 1958] [Sri T. R. Ramamirtha Thondaman]

(Deputy Speaker in the chair.)

நிலத்திற்கு உச்சவரம்பு கட்டுவது என்ற அடிப்படையில் பரிசீலனே செய்யும்போது பல விஷயங்கள் கவனிக்கப்படவேண்டும். நியாயவார சட்டத்தில் உள்ள குறைபாடுகள் எல்லாம் நீக்கப்படவேண்டும். நாட்டில் இருக்கக்கூடிய லட்சக்கணக்கான தரிசு நிலங்கள் நிலம் இல்லாதவர் களுக்கு விநியோகிக்கப்பட்டு சாகுபடியின் கீழ் கொண்டுவரப்படவேண்டும். விவசாயிகள் என்ருல் யார் யார் என்பது சரியான முறையிலே வரையறை செய்யப்படவேண்டும். இத்தனே விஷயங்களேயும் நிலச் சீர்திருத்தம் செய்யும் முகத்தாளுக கவனிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை மக்க ளிடையே வளர்ந்து வருகிறது. சரியான முறையில் இந்தப் பிரச்னே தீர்க்கப்படாவிட்டால் உணவு உற்பத்தி குறையும். உணவு உற்பத்தி பாதிக் கப்படுவதனுல் தேசத்தில் மிகமிகக் கொடிய பஞ்சம் ஏற்படலாம் என்கிற பீதியும் வளர்ந்து வருகிறது.

சென்ற காலத்திலும்கூட, அதாவது 1949–50-ம் வருஷத்தில் நாட்டில் உணவுப் பற்ருக்குறை அதிகமாகி ரேஷன் முதலிய சங்கடங்கள் எல்லாம் ஏற்பட்டு மக்கள் பரிதவித்துக்கொண்டிருந்த நிலேயில் தஞ்சாவூர் ஜில்லாவின் உழவர்களுக்கு ஒரு பாதுகாப்பு அளிக்கப்பட்டு உழைப்புக்கேற்ற ஊதியம், உரிமை இவைகள் அளிக்கப்படுமானுல் உற்பத்தியை அதிகமாகப் பெருக்கக்கூடுமென்கிற கிளர்ச்சி, புரட்சி பல பல பகுதிகளில் ஏற்பட்டது. எங்கள் ஜில்லாவில், குறிப்பாக ஆடுதுறையில் இந்தப் புரட்சி கடுமையாக நடைபெற்றதன் காரணமாக அமைச்சர்கள் எல்லாம் சுற்றுப்பிரயாணம் செய்து நிலச் சுவான்தார்களால் விவசாயிகளுக்கு அளிக்கப்பட்டு வரும் கஷ்டங்களே எல்லாம் உணர்ந்து நிலச்சுவான்தார்கள் செய்கிற அக்கிர மங்களே புள்ளி விவரங்களோடு சேகரித்து வந்ததன் காரணமாக அவர் களுக்கு உடனடியாக ஒரு பாதுகாப்புச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்று கொண்டுவந்தார்கள். அதன் பயனுக இன்றையதினம் எங்கள் ஜில்லாவில் மிக அதிக அளவுக்கு உணவு உற்பத்தி பெருகி இருக்கிறது என்ருல் அது உழவர்கள் உரிமையளித்தால்தான் என்பதைப் பார்க்கிறோம். ஆகவே இன்றைக்கு நிலத்திற்கு உச்சவரம்பு கட்டுவதனுல், (உழவர் நிலத்தை உரிமையாக்குவதால்) நிலச் சீர்திருத்தம் கொண்டு வருவதனுல் உற்பத்தி பாதிக்கப்படாது. நிச்சயமாக உணவு உற்பத்தி அதிகரிக்கத்தான் செய்யும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அன்றைக்கு எங்கள் ஜில்லாவில் இருந்த நிலேமை என்ன என்று பார்க்கவேண்டும். நிலச்சுவான்தார்கள் தங்களுடைய நிலத்தில் பயிரிடு கிற உழவர்களுக்குக் கொடுத்த விதை, தரிசு கூலி, மாடுகள் வாங்கு வதற்குக் கொடுத்த நெல், சாப்பாட்டுக்குக் கொடுத்த நெல் எல்லா வற்றையும் அறுவடை ஆனவுடன் ஒன்றுக்கு இரண்டாக கணக்கு போட்டு உழவருக்கு 5-ல் ஒரு பங்கு வீதத்தில் ஷை கடன்களே கழித்துக்கொண்டு பாக்கியிருந்தால் கொடுத்து வந்தார்கள். பாதுகாப்புச் சட்டம் வருமுன் கூட நிலசுவான்தார்கள் சட்டம் வருவதால் நிலம் பாழாகிவிடும். நிலத்தை சாகுபடி செய்ய நாங்கள் விதை கடன் முதலிய சாதனங்கள் கொடுத்தால்தான் விவசாயி சாகுபடி செய்ய முடியுமென்று சொன்னுர்கள். ஆனுல் சட்டம் வந்தபின் உழவர்கள் தாங்களே சமாளித்துக்கொண்டு சாகுபடி செய்கிருர்கள். ஆகவே நிலச்சவான்தார் உதவியில்லாமல் விவசாயி உற்பத்தியை பெருக்கமுடியும் என்பது இதன்மூலம் அறியலாம். (சென்ற காலத்தில் இருந்த) பழக்கத்தினுல் சாகுபடியாளர்கள் எவ்வளவு பாதிக்கப்படுகிருர்கள், அதனுல் உற்பத்தி எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதை உணர்ந்தே அப்போது சர்க்கார் பாதுகாப்பு சட்டம் நியாயவாரச் சட்டத்தைக் கொண்டுவந்தார்கள். நியாய வாரச் சட்டம், பாதுகாப்புச் சட்டம் வருவதற்கு முன்பு ஒரு ஏக்கருக்கு 15 அல்லது 16 கலம் கண்டு முதல் ஆகியிருந்தால், இன்றைக்கு பாதுகாப்பு சட்டம், நியாயவாரச் சட்டம் கொண்டுவந்த பிறகு ஏக்கர் ஒன்றுக்கு 30 முதல் 40 வரையில் கண்டு முதல் செய்து வருகிருர்கள். நிலச்சுவான்தார்கள் உதவியில்லாமல், சுயமாகவே எல்லாம் செய்து எத்தனே மடங்கு உணவு உற்பத்தி அதிகரித்து இருக்கிறது என்பதைப் பார்க்கவேண்டும். ஆகவே அதில் அச்சப்பட வேண்டியதில்லே. விவசாய பண்ணேயாள் பாதுகாப்புச் சட்டம்

[Sri T. R. Ramamirtha Thondaman] [30th October 1958

கொண்டுவந்தவுடனே அப்பொழுதிருந்த முதலமைச்சர் ஸ்ரீ ராஜ கோபாலாச்சாரியார் அவர்கள் தஞ்சாவூரில் நடந்த பொதுக்கூட்டத்திலும் சென்னைக்கு கிளம்புவதற்கு முன் கடைசியாக சீர்காழி ஸ்டேஷனில் ரயில் ஏறுவதற்குமுன் நடந்த கூட்டத்திலும்—உழவர்களுக்காக இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டபோதிலும் தேசத்தின் உணவு நிலைமை பாதிக்கப் பட்டிருக்கிற காரணத்தினால் உழவர்களுடைய கஷ்டத்தை ஓரளவு நீக்கு வதன் மூலமாகவாவது உணவு உற்பத்தி அதிகரிக்கிறதா என்பதை காணவேண்டும் என்கிற நோக்கத்தோடு இந்தச் சட்டம் கொண்டுவரப் பட்டிருக்கிறது. நாட்டில் உணவு உற்பத்தியை அதிகப்படுத்திக் காட்டினால், இந்த நிலம் அவர்களுக்கே நிச்சயமாக உரிமையாக்கப்படும்—என்கிற அறிவுரையை வழங்கினார்கள் என்பதைச் சொல்ல விரும்புகிறேன்.

அவர்கள் சொன்னபடி இன்றைக்கு விவசாயிகள் அதிலும் குறிப்பாக என் ஜில்லாவில் ஒன்றுக்கு நான்கு மடங்குக்கு மேல் உணவு உற்பத்தியை அதிகப்படுத்திக் காட்டியிருக்கிறார்கள். சில இடங்களில் உணவு உற்பத்தி பாதிக்கப்பட்டிருப்பதற்கு காரணம் இந்தச் சட்டத்தை சரியாக அமுல் நடத்தாத குறைதான் என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். நிலச்சுவான் தார்கள் தங்கள் செல்வாக்கை உபயோகித்து தங்களுக்குள்ள பொருளாதார வசதியைக் கொண்டு விவசாயிகளுக்கு பல இடைஞ்சல்களை உண்டுபண்ணி நிலத்தைவிட்டு வெளியேற்றி வருகிறார்கள். பல பண்ணையாட்கள் பண்ணை இல்லாமல் வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட குறைபாடுகள் இல்லாமல் விவசாயிகளுக்குச் சரியானதொரு பாதுகாப்பை அளித்து, நிலத்தில் அவர்களுக்குப் பூரணமான உரிமை வழங்கப்பட்டால் இன்னும் அதிகமாக உணவு உற்பத்தியைப் பெருக்கமுடியும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். விவசாயிகளிடத்தில் ஊக்கமும் உணர்ச்சியும், தன்னம்பிக்கையும் இப்பொழுதுதான் வளர்ந்துகொண்டு வருகிறது. அது குறைவதற்கு இடம் கொடுத்தால் உற்பத்தி அடியோடு கெட்டுவிடும். முன்பு வந்த பஞ்சத்தைவிட மிகக் கொடுமையான பஞ்சம் வந்தாலும் வரும். அவர்களுடைய உரிமைகளை, சுதந்திரங்களைப் பாதுகாப்பதற்கு சர்க்கார் எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ள கடமைப் பட்டிருக்கிறார்கள். கனம் நிதி அமைச்சர் அவர்கள் ஈரோடில் இருக்கிற விவசாயிகள் இரண்டு ஏக்கர் நிலத்தில் உழைக்கக்கூடிய உழவர்கள்—சாகுபடி செய்கிறவர்கள்—எத்தனையோ பல ஆயிரம் ரூபாய் மிச்சம் வைத்திருக்கிறார்கள் என்பதைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்படியேதான் தஞ்சை ஜில்லாவில் இருக்கக்கூடிய விவசாயிகளும்கூட இன்றைக்குத் தங்களைக் கொஞ்சம் உயர்த்திக் கொண்டிருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டும். நிலச் சீர்திருத்தம் கொண்டு வரப்படுமானால் நிச்சயமாக அவர்களுடைய நிலைமை உயரும், உணவு உற்பத்தியும் பெருகும் என்று சொல்ல விரும்புகிறேன்.

மாகாணம் பூராவும் உள்ள தரிசு நிலங்களை எடுத்துக்கொண்டால் ஏராளமான நிலங்கள் இன்றைக்கு சாகுபடி செய்யப்படாமல் கிடக்கின்றன. எங்கள் ஜில்லாவில் மட்டும் 55 ஆயிரம் ஏக்கருக்கு மேல் கிடக்கிறது. பாக்கி ஒவ்வொரு மாவட்டத்திற்கும் எடுத்துக்கொண்டால் மாகாணம் பூராவும் ஏராளமான தரிசு நிலங்கள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் சாகுபடிக்குக் கொண்டுவரலாம். அவற்றையெல்லாம் சர்வே பண்ண வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த நிலங்களையும் உழத் தெரியாதவர்களிடமுள்ள நிலங்களையும் பிரித்துக் கொடுத்தால் ஒவ்வொரு வருக்கும் எத்தனை ஏக்கர் வரப்போகிறது என்று கேட்டார்கள். நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுத்தால் அரையே அரைக்கால் ஏக்கர் அரை ஏக்கர் வரும் என்றெல்லாம் பேசினார்கள். இங்கேதான் யாரை விவசாயி என்று வரையறுக்கிறார்கள் என்பதில் பிரச்னை எழுகிறது. திண்ணையில் படுத்திருக்கிற சோம்பேரிகள், ஆபீஸ்களில் உத்தியோகம் பார்த்து வருகிற செக்ரடேரியட் உத்தியோகஸ்தர்கள், இரும்புக் கடை வியாபாரிகள், பண்ட முதலாளி, பண முதலாளி, மில் முதலாளி, பஸ் பர்மிட்காரர், கோவில் அர்ச்சகர், பண்டார சன்னதிகள், ஜவுளிக் கடை வியாபாரிகள், காசுக் கடை வியாபாரிகள், இவர்களையெல்லாம் விவசாயி என்று பிரிப்பதா? குறிப்பாக நிலத்தில் பத்து வருஷம், பதினைந்து வருஷம் சாகுபடி

30th October 1958] [Sri T. R. Ramamirtha Thondaman]

செய்திருக்கக்கூடிய அநுபவம் உள்ளவர்களே விவசாயி என்று வரையறுக்க வேண்டும். துர்ப்பாக்கியவசமாக அப்படிப்பட்டவர்கள் வஞ்சனையால், சூழ்ச்சியால், சட்டங்களில் உள்ள சிக்கல்களினால் வெளியேற்றப்பட்டிருந்தாலும் அவர்களுக்கு நிலம் கொடுக்க வேண்டும். பத்து வருஷம் பதினைந்து வருஷங்களுக்குமேல் பரம்பரையாக நிலத்தில் பாடுபட்டுவருகிற விவசாயிகள் எத்தனை பேர் என்று சர்வே எடுக்க வேண்டும். மாகாணம் பூராவும் நிலம் எவ்வளவு என்று சர்வே செய்யவேண்டும். உண்மையான உழவர்களுக்கே நிலம் கொடுப்பது என்று வந்தால், நிச்சயமாக போதிய நிலம் கிடைக்கும். அவர்களுக்கு ஒரு ஜோடி மாடு, ஏர், கலப்பை, விதை, எரு முதலியவை இருப்பவர்கள்போக இல்லாதவருக்கு சர்க்கார் கடனாக கொடுப்பது என்று வந்தால், நாட்டில் பலபல மடங்கு உணவு உற்பத்தியாகும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். விவசாய இலாகாவினால் விவசாயிகளுக்கு அளிக்கப்படுகிற சாதனங்கள் அத்தனையும் காலாகாலத்தில் நேரிடையாக விவசாயிகளுக்கு அளிக்கப்பட வேண்டும். அப்படி அளிப்பதன் மூலமாகத்தான் உற்பத்தி மேலும் பெருகும். தனக்கு உரிமை இருக்கிறது, சர்க்கார் வசதி அளிக்கிறது என்கிற உணர்ச்சி விவசாய மக்களுக்கு உண்டாகவேண்டும். அப்படிப்பட்ட ஊக்கமும், உணர்ச்சியும், தன்னம்பிக்கையும் விவசாய மக்களிடத்திலே உண்டாக வேண்டும் என்பதற்காகத்தான் உழுபவனுக்கு நிலம் சொந்தம் என்று மகாத்மா காந்தி அவர்கள் சொன்னார்கள். நிலம் உழுபவனுக்குச் சொந்தம் என்று சொல்லும்போது காந்திஜியின் கருத்துக்கு பலவிதமான வியாக்யானங்கள் செய்யப்படுகின்றன. அப்படி காந்தியின் கருத்தை தவறாக வியாக்யானம் செய்து அவருக்கு மாசு வருங்காலத்தில் ஏற்படச்செய்வது நல்லதல்ல. காரணம் இன்றைக்கு குறிப்பாக தஞ்சாவூர் ஜில்லாவில் இருக்கக்கூடிய அமைப்பையும், தேசம் பூராவும் இருக்கும் நிலைமையையும் பார்க்க வேண்டும். கடவுளைக் காட்டி, கடவுள் பெயரைச் சொல்லி ஏழை மக்கள் வஞ்சிக்கப்படுகிற நிலை ஏற்படும்போதுதான் கடவுளுக்கே இழிவு உண்டாக்கும் உணர்ச்சி வளர்ந்து வருகிறது. கடவுள் என்றால் அவனைப் பிச்சாண்டார் என்கிறோம். ஏழை பங்காளன் என்கிறோம். ஏழைகளிடத்தில் அன்பாக இருப்பது கடவுளிடத்தில் அன்பாக இருப்பதாகும் என்கிறார்கள். அது நம் சமயம். (அதை வளர்ப்பதற்காகத்தான்) இவ்விதமான கொள்கை அடிப்படையில் மடாலயங்கள், தேவாலயங்கள்—தேவஸ்தானங்கள்—எல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அவை எந்த அடிப்படையான கருத்தைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டன, அவற்றுக்கு எந்தக் காரணத்திற்காகப் பலர் சொத்து எழுதி வைத்தார்கள் என்பதே இப்போது மறந்துவிட்டது. அங்குள்ள தர்மகர்த்தாக்கள், நிர்வாகஸ்தர்கள்—தங்களுக்கும், தங்கள் உறவினர்களுக்கும் எப்போதும் நன்மை ஏற்படவேண்டும் என்கிற சுயநல நோக்கத்தோடு அவற்றைத்தன் உடமைப் பொருளாக்கி ராஜாங்கமாக்கிக்கொண்டு விட்டார்கள். தர்மத்தை, சமயத்தை சிலர் சொந்தமாக்கியதன் காரணமாகத்தான் இன்றைக்கு கடவுள் எதிர்ப்புக் கொள்கை நாட்டில் வேகமாகப் பரவி வந்திருக்கிறது என்பதை நாம் மறந்துவிட முடியாது. சமயம் புறக்கணிக்கப்பட்டிருக்கிறது. நீதி, நேர்மை, நியாயம் எல்லாம் அலட்சியம் செய்யப்பட்டு இருக்கிறது. இந்த நிலைமையை அப்படியே நீடிக்க விடுவதில் பிரயோசனமில்லை. உழுபவனுக்கு நிலம், உழவர்களுக்கு உரிமை என்கிற அடிப்படைக்கொள்கையை வகுத்து நல்லதொரு சீர்திருத்தம் செய்தால்தான் மகாத்மா காந்தியின் லட்சியத்தை ஈடேற்றியவர்களாவோம். அதற்கு மாறாக காந்தி கருத்துக்கு காரணம் காட்டி வேறு திசையில் சென்றால் கடவுளிடம் நம்பிக்கை குறைந்தது போல காந்தி பேரிலும் நம்பிக்கை குறையும். ஆகவே அதற்கு ஏற்ற முறையில் நல்லதொரு சட்டத்தைக் கொண்டு வந்து உழவனுக்கு உரிமையளித்து நிறைவேற்ற வேண்டுமென்று சொல்லிக் கொண்டு நான் முடித்துக் கொள்கிறேன்.

**Sri K. SATTANATHA KARAYALAR** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமது நாடு விவசாய நாடு. விவசாயத்தில் சம்பந்தப்பட்ட மக்கள் நூற்றுக்கு 75 சத விகிதம் அதிகமாக இருக்கிறார்கள். தொழில் துறை வருமானத்தைவிட விவசாய வருமானம்தான் நாட்டின் மொத்த

வருமானத்தில் அதிகப் பங்காக இருந்து வருகிறது. ஆனால் சாதாரணமாக விவசாயத் தொழிலாளர்கள் வருமானம் இந்த தொழிலாளர் வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்காக இருக்கிறது. ஆனால் விவசாயத் துறையில் உள்ள மக்களுக்கு ஊக்கம் இல்லை. அதனால் எந்த அளவு விவசாயம் பாதிக்கப்பட்டு வருகிறது என்பதற்கு நாம் வெளிநாட்டிலிருந்து எவ்வளவு ரூபாய்க்கு உணவு இறக்குமதி செய்கிறோம் என்பதைப் பார்த்தாலே தெரிந்துகொள்ள முடியும். குறிப்பாக கடந்த 11 ஆண்டுகளில் 1,600 கோடி ரூபாய்க்கு மேல் உணவு இறக்குமதிக்காகச் செலவு செய்திருக்கிறோம். கழிந்த ஆண்டில் மாத்திரம் 140 கோடிக்கு அதிகம் உணவு இறக்குமதிக்காகச் செலவு செய்திருக்கிறோம். தமிழ் நாட்டில் நிலம் இல்லாத கூலிகள் மாத்திரம் கிராமத்தில் வாழ்பவர்களில் நூற்றுக்கு 27 சத விகிதம் இருக்கிறார்கள். நம்முடைய நாட்டில் நிலம் இல்லாத ஏழ்மைதான் அதிகம் என்பது எல்லோருக்கும் தெரியும். நிலவுடைமையைப் பொருத்த மட்டில் ஆயிரம் ஏக்கருக்கு அதிகமாக உள்ளவர்கள் மிகவும் குறைவாகத்தான் இருக்கிறார்கள். ஆயிரம் ஏக்கருக்கு அதிகம் உள்ளவர்கள் 379 பேர்கள் என்றும், அவர்கள் கையில் முப்பத்தேழு கோடியே நான்கு லட்சம் ஏக்கரா நிலங்கள் உள்ளன என்றும், இதரர்களிடத்தில் இருப்பது முப்பத்தேழு கோடி ஐந்நூற்று நாற்பத்தெட்டு லட்சம்தான் என்றும் சர்க்கார் புள்ளி விவரம் கூறப்பட்டுள்ளது. ஐந்நூறு ஏக்கருக்கு அதிகமுள்ளவர் இதில் நான்கு பங்கும் நிலம் இதே அளவும் உள்ளது.

இதையே காரணமாகக் காட்டி, ஒரு சிலர் கையில் ஆயிரத்திற்கு அதிகமான ஏக்கரா நிலங்கள் இருப்பது மிக சொற்பமாக இருப்பதால் அந்த நிலங்களை எடுத்து வீதித்து விவசாய கூலிகளுக்கு பகிர்ந்து கொடுப்பதால் எந்தவிதமான லாபமும் இல்லையென்று சொல்லப் பட்டது. இது எவ்வளவு உண்மை? இன்று நாட்டிலே சுதந்திரத்திற்கு பிறகு நிலவுடைமையில் ஏற்பட்டிருக்கக்கூடிய மாறுதல்களை நாம் திட்டவட்டமாக பார்க்க வேண்டும். நம் நாட்டிலே நிலப் பிரபுத்துவ முறை நீண்ட நெடு நாட்களாக இருந்து வருகிறது. அது ஒழியவேண்டுமென்றும், நிலப்பிரபுத்துவ முறை அடியோடு போகவேண்டுமென்றும் நீண்ட நாட்களாக, சுதந்திர கோஷத்தை நாம் எழுப்பிய காலம் முதற்கொண்டு "உழுபவனுக்கே நிலம்" என்ற கோஷத்தையும் வைத்துள்ளோம். சுதந்திரத்திற்கு பின் இந்த 11 ஆண்டுகளாக நிலவுடைமையில் குறிப்பிட்ட மாறுதல்கள் ஏற்பட்டிருப்பதை நாம் பார்க்கிறோம். நிலப்பிரபுக்கள் என்று சொல்லகூடியவர்களில் சிலர் நிலத்தோடு நேரடியான தொடர்பு வைத்துக்கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஒரு சில விவசாய முதலாளிகள், நிலத்தோடு ஓரளவு தொடர்பு வைத்துக்கொண்டு விஞ்ஞான அறிவையும் பயன்படுத்திக்கொண்டு, சர்க்காரிடமிருந்து,, கிடைக்கும் சலுகைகளையும், பயன்படுத்திக்கொண்டு, டிராக்டர்கள் முதலியவைகளை வாங்கி நல்ல முறையில் உற்பத்தி செய்கிறார்கள் என்பது வாஸ்தவமே. இந்த முறையில் வேலை செய்பவர்கள் நம் நாட்டில் எத்தனை சதவிகிதம் பேர்கள் இருக்கிறார்கள் என்று பார்த்தால், நில சென்ஸஸ் ரிப்போர்ட்டில் உள்ள புள்ளிவிவரங்களை வைத்துக்கொண்டு பார்த்தால், தமிழகத்தில் இருக்கக்கூடிய பெருவாரி நிலத்தில் 5 சத விகிதத்துக்கு குறைவாகத்தான் நேரடி விவசாயம் செய்யக்கூடியவர்கள், **(Personal cultivation)** செய்யக்கூடியவர்கள் இருக்கிறார்கள். அப்படியானால் ஆயிரத்தில் ஒன்று இந்த நிலப் பிரபுக்கள் இன்று நில முதலாளிகளாக புதிதாக மாறிக்கொண்டுவருகிறார்கள். அந்த நில முதலாளிகளுக்காக உள்ள வாதத்தைத்தான் இந்த சபையில் கொஞ்சம் முன் கேட்டோம். இவர்களை காரணமாக காட்டி, 1 சத விகிதத்திற்கும் குறைவாக உள்ளவர்களை கராணம் காட்டி நிலவரம்பை தடுக்கப் பார்க்கிறார்கள்; 99 சதவிகிதம் நிலவுடைமை யார் கையில் இருக்கின்றது என்று பார்க்காமல், அந்த 1 சத விகித ஆட்கள்தான் உற்பத்தியைப் பெருக்க துணையாக இருக்கிறார்கள் என்று கூறி பாடுபடக் கூடிய விவசாயக் கூலிகளின் நிலையை உயர்த்தாமலிருக்கிறார்கள். ஒரு சிலர் சுதந்திர கிளர்ச்சி செய்தபோது நம்மிடம் கேட்டார்கள், சில கேள்விகள். அன்று சிலர் சொன்னார்கள், "சுதந்திரம் வந்துவிட்டால் எல்லாம்

30th October 1958] [Sri K. Sattanatha Karayalar]

வந்துவிடுமா ? ” என்று. “ வெள்ளையன் வெளியேறி, கருப்பர் ஆட்சிக்கு வந்தால் நாட்டில் சுபிட்சம் நிலவுமா ? ” என்று சிலர் கேட்டார்கள். அதேபோல்தான் இன்று கேட்கப்படுகிறது, “ நிலத்தை பகிர்ந்து கொடுத்தால் நாட்டில் உற்பத்தி பெருகிவிடுமா ? ” என்று. சுதந்திரம் கிடைத்து 11 ஆண்டுகளுக்குப் பிறகு எப்படி நாம் சிறுகச் சிறுக முன்னேறிக் கொண்டிருக்கிறோமோ அதேபோல்தான் உபரியாக உள்ள நிலங்களை வீதித்துக் கொடுத்துவிட்டால் உடனடியாக சுபீட்சம் வந்துவிடும் என்று யாரும் நினைக்கவில்லை, சொல்லவுமில்லை. அதை முதல்படியாக வைத்துக் கொண்டு பிறகு மெல்ல மெல்ல திட்டவட்டமாக உணவு உற்பத்தியை பெருக்க வேண்டும். ஐந்து சத விகிதம் நிலந்தான் உபரியாக வரலாம். ஆனால் அதைக் கொடுப்பதின மூலம், விவசாயக் கூலிகளை நாம் உற்சாகப் படுத்தலாம். நாம் உழைப்பதன் பலன் நமக்கே கிடைக்கிறது, என்று இடைத் தட்டுக்காரர்கள் யாரும் அதை தட்டிக்கொண்டு போகவில்லை என்ற நம்பிக்கை அவர்களுக்கு வந்தால் அவர்கள் மேலும் உற்சாகமாக வேலை செய்து உற்பத்தியை கண்டிப்பாக அதிகப்படுத்துவார்கள். இன்றையதினம் ஒரு சிலருக்கு கிடைக்கக்கூடிய வசதியைப் போன்று அவர்களுக்கும் கடன் உதவி அவசியம் அளிக்கப்படவேண்டும். ஒரு வரம்பிற்கு அதிகமாகவுள்ள நிலங்களை உடனடியாக பகிர்ந்து ஆளுக்கு கால் அல்லது அரை எக்கர் வீதம் கொடுத்துவிடவேண்டுமென்ற எண்ணம் யாருக்கும் இருக்க முடியாது. எந்த முறையில் மீதியுள்ளதை பகிர்ந்து கொடுக்க வேண்டுமென்பது அடுத்தபடி ஆகும். முதலாவதாக, ஒருவர் இவ்வளவு நிலம் தான் வைத்துக்கொள்ளலாம் என்று வரம்பு கட்ட வேண்டும். உழைக்கக் கூடிய விவசாயக் கூலிகளுக்கும், சாகுபடியாளருக்கும் அவர்களது உழைப்பின் முழுப் பலனும் கிடைக்கவேண்டுமென்றுதான் அதற்கு முதல்படியாக உச்சவரம்பு கட்டவேண்டுமென்று கோரப்படுகிறது. அதில்லாமல், அப்படிச் செய்தால் உணவு உற்பத்தியே பாதித்து விடும் என்று சொல்வது முன்னுக்குப் பின் முரணானதாக இருக்கிறது. முதல் வகுப்பிற்கு ஒரு பையன் வரும்போதே இவன் எப்படி கடைசி வகுப்பில் படித்து தேருவான் என்று கேட்பது மாதிரியிருக்கிறது, இது. ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே ஒன்றிரண்டு குறிப்பிட்ட முதலாளிகளை சுட்டிக் காட்டி அவர்கள் ஆயிரக் கணக்கான எக்கர் நிலம் வைத்திருப்பதால்தான் உற்பத்தி அதிகமாகிறது, அவர்களால்தான் ட்ராக்டர்கள் முதலியவைகளை உபயோகப்படுத்த முடியும், அவர்களால்தான் விஞ்ஞான முறையில், உற்பத்தி செய்து நல்லமுறையில் உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று சொல்லப்படுகிறது. அதை வைத்துக்கொண்டு பார்த்தால், இன்று சுதந்திரம் கிடைத்து 11 வருடங்களாகியும் எந்த அளவு அவர்களால் உற்பத்தியைப் பெருக்க முடிந்திருக்கிறது என்று பார்க்க வேண்டும். விவசாயத் துறையில் அவர்களை ஊக்குவிக்க சர்க்கார் எல்லாவிதத்திலும் முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியிருந்தும் எந்தளவு அவை இன்று பயன்படுத்தப்பட்டிருக்கிறது, எந்தளவு உற்பத்தி அதனால் பெருகியிருக்கிறது என்று பார்த்தால், இன்றும் மழையை நம்பியிருக்கும் நிலையில்தான் நம் நாட்டில் விவசாயம் இன்று இருக்கிறது. மேலும் சர்க்கார் உதவியை பயன்படுத்தியவர் இந்த ஒரு சில நில முதலாளிகள் தான். ஆகவே, முதலில் செய்யவேண்டியது, நம் நாட்டில் வாழக்கூடிய 75 சத விகிதம் விவ்சாயிகளிடையே தங்கள் உழைப்பு தங்களுக்கே கிடைக்கிறது என்ற அடிப்படை உணர்ச்சியை உண்டுபண்ண இது முதல் படியாக அமையச் செய்ய வேண்டும். **Fragmentation of land holdings** ஏற்பட்டால் நிலம் சிறிது சிறிதாகப் போய்விடுமே, அப்படி போய் விட்டால் அது “ **Uneconomic** ” ஆக இருக்குமே, பொருளாதார ரீதியில் போதுமான அளவு நிலம் இருக்காதே என்று குறிப்பிடப் பட்டது. “ **Fragmentation of lands** ” வர வேண்டுமென்று யாரும் விரும்ப முடியாது. ஓரளவு உபரியாக உள்ள நிலங்களை பிரித்துக் கொடுப்பதற்குப் பதிலாக, கூட்டாக ஒரு பண்ணை வைத்து எப்படி வேலை செய்யலாம் என்பதைப்பற்றி ஆராய வேண்டும். நம் மாகாணத்தைப் பொறுத்தமட்டில் இப்பொழுது ஐந்து அல்லது ஆறு கோவாப்பரேடிவ் சொஸைட்டிகள் கூட்டுறவு முறையில் இந்த முறையில் செயலாற்றி வருகின்றன. நில [சொந்தக்காரர்களால் நடத்தப்படுவன கோயம்புத்தூரில்

[Sri K. Sattanatha Karayalar] [30th October 1958

ஒன்றிரண்டு கோவாப்பரேடிவ் சொசைட்டிகள் இருக்கின்றன. சாகுபடியாளரைப் பொறுத்த வரையில் ஒன்றிரண்டு சொசைட்டிகள் இந்த மாகாணத்தின் இதர பகுதிகளில் இருக்கின்றன. இந்தத் துறையில் இவர்கள் குறிப்பிடத்தக்க நல்ல முறையில் வேலே செய்து வருகிருர்கள் என்று கோவாப்பரேட்டிவ் டிப்பார்ட்மெண்ட் ரிப்போர்ட்டிலிருந்து தெரிய வருகிறது. அவர்களுக்கு மிக முக்கியமாக தேவைப்படுவது, கடன் உதவியாகும். ரூரல் க்ரெடிட் சர்வேயிலிருந்து வரும் ரிப்போர்ட்களைப் பார்த்தால் கடன் உதவிதான் மிக முக்கியமாக அவர்களுக்கு தேவையாக இருக்கிறது என்பதைப் பார்க்கலாம். சர்க்காரால் கடன் உதவியும் கொடுக்கப்படுகிறது. ட்ராக்டர் முதலியவைகள் வாங்க கடன் உதவி அளிக்கப்படுகிறது. இவைகளே யார் எந்த முறையில் பயன்படுத்துகிருர்கள் என்று துருவிப் பார்ப்போமானுல் இந்த 1 சத விகித நிலப்பிரபுக்கள்தான் நில முதலாளிகளாக மாறி தாங்கள் ஏதோ தேசத்திற்கு அவசியமான சேவை செய்யும் பாவனேயில் இந்த நாட்டில் உலாவி வருகிருர்கள். இது அந்தக் காலத்தில் வெள்ளேக்காரன், "Viceroy's Executive Council" வில், ஒன்றிரண்டு இந்தியர்களே நியமித்துவிட்டு அதை காட்டி விட்டு, அதைப் பார்த்துவிட்டு இந்தியர்களும் ஆட்சிப் பொறுப்பில் இருக்கிருர்கள் என்று சந்தோஷப்பட்டுக்கொள்வோம் என்று நினேத்தார்கள். அதேபோன்று, விவசாயிகளேத் திருப்திபடுத்தக்கூடிய முறையில் விவசாய உற்பத்தியைப் பெருக்க இவர்கள் மிகவும் பயன்படுகிருர்கள் என்று ஒரு சிலரைக் காட்டி விவசாயப் பெருங்குடி மக்களே ஏமாற்ற முடியாது. இன்று நம் நாட்டிலுள்ள நிலம் இல்லாத தொழிலாளர்கள் அதிருப்தியோடு இருக்கிருர்கள். தொழில் துறையில் வேலே செய்பவனுக்குக் கிடைப்பதில் ஐந்தில் ஒரு பங்குகூட கிடைப்பதில்லே விவசாயத் துறையில் வேலே செய்பவனுக்கு. ஆக, எந்தளவு அவர்களது வருவாய் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் பரிசீலித்துப் பார்க்கக் கடமைப்பட்டுள்ளோம். உபரியாக உள்ள நிலத்தை கோவாப்ரேட்டிவ் முறையில் பயிரிட வேண்டுமென்று சொல்லும் போது, அது "Voluntary" ஆக செயலாற்றக் கூடிய முறையில் வர வேண்டும். விநேபாஜி அவர்கள் சொல்வதற்கும், இந்த தீர்மானத்தின் உள்நோக்கத்திற்கும் அதிக வித்தியாசம் இருக்கமுடியாது. சட்டமூலம் இதை அமுலுக்கு கொண்டு வந்து செயலாற்ற வேண்டுமென்று நாங்கள் கோருகிருேம். அதுதான் விநேபாஜி அவர்கள் சொல்வதற்கும், இந்த தீர்மானத்திற்கும் உள்ள வித்தியாசம். திட்டக் கமிஷனும் ஏற்கெனவே சிபார்சு செய்திருக்கக்கூடிய அடிப்படையில், "diversification of agriculture economy" என்றதொரு அடிப்படையில், அதாவது இன்று நிலப் பிரபுத்துவத்தில் இருக்கக்கூடிய பணம் தொழில் துறையில் வர வேண்டுமென்ற அடிப்படையில் சிபார்சு செய்திருக்கிருர்கள். நேரு உள்பட ப்ளானிங் கமிஷன் சிபார்சு செய்திருப்பதும், நிலத்தில் உள்ள மூல தனத்தை தொழில் துறையில் மாற்றி, கட்டிக் கிடக்கிற பணத்தை தொழில் துறையில் செலவழிக்க வேண்டுமென்ற அடிப்படையில்தான் ப்ளானிங் கமிஷனும் சிபார்சு செய்திருக்கிருர்கள்.

நமது தமிழகத்தில் உள்ளவர்களின் 70 சத விகிதம் பேர்களும் விவசாயிகள்தான். அதிலும் சிறு நிலச்சுவாந்தார்கள்தான் அதில் பெரிய பங்கு வகிக்கிருர்கள். அவர்களது வருங்கால வாழ்வையும், தாழ்வையும் ஒட்டித்தான் நம் நாட்டின் உணவு உற்பத்தியின் வாழ்வும், தாழ்வும் இருக்கிறது. அதை மறைத்து வைத்துக் கொண்டு, ஒரு சில நிலப்பிரபுக்களின் உற்சாகத்தால்தான் நம் நாட்டில் உணவு உற்பத்தி பெருகுகிறது என்ற வாதம் மீண்டும் மீண்டும் இந்த சபையில் சொல்லப்பட்டது. சாதாரணமாக தொழிலாளிக்கு உற்சாகம் மட்டும் இருந்தால் போதாது, வாய்ப்பும் வசதிகளும் தேவை என்று சொல்லப்பட்டது. இன்றைக்கு இருக்கின்ற விவசாயிக்கு சாதாரணமாக இருக்கவேண்டிய உற்சாகம் கூட இல்லாமல் அவர்களே நிரந்தர அடிமையாக வைத்துக் கொண்டிருக்கிருர்கள் நிலச்சுவான்தார்கள். அவர்கள் இன்றும் சுரண்டப்படுகிருர்கள். இதிலிருந்து அவர்கள் விடுபடும் வரையிலும் அவர்கள் உற்சாகத்துடன் பாடுபட முடியாது. ஆகவே, முதல்படியாக இதில் செய்யவேண்டியது என்னவென்ருல் நிலத்திற்கு உச்சவரம்பு கட்டி, நிலமில்லாதவர்களுக்கும், அதிகப்படியாக நிலம் வைத்திருப்பவர்களுக்கும் வித்தியாச

30th October 1958] [Sri K. Sattanatha Karayalar]

மில்லாத முறையில், நிலமில்லாதவர்கள் நிலத்தை வைத்துக்கொண் டிருப்பவர்களின் பேரில் பொறாமைப்படக்கூடாத அளவுக்கு உச்சவரம்பை நிர்ணயிக்கவேண்டும். தொழில் துறையில் முன்னேறுவதற்குக்கூட இந்த உச்சவரம்பு கட்டுவது மிகவும் அவசியமாக இருக்கிறது. நிலத்தை சிறிது சிறிதாக ஆக்கிவிட்டால் உற்பத்தி பாதிக்கப்படும் என்று சொல்லப்பட்டது. அதே நேரத்தில் கோவை பகுதியில் இரண்டு மூன்று ஏக்கர்கள் வைத் திருப்பவர்கள்தான் உற்பத்தியை அதிகமாக பெருக்குகிறார்கள் என்றும் சொல்லப்பட்டது. இப்படி முன்னுக்குப்பின் முரணாக இருக்கிறது. நிலப் பிரச்னையை அணுகும்போது பெரிய தயாரிப்புகள் எடுக்கவேண்டும் என்று சொன்னார்கள். "நான் கேட்பது, இவ்வளவு காலமாக, சுதந்திரம் வந்து பதினோரு ஆண்டுகளாக தயாரிப்புகள் ஏன் எடுத்திருக்கக்கூடாது?" என்று கேட்கிறேன். இவ்வளவு காலமாக 1,200 கோடி ரூபாய் உணவுக்காக வெளி நாட்டில் செலவு செய்யப்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும் ஏன் இவ்வளவு காலமாக தயாரிப்புகள் எடுக்க முடியவில்லை என்று தெரிய வில்லை. ஆகவே, உடனடியாக இவ்விஷயத்தில் செயலில் இறங்குவது மிக அவசியம். உச்சவரம்பு கட்டி வருகின்ற நிலங்களை எல்லாம் கூட்டுறவு முறையிலோ அல்லது பஞ்சாயத்து முறையிலோ பயன்படுத்தி விவசாயம் செய்வோமானால் உற்பத்தி அதிகரிப்பதற்கு ஏதுவாக இருக்கும். ஆகவே இந்த முறையில் செயலாற்றுவதற்கு ஒரு திட்டம் வகுக்கவேண்டும். அதற்கு சர்வ கட்சிகளையும் கொண்ட ஒரு கமிட்டி அமைப்பது சால சிறந்த தாக இருக்கும். பல காரியங்களுக்கும், ஸ்தல ஸ்தாபன காரியங்களுக்கும், கல்வி சம்பந்தப்பட்ட காரியங்களுக்கும் கமிட்டிகளை ஏற்படுத்துகிற இந்த அரசாங்கம் இதற்கு மாத்திரம் கமிட்டி அமைப்பதற்கு முன் வராததின் காரணம் என்ன என்பது தான் விளங்கவில்லை. ஒருவேளை மிக முக்கிய மான சிபார்சுகளை செய்து அதை நடைமுறைக்கு கொண்டு வரவேண்டும் என்று கமிட்டி தீர்மானித்தால் அதன்படி நடப்பதற்கு பல சிக்கல்கள் ஏற்படும், அல்லது ஆளும் கட்சியிலேயே சங்கடங்கள் வந்துவிடுமோ என்று நினைத்து தயங்குகிறார்களோ என்னவோ தெரியவில்லை. ஆகவே, இந்த எண்ணத்தை கைவிட்டுவிட்டு நிலப்பிரச்னையை ஒரு தேசப்பிரச்னையாக எடுத்துக்கொண்டு, இதை கட்சிப்பிரச்னையாக பார்க்காமல் தேசத்தின் வருங் காலத்தை நிர்ணயிக்கக்கூடிய ஒரு பிரச்னையாக கருதி, இந்த நாட்டில் ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லோரும் ஒன்று என்ற நிலைமை ஏற்படுத்துவதின் முதல்படியாக உச்சவரம்பை கொண்டு வருவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* SRIMATHI T.N. ANANDANAYAKI: Sir, point of information. இங்கு பேசுகின்ற அங்கத்தினர்களில் பலர், நிலத்திற்கு உச்சவரம்பு கட்டவேண்டும் என்கிற விஷயத்தைப்பற்றி பேசுகிற பொழுது, நிலத்திற்கு உச்சவரம்பு கட்டிவிட்டு, அதன் பின்னால் மிஞ்சுகின்ற நிலங்களை கூட்டுறவு முறையிலோ அல்லது, பஞ்சாயத்து முறையிலோ அரசாங்கம் ஏற்றெடுத்து நடத்தவேண் டும் என்று குறிப்பிட்டார்கள். ஆனால் ஒரு விஷயத்தை அவர்கள் மறந்து விட்டார்கள். நிலத்திற்கு உச்சவரம்பு கட்டப்படும்போது நிலங்களின் விலை குறைந்துவிடலாம். அப்போது நிலம் குறைவாக வைத்துக்கொண்டிருப் பவர்கள் அதை விலைக்கு வாங்கி தங்கள் வரம்புக்கு ஏற்ப வைத்துக் கொள்வார்கள். ஆகவே மிகுதி நிலம் வருகின்ற பிரச்னையே வருவ தில்லை. மேலும் இப்போது நாட்டிலிருக்கின்ற நிலங்களை எல்லாம் பகிர்ந்து கொடுத்தாலும் கூட ஒரு நபருக்கு ஒரு ஏக்கர் அல்லது ஒன்றரை ஏக்கர் தான் வரும். ஆகவே, மிகுதி வருகின்ற பிரச்னையோ அல்லது கூட்டுறவு முறையில் நடத்தவேண்டுமா அல்லது பஞ்சாயத்து முறையில் நடத்தவேண்டுமா என்கிற பிரச்னையேவராது. அப்படியிருக்கும்போது மீதி வருகின்ற நிலங்களை கூட்டுறவு முறையிலோ அல்லது பஞ்சாயத்து முறையிலோ நடத்த வேண்டும் என்று சொல்லுவது அதிக சிக்கலையும் குழப்பத்தையும் தான் ஏற்படுத்தும். அதோடு இந்த யோசனை எப்படி வந்தது என்று புரியவில்லை. ஆகவே, அதை விளக்கினால் நல்லது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

[30th October 1958

SRI K. ANBAZHAGAN : **On a point of order.** இதற்குப் பதில் இந்த சபையில் இருக்கின்ற எந்த அங்கத்தினரும் சொல்லலாமா, அல்லது சம்பந்தப்பட்ட அமைச்சர் தான் பதில் சொல்லவேண்டுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**DEPUTY SPEAKER : The Hon. Minister will reply to that Mr. Selvarajan will speak now.**

* SRI M. S. SELVARAJAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பிரஸ்தாபத்தில் இருக்கும் தீர்மானம் எதிர்கட்சி அங்கத்தினர் ஒருவரால், நிலங்களுக்கு உச்சவரம்பு நிர்ணயிக்கவேண்டும் என்றும், மேற்பட்ட நிலங் களை நிலமில்லாத ஏழைகளுக்கு பங்கிட்டு கொடுக்கவேண்டும் என்பது. இந்த தீர்மானத்தின் மீது பேசிய ஸ்ரீ அண்ணாத்துரை அவர்கள் இந்த தீர்மானத்திற்கே விரோதமான முறையில் சில கருத்துக்களை தெரிவித்தார் கள். நிலத்திற்கு உச்சவரம்பு கட்டவேண்டியது அவசியம், அவ்விதம் நிலத்திற்கு உச்சவரம்பு கட்டியபின் மீதியுள்ள நிலங்களை அரசாங்கம் எடுத்துக் கொள்ளவேண்டும், அவ்விதம் பஞ்சாயத்து யூனியனுக்கு கொடுத்துவிட வேண்டும் என்கிற ஒரு புதிய கருத்தை அவர்கள் தெரிவித் தார்கள். மற்றொரு தரப்பிலிருந்து ஒருவர் பேசினபோது நாட்டிலிருக் கின்ற தரிசு நிலங்களை எல்லாம் பங்கிட்டு கொடுக்க வேண்டும் என்றும் தெரிவித்தார்கள். இதற்கும் இந்த தீர்மானத்திற்கும் சம்பந்தமில்லை என்பது தெளிவு. இப்போது பிரஸ்தாபத்தில் இருக்கக்கூடிய தீர்மானத் தைப் பொறுத்த வரையில் நிலத்திற்கு உச்சவரம்பு கட்ட வேண்டும் என்பது. ஆனால் இது நமது ராஜ்ய சர்க்காரால் செய்ய முடியுமா என்று நாம் பார்க்கவேண்டியிருக்கிறது. இந்த தேசம் சில விஷயங்களில் ஒன்றோடொன்று பிணைத்துக்கொண்டிருக்கிறது. நாம் எல்லோரும் இந்த தேசத்தில் கூட்டுறவு முறையில் ஒரு க்ஷேம நல அரசாங்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்கின்ற லக்ஷியத்தோடு வேலை செய்வதற்கு சட்டரீதியாக இன் னொரு இடத்தில் பிணைத்துக்கொண்டிருக்கிறோம். இந்த லட்சியத்தை ஈடேற்றுவதற்கு நமக்கு சோஷியலிஸ பாதையில் வேலை செய்யவேண்டும் என்று நாம் தீர்மானித்திருக்கிறோம். செயலாற்ற திட்டக் கமிஷன் வழி சொல்லியிருக்கிறது. இதிலிருந்து நிலத்திற்கு உச்சவரம்பு கட்டுவதற்கு மாத்திரம் நாம் தனியாக பிரிந்து கொள்ள முடியாது. ஆகவே இந்த தீர்மானத்தின் மூலம் இதை நாம் வற்புறுத்த வேண்டிய அவசியமே இல்லை. சோஷியலிஸ அடிப்படையில் ஒரு க்ஷேம நல அரசாங்கத்தை அமைக்கவேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டு வேலை செய்துவருகிற நாம் இது ஈடேறும் வரையிலும் இந்த ராஜ்ய அரசாங்கம் தங்களை விடுவித்துக்கொள்ள முடியாது. இதில் கருத்து வித்தியாசங்கள் இருப்பது உண்மைதான். பல்வேறு தேசங்களில் இருக்கின்ற நிலைமையை எடுத்துக் கொண்டால் சிந்தனை ரீதியாக இல்லாமல் நடைமுறையில் நிலவரம்பு கட்டாமலே பரீட்சார்த்தமாக இந்த பிரச்னையை தீர்த்துக்கொண்டிருக்கிறது அமெரிக்கா போன்ற தேசங்கள். இதல்லாமல் தங்களுடைய இரும்பு கரத் தின் மூலமாகவும், பயங்கரமான கட்டளைகளின் மூலமாகவும் அரசாங்கத் திற்கே அத்தனை நிலங்களையும் சொந்தமாக வைத்துக்கொண்டு விவசாயம் செய்து வருகிறார்கள் சிற்சில தேசங்களில். நாம் இதற்கு தனியாக ஒரு வழியை அமைத்து இருக்கிறோம். கூட்டுறவு முறையில் ஒரு பக்கம் வேலை செய்யவேண்டும், இன்னொரு பக்கம் சட்ட ரீதியாக இந்த முறைகளை கொண்டு வரவேண்டும் என்று உழைத்துக் கொண்டிருக்கிறோம். அந்த நிலையில் இதுபோன்ற தீர்மானம் அவசியமா என்பதை நாம் பார்க்க வேண்டும். இன்றைக்கு நமக்கு சுயதேவை பூர்த்தி வாய்ப்பு இல்லாமல் இருந்து கொண்டிருக்கிறது. அந்த வாய்ப்பை எப்படி பெறுவது, எந்த அளவுக்கு உணவு உற்பத்தியை பெருக்குவது என்று ஆலோசித்துக் கொண்டிருக்கும இந்த நேரத்தில், ஒரு பக்கத்தில் அதளபாதாளமாகவும் இன்னொரு பக்கத்தில் மேடாகவும் பொருளாதார ஏற்றத் தாழ்வு இருக் கின்ற நேரத்தில், இவைகளை எல்லாம் ஒரே நிரப்பாக கொண்டு வரவேண் டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டு வேலை செய்து கொண்டிருக்கிறோம். இரண்டு விதக் குறிக்கோள் நமக்கு இருக்கின்றன. ஒன்று எல்லோருக்கும்

